

# கேரக்டரோ கேரக்டர்!

கடுகு

ஓவியங்கள்: கோபுலு

# கேரக்டரோ கேரக்டர்!



கடுகு

நந்தினி பதிப்பகம்
சென்னை 600 020

கேரக்டரோ கேரக்டர்!

-- கடுகு

நகைச்சுவை கட்டுரைகள்



முதல் பதிப்பு: மே, 2003

நந்தினி பதிப்பகம்
12/6 வெங்கடேஸ்வரா நகர், முதல் தெரு,
அடையார், சென்னை 600 020



சைஸ்: 12.5 X 18 செ.மீ
அச்சளவு: 10 பாயிண்ட்
பக்கங்கள்: 16+128=144



Layout and Typeset by the author
அட்டை ஓவியம்: 'அரஸ்'
உள் பக்க ஓவியங்கள் : கோபுலு

விலை : ரூ. 40

# சமர்ப்பணம்

ஐம்பது வருட நண்பர்

ஓவிய மேதை

## கோபுலு

அவர்களுக்கு.

## மூன்று பேர்

என் எழுத்துப் பணிக்கு வழி வகுத்து வளமடையச் செய்தவர்கள் மூவர்.



தமிழ் எழுத்துலகிலும் பத்திரிகை உலகிலும் பல மைல்கல்களைப் பதித்தவர் அமரர் கல்கி அவர்கள்.

அவரை ஆதர்சமாகக் கொண்டு தங்கள் எழுத்துப் பணியை செய்துள்ளவர்களில் முக்கியமானவர் ஆசிரியர் சாவி அவர்கள். எழுத்தும் பத்திரிகையுமே தனது முழுமூச்சாகக் கருதியவர். இல்லாவிட்டால் நிதி வசதி துளிக்கூட இல்லாத அவர் தனது 27-வது வயதில் 'வெள்ளிமணி' என்ற வார இதழை ஆரம்பித்து வெற்றி நடை போட்டிருப்பாரா? (துரதிர்ஷ்டம், தீபாவளி மலர் போட்டு அகலக் காலை வைத்ததால் நஷ்டம் ஏற்பட்டு பத்திரிகையை நிறுத்த வேண்டியதாயிற்று!)

'இங்கே போயிருக்கிறீர்களா', 'இவர்கள் சந்தித்தால்', 'கேரக்டர்' என்று பல சுவையான சிறப்பு அம்சங்களை பத்திரிகையில் செய்தவர். நகைச்சுவை, அவர் நாவிலும் பே'நா'விலும் என்றும் குடி இருந்தது.

சராசரிக்கும் அதிகமாகவே வாழ்க்கையில் சோகங்களைக் கண்டவர். எந்த சோகமும் அவரை

இடிந்துப் போய்விடச் செய்யவில்லை. அந்த சோகங்களை எல்லாம் தனது நகைச்சுவை உணர்வு என்னும் போர்வையால் போர்த்திவிட்டு, நிலை குலையாமல் இருந்துவிட்டார்.



அவரது 'கேரக்டர்' கட்டுரைகளைப் படித்து ரசித்த எனக்கு, சிறுவனாக இருந்த போதே அது மாதிரி எழுதவேண்டும் என்ற ஆசை ஏற்பட்டது. ஆசை இருந்தது; ஆகவே திறமையும் இருக்கிறது என்று நானாகவே கருதிக் கொண்டு விட்டேன்!

பின்னால் சாவி அவர்களின் பொறுப்பில் 'தினமணி கதிர்' இருந்த போது கிட்டத்தட்ட அதன் ஆஸ்தான எழுத்தாளனாக நான் ஆனேன். என் எழுத்தின் மேல் அவருக்கு அபாரமான (தவறான?) மோகம் இருந்தது. அப்போது எழுதியவை தான் இந்த 'கேரக்டர்' கட்டுரைகள். அதாவது சாவி அவர்களிடமே ஓ. கே. வாங்கிய கட்டுரைகள் இவை! இதுவே எனக்குக் கிடைத்த மிகப் பெரிய பாராட்டு. அதை என்றும் போற்றிப் பாதுகாத்து வருகிறேன்.

'என் நண்பர்கள்' என்ற தலைப்பில் பல் வேறு பிரமுகர்களிடம் கட்டுரையை வாங்கி குமுதம் இதழில் பிரசுரித்து வந்தார்கள். சாவி அவர்கள் எழுதிய கட்டுரையில், தமது நண்பர்களில் ஒருவராக என்னையும் குறிப்பிட்டிருந்தார் என்பதைப் பெருமிதத்துடன் குறிப்பிட விரும்புகிறேன்.

டெல்லியிலிருந்து சென்னை வரும்போதெல்லாம்



குமுதம் ஆசிரியர் எஸ். ஏ. பி. அவர்களைச் சந்திப்பேன். அவரை சந்தித்த ஒரு சில எழுத்தாளர்களில் நானும் ஒருவன் என்பதில் எனக்குத் தனி கௌரவம். அவர் எனக்கு அளித்த ஊக்கத்திற்கும் வாய்ப்புகளுக்கும் அளவே இல்லை!

பேராசிரியர் கல்கி, எழுதவேண்டும் என்ற ஆர்வத்திற்கு விதை போட்டார். குமுதம் ஆசிரியர் எஸ். ஏ. பி. என்னும் மாமனிதர் அதற்கு உரமிட்டு மரமாக்கினார். ஆசிரியர் சாவியோ அந்த மரம், கப்பும் கிளையுமாக பரவச் செய்தார். இது எனக்குக் கிடைத்த பாக்கியம். இம்மூவருக்கும் என் பணிவான வணக்கங்களையும் நெஞ்சார்ந்த அஞ்சலியையும் தெரிவித்துக் கொள்கிறேன்.

இந்த கேரக்டர் கட்டுரைகளுக்கு அற்புதமாக ஓவியம் வரைந்து உயிரூட்டிய, ஐம்பது வருட நண்பர் கோபுலு அவர்களுக்கு என் நன்றியை தெரிவித்துக் கொள்கிறேன்.

* * * * *

*என் நினைவிலும் வாழ்விலும் எனக்குத் தெய்வமாக விளங்கும் அமரர் கல்கி அவர்களின் பொற்பாத கமலங்களை, சிரத்தால் வணங்கி, கண்களில் ஒற்றிக்கொண்டு இப்புத்தகத்தை சமர்ப்பிக்கிறேன். அவருடைய ஆசி எனக்கு என்றும் கிடைப்பதாக!*

— கடுகு

## என்னுரை- 1

நான் 1962ல் டில்லி சென்றேன். சுமார் 40 வருடங்கள் அங்கு குப்பை கொட்டினேன். டில்லி போனதால் எனக்கு பல இனிய அனுபவங்கள் கிடைத்தன. என் உலகம் சற்று விரிந்து பரந்தது. எல்லாம் சற்று புதிதாகவும் வியப்பூட்டுவதாகவும் தென்பட்டன!

டில்லியில் முதன் முதலில் தென்பட்ட பல வித்தியாசமான விஷயங்களை "அரே டில்லிவாலா" என்ற தலைப்பில் 'குமுதம்' இதழுக்கு அனுப்பினேன். சில நாட்கள் கழித்து குமுதத்திலிருந்து 'செக்' வந்தது. நாலு நாள் கழித்துதான் 'குமுதம்' இதழ் டில்லிக்கு வந்தது. அடுத்த 6, 7 வருடங்கள், என் கட்டுரை இல்லாத குமுதமே இல்லை! சில இதழ்களில் இரண்டு, மூன்று கட்டுரைகள் கூட வந்ததால், ஆசிரியர் குழுவே சில பல புனைப் பெயர்களை எனக்குச் சூட்டி விட்டது. ரா.கி. ரங்கராஜன், பாக்கியம் ராமசாமி, புனிதன் ஆகிய மும்மூர்த்திகள் பல கடிதங்கள் எழுதி எனக்கு ஊக்கம் அளித்தனர். ஆரம்ப காலத்தில் ஒரு சில கட்டுரைகளை அவர்கள் எடிட் செய்திருந்தார்கள். அவர்கள் எடிட் செய்ததை எழுத்து எழுத்தாக ஊன்றிப் பார்த்து பல உத்திகளையும் பாடங்களையும் கற்றுக் கொண்டேன். அவ்வகையில் எஸ்.ஏ.பி. அவர்களும் இம்மும்மூர்த்திகளும் என்னை செதுக்கியவர்கள். (இன்னும் நன்றாகச் செதுக்கி இருக்கலாம், என்று நீங்கள் அலுத்துக் கொள்வது கேட்கிறது!)

குமுதம் இதழில் எழுதியதால் எனக்குப் பல அரிய அனுபங்கள் கிடைத்தன. ஜனாதிபதி டாக்டர் ராதாகிருஷ்ணன் அளித்த குடியரசு தின தேநீர் விருந்தில் கலந்து கொள்ள முடிந்தது. ஜனாதிபதி பக்ருதின் அகமதுவுடன் சமமாக ஒரு சோபாவில் உட்கார்ந்து பேசும் வாய்ப்பு கிடைத்தது. பிரதமர் லால்பகதூர் சாஸ்திரியை சந்தித்துப் பேச முடிந்தது. ஜவஹர்லால் நேருவின் அறைக்குள் சென்று, (அவர் இல்லாத சமயம்!) சில கணம் மெய் மறந்து நின்ற அரிய அனுபவம் கிடைத்தது.

பின்னால், ஆசிரியர் சாவி அவர்களுடன் காமராஜ் அவர்களை, பிரதமர் பதவி ஏற்ற மறுதினம் மொராய்ஜி தேசாய், மற்றும் பல பிரமுகர்களைச் சந்திக்க அரிய வாய்ப்புகள் கிடைத்தன. ஏராளமான எம்.பி.களுடன் மிகவும் நெருங்கிப் பழகவும் முடிந்தது.

இவையெல்லாம் நான் பெற்ற பேறுகள்! எழுத்தாளன் என்ற காரணத்தால் கிடைத்த வெகுமதிகள்!

இவற்றிற்கெல்லாம் நான் யாருக்கு நன்றி சொல்வேன்!

1954'ம் ஆண்டு என் கட்டுரையை படித்து 'பேஷ்' என்று ஒரு வார்த்தையில் ஷொட்டு கொடுத்து, என்னுள் எழுத்து ஆர்வத்திற்கு வித்திட்ட அமரர் கல்கி அவர்களுக்குத் தான் என் நெஞ்சார்ந்த நன்றி உரித்தாகும்.

— கடுகு

## என்னுரை - 2

### நான் பொக்கிஷங்களாக கருதும் பாராட்டுகள்.

#### ராஜாஜியின் 'பேஷ்'

ராஜாஜி முதலமைச்சராக இருந்த போது அவர் தலைமையில் செங்கல்பட்டில் நடந்த மிகப் பிரம்மாண்டமான பொதுக் கூட்டத்தில் நன்றி உரை கூறும் அரிய வாய்ப்பு எனக்குக் கிடைத்தது. சுருக்கமாகவும் சுவையாகவும் (!) நான் பேசி முடித்தவுடன் ராஜாஜி 'பேஷ்' என வாய்விட்டுப் பாராட்டினார். உடனே நான் என் ஆட்டோகிராஃப் புத்தகத்தை எடுத்து அவரது கையெழுத்தைக் கேட்டேன். அதற்கு ராஜாஜி, "முடியாது. உனக்குக் கையெழுத்துப் போட்டால் இன்னும் நிறைய பேர் வருவார்கள். ஏற்கெனவே மணி பத்துஆகி விட்டது" என்றார் கண்டிப்புடன்.

"நீங்கள் என் பேச்சைப் பாராட்டி 'பேஷ்' என்று சொன்னீர்கள். அதற்காகவாவது நீங்கள் ஆட்டோகிராஃப் போட்டுத் தர வேண்டும்" என்றேன் துணிச்சலாக. (இளங்கன்று பயமறியாத துணிச்சல்!). உடனே என் ஆட்டோகிராஃப் நோட்டை ராஜாஜி வாங்கி, கையெழுத்துப் போட்டு நோட்டை என்னிடம் கொடுத்தார். நோட்டைப் பிரித்துப் பார்த்தேன். ஒரு இனிய அதிர்ச்சி! ராஜாஜி வெறுமனே கையெழுத்திட்டிருக்கவில்லை. 'பேஷ்' என்று எழுதி அதன் கீழே கையெழுத்திட்டிருந்தார்.

இது எனக்கே, எனக்கு மட்டுமே ராஜாஜி தந்த கிடைத்தற்கரிய பாராட்டு. அதை அரிய பொக்கிஷமாக போற்றி வருகிறேன். பின்னால் நான் எழுதத் துவங்கியதும் ராஜாஜி பாராட்டிய என் பேச்சு பாணியை எழுத்திலும் கடைபிடிக்கத் துவங்கினேன்.

**கல்கியின் 'பேஷ்'**

சுமார் ஐம்பது வருடங்களுக்கு முன்பு செங்கல்பட்டிற்கு அருகிலுள்ள ஒரு பண்ணைக்கு கல்கி அவர்கள் விஜயம் செய்தார். அப்பண்ணையைப் பற்றி எழுதும் வாய்ப்பு எனக்குக் கிடைத்தது. நான் எழுதிய கட்டுரையை அவரிடம் நேரிடையாகக் கொடுத்தேன். என் எதிரிலேயே படித்துவிட்டு வாய் விட்டு 'பேஷ்' என்று கூறினார். அந்த 'பேஷ்', என் ஊனிலும், உயிரிலும் கலந்து இன்னும் ஆட்கொண்டு உந்து சக்தியாக விளங்கி என்னை இயக்கிக் கொண்டு வருகிறது.

**எஸ்.ஏ.பி.யின் பாராட்டு**

குமுதம் ஆசிரியர் உயர்திரு எஸ்.ஏ.பி. அவர்களை நேரில் சந்தித்து பேசிய ஒரு சில எழுத்தாளர்களில் நானும் ஒருவன். ஒவ்வொரு சந்திப்பின் போதும் நான் கற்ற பாடங்கள் பற்பல. ஒரு அரசு வேலைக்காக மனு செய்வதற்கு ஒரு நற்சான்றுக் கடிதம் எனக்குத் தேவைப்பட்டது. எஸ்.ஏ.பி. அவர்களிடம் கேட்டேன். அவர் என் எழுத்தைப் பாராட்டி எழுதி கையெழுத்திட்டு கடிதம் தந்தார். அது ஒரு கோஹினூர் வைரம் அல்லவா!

## 'சாவி'யின் ஷொட்டு

ஆசிரியர் சாவி எனக்குத் தந்த பாராட்டுகள் ஒன்றா, இரண்டா? பக்கம் பக்கமாகக் கடிதம் எழுதிப் பாராட்டியிருக்கிறார். டில்லிக்குப் போன் செய்து மணிக் கணக்கில் பாராட்டி இருக்கிறார். ஒரு அவர் எழுதிய புத்தகத்தை எனக்கு அனுப்பியிருந்தார். அதன் முதல் பக்கத்தில், "கல்கியைப் போல், என்னைப் போல் நகைச்சுவையுடன் எழுதவல்ல, என் அருமை நண்பருக்கு..." என்று எழுதிக் கையெழுத்திட்டிருந்தார். இதற்கு நான் தகுதி உடையவனா என்று தெரியவில்லை. ஆனால் தகுதி உடையவனாக ஆக வேண்டும் என்றும் முயற்சி செய்து கொண்டிருக்கிறேன். சாவியின் ஷொட்டுகள் யாவும் நான் பெற்ற பரிசுகள்!

இவர்களைப் பற்றி எழுதும் இக்கணத்தில் என் நெஞ்சத்தில் பெருமிதம் பொங்குகிறது. கண்களில் ஆனந்தக் கண்ணீர் பெருகுகிறது!

— கடுகு



குறிப்பு:
பெரிய இலக்கிய புத்தகத்தை எழுதி விட்டதாகக் கருதி இத்தனை 'என்னுரை'களை எழுதவில்லை. இன்னும் 4, 5 பக்கங்களுக்கு மேட்டர் வேண்டும். அப்போது தான் புத்தகம் அச்சடிக்க வசதியாக இருக்கும் என்று அச்சகத்தில் சொன்னார்கள். அதனால் தான் . . . ஹி ஹி..!

**நகைச்சுவை செழித்தோங்கச் செய்து வரும் கீழ்க்காணும் வித்தகர்களுக்கு அன்புடன் இப்புத்தகத்தை உரித்ததாக்குகிறேன்.**

*

பாக்கியம் ராமசாமி
கிரேசி மோகன்
கு. ஞானசம்பந்தன்
விவேக்
சோ
டில்லி கணேஷ்
பாஸ்கி
மிஸ்டர் ரீல்
சேகரன் (நகைச்சுவையாளர் சங்கம்)
சீதாராமன் (நகைச்சுவையாளர் சங்கம்)
ரா. கி. ரங்கராஜன்
எஸ். வி. சேகர்
துக்ளக் சத்யா
ஜே. எஸ். ராகவன்
முகுந்தன்

அன்புடன்
கடுகு

*குலுங்க குலுங்கச் சிரிக்க வைக்கும் இவர்களின் பெயர்களை குலுக்கி எடுத்து, அப்படி வந்த வரிசையில் தந்துள்ளேன். இதில் என் பெயரையும் நுழைத்து விட்ட சாமர்த்தியத்தைக் கண்டுகொள்ளாதீர்கள்!*

## கேரக்டரோ கேரக்டர்!

# அத்தை

வக்கீல் வேதாந்தத்தின் வீடும் குடும்பமும் வாழ்க்கையும் ஒரு சின்ன உலகம் என்றால் அந்த உலகத்தை சுழல வைக்கும் அச்சு: அத்தை!



வக்கீலின்குடும்ப த்தோடு ஒன்றிவிட்ட ஆத்மா அத்தை. வக்கீலின் வீட்டில் புரளும் லட்சங்களும் மிதமிஞ்சிக் கிடக்கும் சொகுசுப் பொருள்களும் அத்தைக்கு லட்சியமில்லை. அந்த குடும்ப த்தில் உள்ள ஒவ்வொருவருடைய சந்தோஷமும் மனசந்துஷ்டியும் தான் அவளுக்கு மகிழ்ச்சியைத் தரும்.

பொம்மைக் கலியாணம் மாதிரி ஏழாவது வயதில் அத்தைக்கு (அந்த வயதில் அலமேலு)

கலியாணம் நடந்து ஒன்பதாவது வயதில் தாலியை இழந்தாள். அதற்கு முன்பு பெற்றோர் களையும் இழந்தாள். எதிர் காலம் இருண்டு போய் விட்டது என்று உணரக் கூடத் தெரியாத வயதில் வெகு தூரத்து உறவினரான வேதாந்தத்தின் தந்தை அவளை வீட்டோடு சகோதரி மாதிரி வைத்துக் கொண்டார்.

வேதாந்தம் வளர்ந்து பெரிய வக்கிலாகி குடியும் குடித்தனமாக வசதியுடன் வாழத் துவங்கியபோதும் அலமேலுவைத் தன் வீட்டோடு வைத்துக் கொண்டார். விதவைக்கோலம் என்கிற அலங்கோலம் எதையும் செய்துகொள்ள விடவில்லை!

வேதாந்தமும் சரி அவர் மனைவி, பெண், பிள்ளைகளும் சரி யார் பேச்சை அலட்சியம் பண்ணினாலும் அத்தை சொல்லைத் தட்டமாட்டார்கள். அத்தைதான் அந்த வீட்டின் ஃபைனல் அதாரிட்டி! அன்பான சர்வாதிகாரி!

கோடாலி முடிச்சும் பளிச்சென்ற களையான முகமும், எளிய நூல் புடவையும், பிறருடைய இன்பத்தில் நிறைவு காணும் மனப்பான்மை பிரதிபலிக்கும் முகபாவமும் அத்தை மீது மரியாதையையும், சிநேக உணர்ச்சியையும் தோற்றுவிக்கும்.

"வேதாந்தம்..... ராஜிக்கு இந்த வாரம் பரீட்சை பணம் கட்டணும்... எண்பது ரூபாய் கொடுத்திருக்கிறேன். டிரைவர் இரண்டு நாள் வரமாட்டானாம். சரின்னுட்டேன். சாயங்காலம் வர்றபோது சுப்பிரமணிய ஆசாரியை வரச் சொல்லிவிட்டு வா..... ஜயாவுக்கு நாலு வளையல்கள் பண்ணணும்....நாளைக்குக் கலியாணம் நிச்சயமா யிடுத்துன்னா அப்போ அவசரம் அவசரமாப் பண்ண முடியாது... யாரு — மாணிக்கமா?... வாப்பா, தோட்டத்திலே போய் தேங்காய் 20, 25 பறிச்சுப் போடு, கிணற்றடி மரத்தில்தான் காய் நன்னா முற்றி இருக்கு. அதிருக்கட்டும். வேதாந்தம்... குழந்தை ஜயஸ்ரீ என்னமோ கிட்டார் வாத்தியம் வேண்டும் என்று கேட்டாளாம்... நீ 'கூடாது' என்றாயாம். அவள் அம்மாவும் 'கூடாது' என்றாளாம்... என் கிட்டே வந்து அழறது... போகட்டும், இந்த வயசில்தான்

அல்ப ஆசைகள் இருக்கும். உன் மாதிரி, என் மாதிரி வயசான பிறகா ஆசைப்படும்...'சரிடி, உங்கப்பாவிடமிருந்து பணம் நான் வாங்கித்தறேன்' என்று சொல்லிவிட்டேன்."

'அத்தையைக் கேட்டுக்கோ', 'அத்தை பர்மிஷன் கொடுத்துட்டாள்' போன்ற வாக்கியங்கள் வக்கில் வேதாந்தத்தின் இல்லத்தில் அடிக்கடி கூறப்படுபவை. வேலைக்காரன் கூட எஜமானியம்மாவிடம்,'ஏம்மா சும்மா திட்டறே... அத்தையம்மா அதோ வர்றாங்க' என்பான்!

'ஏண்டியம்மா கல்யாணி. அவனை ஏன் திட்டறே, போன ஜன்மத்திலே நீ கடன்பட்டிருக்கிறே, அதுதான் நீ அவனுக்கு சம்பளம் கொடுக்கறே... அவன் வேலையைச் செய்யாம ஏமாத்தறான்... உன் பணம் அவனை அப்படிப் பண்றது!-:

"அத்தையம்மா..வூட்லே சம்சாரம் காய்ச்சல், அதனாலத்தான்..."

"காய்ச்சல் என்றால் சொல்றது, கஷாயம் போட்டு வைப்பேனே! போவச்சே ஒரு யேனத்திலே வாங்கிட்டு போ...கஷாயம் தரேன்"

தங்கள் பிறந்த நாள், நல்ல நாள் போன்ற முக்கிய தினங்களில் வேதாந்தத்தின் பிள்ளைகள், பெண்கள் முதலில் அத்தையைத்தான் நமஸ்கரிப்பார்கள்.

பெரிய பிள்ளை ஐ. ஏ. எஸ். பாஸ் செய்து வேலைக்குச் சேர்ந்து முதல் மாத சம்பளத்தை வாங்கியதும், நேராக சமையலறைக்கு வந்து அத்தையிடம்தான் கொடுத்தான்! "எனக்கு எதுக்குடா பணம், காசு? தீர்க்காயுசோட இருடா." என்றாள்.

வாழ்க்கையில் விரக்தி இல்லாத ஆத்மா அத்தை. அவள் ஒரே ஒரு சமயம் தான் நெகிழ்ந்து போய் கண்ணீர் விட்டாள். வேதாந்தம் தன் பெரிய பெண்ணின் கல்யாண அழைப்பிதழை அத்தையின் பெயரால் அச்சடித்து இருந்ததைப் பார்த்தபோது!

# அஞ்சாம் பிளாக் மாமி

டில்லி கரோல்பக்கில் உள்ள தமிழ் குடும்பங்களில் என்னென்ன நடக்கின்றன? யார் வீட்டுப் பையன் எந்த காலேஜில் படிக்கிறான்; எந்த பெண்ணுக்குக் கல்யாணம் அல்லது பூச்சூட்டல், யார் வீட்டு மாமி புதிதாக நவரத்ன மாலை வாங்கிக் கொண்டாள்; எந்த வீட்டு 'மாமா'விற்கு ஆபீசில் இன்க்ரிமென்ட் கிடைத்தது என்பது போன்ற தகவல்கள் மட்டுமின்றி வேறு 'கிசுகிசு' செய்திகளும், ("ராஜலக்ஷ்மியின் பெரிய பெண் காந்தா இருக்கிறாளே, அதுதான் பாங்கில் வேலை பார்க் கிறதே, அந்தப் பெண் ஏதோ பஞ்ஜாபிப் பையனுடன் சுற்றிக்கொண்டிருக் கிறதாம்?") மற்றும் மார்க் கெட் விவரங்கள் போன்ற தகவல்கள் ஆகியவை களைத் தெரிந்து கொள்ள வேண்டுமா? 'அஞ்சாம் பிளாக்' மாமி அமிர்தத்தைக் கேட்டால் போதும்!



பார்க்கப் போனால், நீங்கள் கேட்கக் கூட வேண்டாம்; அந்த

மாமியிடம்.'என்ன சௌக்கியமா?' என்றாலே போதும். அவ்வளவுதான். 'ரேடியோ கரோல்பாக், செய்திகள் அமிர்தம்' என்று சொல்லாத குறையாக ஆரம்பித்து விடுவாள்!

"சௌக்கியத்திற்கு என்னடி குறைச்சல், லலிதா? மிஸஸ் ராமனின் பெண் பிரசவத்திற்கு பிறந்தகம் போகிறாள். அவளுக்குப் பாகற்காய் பிட்லை என்றால் மசக்கை. மாமி கையால் பண்ணிக் கொடுக்கலாம் என்று பாகற்காய் வாங்க வந்தேன். நேற்று கால் கிலோ எட்டணா விற்றான். இன்றைக்கு அறுபது பைசா என்கிறான் முருகன். 'ஏண்டா முருகா! யாருக்குடா சேர்த்து வைக்கப் போறே, இவ்வளவு லாபம் பண்ணி? உன் ஒரே பெண்ணையும் கட்டிக் கொடுத்துட்டே' என்று அவன் மனசில படறாப்போலே கேட்டுட்டேன்!

"கமலா டிவி செட் வாங்கி இருக்கிறாளாம். மாமி நீங்க வந்து பார்த்து ஒரு வார்த்தை சொன்னால் தான் திருப்தி என்கிறாள். மாமிக்கு எங்கே நேரம் இருக்கிறது? உனக்குத் தெரியும். லலிதா, மாமி ஒருத்தர் மாதிரி வீடு வீடாய்ப் போய் வம்பு பேசுகிறவளா? யாருக்கும்மா அப்படிப் போய் வர திராணி இருக்கு? பாரேன் விடிந்ததும் விடியாததுமாக எழுந்து சமையல் பண்ணி ஆபீஸுக்கு அனுப்பிவிட்டு வருகிறேன். வழியில் 'ஸெவன் ஏ' பார்வதி வீட்டுக்குப் போனேன். டி.பி. யாக இருக்கும் என்று தோன்றுகிறதாம், அவள் பிள்ளைக்கு. அவள் மச்சினன் டில்லிக்கு மாற்றலாகி வருகிறானாம். ஓரகத்திகளுக்குள் என்றைக்குமே தகராறு.

மத்தியானம் டிபனுக்கு ஓமப்பொடி பண்ணலாம் என்று பிழிகிற குழலை பத்மாவிடம் வாங்கி வரப் போனேன். அவள் ஆம்படயான் அப்படிக் குடிக்கிறானாம்! 'மாமி நீங்க தான் அவருக்குப் புத்தி சொல்லணும்' என்கிறாள். சின்னப் பையனாக இருந்தால் நாலு அறை கொடுத்து சரிப்படுத்தலாம். பத்மா நல்ல பெண். மூணு மாசம் வேறு இந்த அழகில்! என்னமோம்மா, இதைப் பார்த்தால் சந்தானமே பரவாயில்லை. கார் ஆக்சிடென்ட் ஆச்சே, அப்போ சத்தியம் பண்ணானாம். அதற்கப்புறம் புட்டி

கிட்டவே போறதில்லை. இப்போது தான் அடகு வைச்ச நகைகளையெல்லாம் கொஞ்சம் கொஞ்சமாக மிஸஸ் சந்தானம் மீட்கிறாள்."

மாமிக்கு டைம் இருந்தால் எவ்வளவு செய்திகள் இன்னும் தெரிந்து கொண்டிருப்பாள்! அமிர்தம் ஒரு விஷயத்தில் தன்னை மறந்தவள். நான் என்று தன்னைச் சொல்லிக் கொள்ள மாட்டாள். எல்லாவற்றிற்கும் மாமிதான்!

'மாமிக்குத் தலைவலி', 'மாமி சினிமா போகிறேன்', 'மாமி இன்றைக்கு உபவாசம்' என்ற ரீதியில் தான் பேசுவாள். ஏன், சொந்தக் கணவனிடம் பேசும்போதுகூட, 'உங்களைக் கல்யாணம் செய்து கொண்டதில் என்ன லாபம்? மாமிக்கு ஒரு நகை உண்டா, நட்டு உண்டா? இல்லை, சினிமா தான் உண்டா? ' என்பாள்!

பளிச்சென்று களையான முகம். பெரிய குங்குமப் பொட்டு. இங்கும் அங்கும் நரை ஓடிய முடி. சின்னாளம்பட்டுப் புடவை. காலில் ஹவாய்ச் சப்பல். இது தான் மாமி.

மாமியின் பெயர் அமிர்தம் என்பது ரொம்பப் பேருக்குத் தெரியாது. எல்லோருக்கும் 'அஞ்சாம் பிளாக் மாமி' தான்.

நாள், கிழமை என்றால் மாமி வந்தால் தான் எல்லோருக்கும் திருப்தி. மாமி ஆரத்தி எடுக்காத கல்யாணம் வெகு குறைவு. ஓடியாடி வேலை செய்ய முடியாது மாமியால். ஆனால் உட்கார்ந்த இடத்திலேயே எல்லாவற்றையும் நிர்வகிப்பாள்.

அடுத்த வருஷம் கரோல்பாக் வந்தால் மாமியைப் பார்க்க முடியாது.

'மாமா ரிடையராகிறார். மாமி மதுராந்தகம் போய் விடுவேன்' என்று இப்போதே கூற ஆரம்பித்து விட்டாள் அஞ்சாம் பிளாக் மாமி!

# மாரிமுத்து

கோடம்பாக்கம் ஓவர்பிரிட்ஜ் கைப்பிடி சுவரில் அமர்ந்திருக்கும் ஏழு ஆசாமிகளில் நடுநாயகமாக இருப்பவரைக் கவனியுங்கள். அவர் தான் சினிமா ரசிகர் மாரிமுத்து!

கண்ணைப் பறிக்கும் சிவப்பு சாட்டின் சட்டை, லுங்கி, பஞ்சாபி சப்பல், படியாத கிராப்பு, கழுத்தில் மைனர் செயின்



(பித்தளை தான்), வாயில் வெற்றிலைப் பாக்கு, பன்னீர் புகையிலை இதுதான் மாரிமுத்து..

அரண்மனைக்காரத் தெருவில் வாட்ச்மேன். ஆகவே பகலெல்லாம் ஐயா ஃப்ரீ. தூங்கி ரெஸ்ட் எடுப்பதைவிடப் பாலத்தின் மேல் உட்கார்ந்து காரில் போகும், வரும் சினிமா நட்சத்திரங்களைப் பார்ப்பதும், அவர்களைப் பற்றி கிசுகிசு செய்திகளை உற்சாகமாக அரட்டை அடிப்பதும் தான் அவனுக்கு பொழுது போக்கு, ஓய்வு எல்லாம்!

இடது கையில் பெரிய ரிஸ்ட் வாட்ச் கட்டியிருக்கிறானே, அது மூர் மார்க்கெட்டில் வாங்கியது. விலை முப்பது ரூபாய். பார்க்கப் பிரமாதமாக இருக்கும். அவ்வப்போது உதறினால் தான் ஓடும்! இதன் காரணமாக கையை அடிக்கடி உதறும் பழக்கமே வந்து விட்டது மாரிமுத்துவிற்கு!

"டேய் மாணிக்கம், மணி எட்டடிக்கப் போவுதா? பாரு... பெரிய வண்டியிலே சிவாஜி வருவாரு... ஏன்னா. சின்ன வண்டி சர்வீசுக்கு ஒர்க் ஷாப்புக்கு போயிருக்குது. நேற்று மவுன்ட் ரோடில் பார்த்தேன். இருடா.. அது வரது யாரு? இந்திக்கார ஆக்டர் மாறிகீது. ஆமாண்டா, அமிதாப் பச்சன் தான். விஷயம் தெரியுமாடா? அவருக்கும் அவர் பொண்சாதிக்கும் தகராறு. ஒரு நாள் இவரு ஏதோ பார்ட்டிக்குப் போய் லேட்டா வந்தாராம். ஜயா பாதுரி ரொம்ப ஸ்ட்ரிக்ட் சும்மா வுடுவுடுன்னு வுட்டுது. இந்த மாதிரி எல்லாம் ஊர் சுற்றி விட்டு வந்தால் நான் என்ன செய்வேன்னு தெரியாது, அப்படின்னு சொல்லிடுச்சு. அதற்கு அப்புறம் தான் இவரு டயத்திற்கு வந்து டயத்திற்குப் போகிறார்! ஆனா ஒண்ணுடா, தினமும் பம்பாய்க்கு கால் போட்டு குழந்தைகிட்டே பேசாம இருக்கமாட்டார்டா. கடைசி ரீல் தான் எடுக்கறாங்கடா, கிளைமாக்ஸ் சீன். 'கண்ணீர் சிரிக்கிறது' படம் இல்லே, அதைத் தான் இந்தியிலே எடுக்கறாங்கடா, தமிழ்லே தான் டப்பாவாய்ட்டுது. இந்தியிலேயாவது நல்லா ஓடணும். இல்லாட்டி பைனான்ஸியர் அவுட். பத்து லட்சம் போட்டிருக்கானே..!'

"ஆமாம் மாரிமுத்து, இப்போ பாத்தியா, எல்லா படத்திலேயும் முத்துராமன் வராரு."

"பின்னே என்னடா, அவரு ரொம்ப தன்மையானவரு. அவரை இன்னிக்கு நேத்திக்கா தெரியும்? டிராமா கம்பெனியிலிருந்து அவரைத் தெரியும். ஒரு நாள் ஷூட்டிங்கிலே அவரைப் பார்த்தேன். "ஸார், உங்க விசிறி."ன்னேன்." "உன் மாதிரி ரசிகர்கள் ஆதரவு தான் எனக்கு வேண்டும்" என்று சொல்லி செட் பையனைக் கூப்பிட்டு எனக்கு காபி கொடுக்கச் சொன்னாருடா. அவரு தாண்டா மரியாதை தெரிஞ்சவரு. ஒருத்தரு மாதிரி இவர்

ரேட்டு விஷயத்திலே கறாரா இருக்க மாட்டார். ஒரு பெரிய புரொட்யூசரு, பேர் சொல்லக்கூடாது, அவருக்கு பாவம், மூணு படம் அடிபட்டிடுச்சு. அவருக்கு கை கொடுக்க இவரு காசு வாங்காம நடிக்கிறாரு. அது தாண்டா மனுஷத்தனம். நாலு ஏரியா கூட வித்துப்புடிச்சு. மைசூர் ஸ்டேட் இன்னும் விக்கலையாம்."

"ஆமாம் மாரிமுத்து, ஷூட்டிங் நீ நாலைந்தாவது பார்த்திருப்பே இல்லையா?"

"வாயை அலம்புடா. நான் பார்க்காத ஷூட்டிங்காடா! ஆனா ஒண்ணு சொல்றேன், படா பேஜாருடா ஷூட்டிங் பாக்கறது. எனக்கு ஆயிரம் ரூபா கொடு, நான் பாக்க மாட்டேன். ஆனா பப்பி நடிக்கறதைப் பார்த்தா குஷியா இருக்கும்...'

"யாரண்ணே பப்பி."

"நீ நேற்று பொறந்த பயல்! அதான் இப்படி கேட்கறே. பத்மினிடா . அமெரிக்காவிலே இப்போ இருக்காங்க. நடிப்புன்னா அவங்க நடிப்பு தாண்டா நடிப்பு! உசிரை விட்டு நடிப்பாங்க. தில்லானா மோகனாம்பாள் படத்திலே ஒரு இடத்திலே அவங்க கண் கலங்கறாங்க.... அதைப் பார்த்து இந்த மாரிமுத்துவுக்கே அழுகை வந்திடிச்சுன்னா பார்த்துக்க.

"முன்னே இங்கே கேட் இருந்ததே, அப்போ அவங்க கார் இங்கே நின்னுது. நீ இருக்கறயே, அவ்வளவு தூரத்திலே அவங்களைப் பார்த்திருக்கிறேன். இன்னா கலர்டா? தக்காளிப்பழம் மாதிரி...! இப்போ எல்லாம் மேக் அப் அடிச்சிக்கிறாங்க. அவ்வளவு தான்.. நடிப்பு பூஜ்யம். இந்த அழகிலே பேட்டியிலே என்னமா அளக்கறாங்க?

"அந்த ஆஷாகுமாரின்னு வந்.திருக்குதே, அது என்னடா நடிகை? 'தம்பி நீட்டிய கம்பி'யில் அந்த ஜெயில் சீனில் டயலாக் பேசும் போது அப்படியா உணர்ச்சியைக் காட்டுவது? அப்படியே கொட்ட வேண்டாமா? டைரக்டர் டில்லி பாபுவுக்கு ஆஷா மேல் கண், அதுக்காகத்தான்

படத்திலே போட்டாரு. இந்த ரோலில் ஜயரோஜாவைப் போட்டிருந்தா என்னமா பண்ணியிருக்கும்... அதாண்டா நான் கதை வசனம் எழுதி டைரக்ட் பண்ணிப் போட்டேனே, 'இடிந்த காதல் கோட்டை' நாடகம், அதில் என்னோடு ஹீரோயினா நடிச்சதே, அவ தான் ஜயரோஜாஸ்ரீ, நானும் டைரக்டர் பாலச்சந்தர் கிட்டே அதைப் பற்றி சொல்லியிருக்கிறேன். 'மாரிமுத்து மனசிலே வச்சிருக்கேன். டைம் வர்றபோது சொல்லி அனுப்பறேன்' என்று சொல்லியிருக்காரு. என்னடா அப்படிப் பாக்கறே, சந்தேகத்தோடு?

"பாலசந்தர் எத்தினி வருஷமா பழக்கம். அவர் டிராமா போடுவாரே, அப்போ நான் தான் சீன் இழுப்பேன். அந்த சீன் கம்பெனி முதலாளி கிட்டே, 'மாரிமுத்து தான் வரணும்'னு சொல்லுவாரு. ஏன்னா நான் தான் கரெக்டா ட்ராப்பை விடுவேன்!

"எதுக்கு சொல்ல வந்தேன்னா நம்ம ஜயரோஜாவுக்கு ஒரு சான்ஸ் கிடைச்சால் நமக்கு ஒரு சான்ஸ் அது வாங்கிக் கொடுக்கும்.! அதுகிட்டே போய் கேளு, 'மாரிமுத்து அண்ணன் தான் என் கலை உலக குரு'ன்னு சொல்லும். ஏதோ நம்மாலே நாலு பேர் முன்னுக்கு வந்தால் சரிதான்!

"ஏய் சிங்காரம், போய் ரெண்டு சிகரெட்டு வாங்கி வாடா. மணி ஆவுது. இன்னும் மஞ்சுளாவைக் காணோம். ஏழாம் ஃப்ளோரில் ட்ரீம் சீன் ஆச்சே! ஆமாண்டா, பெங்களூருக்குப் போயிருக்குதே... பேப்பர்லே வந்திச்சே...

"டே, பார்த்சாதி. பார்த்தியா யார் கார்லே போனாங்கன்னு? நம்ம லெட்சிமிடா. 'ஜூலி' பார்த்தியா? சேதுமாதவன் நல்லா டெக்னிக்கா எடுத்திருக்காரு. இல்லைன்னு சொல்லக்கூடாது. இதே கதையை என் கிட்டே கொடுத்திருந்தால்..."

பாவம். மாரிமுத்து ஒரு பெரிய கற்பனை உலகத்திற்குள் சினிமா உலகம் ஒன்றை சிருஷ்டித்துக் கொண்டு வாழ்ந்து வருபவன். அந்த உலகத்தில் அவனுக்குத் தெரியாதது ஒன்றுமே இல்லை!

# தியாகு

எந்தப் போரில் வென்றாலும், தியாகுவைச் சொற்போரில் மட்டும் ஜெயிக்க முடியாது. அடிப்படையோ தர்க்க ரீதியோ இல்லாமல்கூட அவன் வாதம் செய்வான். இவனுடன் வாதம் செய்வதைவிடத் தோல்வியை ஒப்பிக் கொள்வதே நல்லது என்று தோன்றி விடும். எந்த விஷயத்தைப் பற்றிச் சொன்னாலும் அதற்கு நேர் எதிரிடையாகச் சொன்னால் தான் அவனுக்குத் திருப்தி. எல்லாவற்றிலும் குற்றம் கண்டு பிடிக்காமல் இருக்க மாட்டான்!



நல்ல பளபளப்பான சிவப்பு. ஷேவ் பண்ணிய அடையாளமே இல்லாத மழு மழுப்பான கன்னம், இழைய இழைய வாரி விடப் பட்டிருக்கும் கிராப்பு. பளிச்சென்ற வெள்ளை ஸ்லாக் சட்டை. பார்ப்பதற்கு 25 வயது இளைஞனைப் போல் காட்சி அளிக்கும் இந்த நக்கிரன் எப்படிப்பட்ட மனைவியைத் தேர்ந்தெடுத்தான் தெரியுமா? இவனைவிட ஐந்து வயது மூத்தவள் மாதிரி இருக்கும், ஒரு கறுப்பான, குண்டு சரீரப் பெண்ணைக் கலியாணம் செய்து கொண்டான்!

வாழ்க்கையில் குற்றம் கண்டுபிடிப்பவர்கள் பலர் இம்மாதிரிதான் செய்து விடுகிறார்கள்.

"ஏண்டா, தியாகு உங்க ஆபீஸ் ராமசந்திரனை 'கம்பல்சரி'யாக ரிடையர் பண்ணி விட்டாங்களாமே, இது அநியாயமில்லையா?"

"என்ன அநியாயம்? கண்ணும் சரியாக இல்லை, காதும் கேட்கவில்லை. இது மாதிரி ஆட்களால் கவர்ன்மெண்டுக்கு என்ன லாபம்? வீண் செலவுதான்!" தியாகு.

"பாவம்டா, குழந்தை குட்டிக்காரன்."

"கவர்ன்மெண்டுதான் இவனைக் குழந்தை பெற்றுக்கச் சொல்லியதா? 'மரம் வச்சவன் தண்ணி ஊத்துவான்' என்றான் அப்போது."

"இருந்தாலும் பரிதாபமாக இருக்கிறது."

"பரிதாபமாக இருந்தால் 'ராமசந்திரன் குடும்ப நிதி' என்று வசூல் செய்து கொடேன்."

"வேறு வேலை இல்லை. இவனுக்கு உண்டி தூக்கச் சொல்கிறாயா?"

"இதில் என்ன தப்பு? மனுஷக்கு மனுஷன் ஹெல்ப் பண்ணினால் ஒரு தவறும் இல்லையப்பா." இதுவும் தியாகுதான்.

"சரிதான், அவன் வேலையில் மந்தமாக இருந்தான். கண், காது சரியில்லை. வீட்டுக்கு அனுப்பினால் அதற்கு நான் கப்பரை தூக்கணுமா?"

"நாளைக்கே உனக்குப் பார்வை மங்காது என்பது என்ன நிச்சயம்? இது நம்மிடமா இருக்கிறது? அவனவன் தலை எழுத்து. குழந்தையையும் குட்டியையும் வைத்துக்கொண்டு அவன் என்னப்பா செய்வான்?"

"குடும்ப நலத் திட்டம் என்றெல்லாம் சர்க்கார் வைத்திருக்கிறார்களே?"

"எப்போய்யா வைத்தாங்க! இவனுக்கு கலியாணம் ஆச்சு 25 வருஷத்திற்கு முந்தி. அப்போது ஏதய்யா இதெல்லாம்?"

"தியாகு, பாட்னாவில் வெள்ளம். நம் ஆபீசில் நிதி திரட்டி அனுப்பலாமா?"

"கேளுங்கய்யா! அங்கே அம்மி உரலே அடிச்சிகிட்டுப் போகிறது. இவரு அனுப்புற ஒண்ணேகால் ரூபாயில் என்னய்யா ரிலீப் கிடைக்கும்? எல்லாரும் வெள்ளம் வருகிற வரைக்கும் தூங்கிக் கொண்டிருந்துவிட்டு இப்போ மடிப்பிச்சை ஏனய்யா எடுக்கணும்! அது கடலில் கரைச்ச பெருங்காயம்தான்..."

"கள்ளச்சாராயம் குடித்துவிட்டு இருபது பேர் செத்துட்டுட்டாங்களாம் பாத்தியா தியாகு."

"எல்லாம் பார்த்தேன். உயிரோடு போராடிக் கிட்டிருக் கவங்களை கைது செய்வாங்க. சட்டப்படி அவங்க குற்றவாளிகள் இல்லையா? செத்த குடும்பத்திற்கு என்ன உதவி செய்யப் போறாங்க? அவன்தான் பைத்தியக்காரன்; குடிவெறியன்; குடிச்சான்; செத்தான். அவன் பெண்சாதி பிள்ளை களுக்கு ஏதாவது செய்ய வேண்டாமா? நான் நூறு ரூபாயை சீஃப் மினிஸ்டருக்கு அனுப்பி ஓர் உதவி நிதி ஆரம்பிக்கச் சொல்லப் போகிறேன்!"

இப்படித்தான், தன் கலியாணத்தைப் பற்றியும் அவன் கூறினான். "பேப்பரைப் பாருங்க. எல்லாருக்கும் அழகான மணமகள் தான் தேவை. இவன் என்ன மன்மதன் என்று எண்ணமா? அழகு இல்லாத பெண்களை என்ன செய்கிறது? நல்லதங்காள் மாதிரி கிணற்றில் தள்ளி விடுகிறதா? எல்லாப் பெண்களும் சினிமா நடிகைகள் மாதிரி இருந்து விட்டால் அப்புறம் அவர்கள் நடத்தையும் அப்படியே இருந்து விடும். இவ்வளவு பேசுகிறவன் சினிமா நடிகையைக் கலியாணம் பண்ணிக்க முன் வருவானா? பேசுவார்கள், ஆனால் கலியாணம் என்று வரும்போது ஆயிரம் யோசனை செய்வான்.

அதனாலே நான் என் அம்மாவிடம் சொன்னேன், பெண்ணைப் பார்க்கப் போகிறதில்லை என்று. என் மனைவி மரகதத்திற்கு என்ன குறை? குடும்பப் பாங்காக இருக்கிறாள். வீட்டை நன்றாக நிர்வகிக்கிறாள். தளுக்கு மினுக்கு எதுவும் கிடையாது."

"கையிலே பத்தாயிரம் கொடுக்கிறார். ஸ்கூட்டர் கொடுக்கிறார். ஒரே பெண். பசையுள்ள ஆசாமி, சரி தான், நான் ஒத்துக்கறேன். அதுக்காக அவரோட பெண்ணைக் கல்யாணம் பண்ணிக் கொள்வதா? ஏனப்பா, பணத்திற்கு ஆசைப்பட்டு சம்மதம் தெரிவிக்க ரெடியா இருக்கிறே? இவள் மூக்கும் முழியுமா இருக்கிற பெண் இல்லை: மூக்கும் முழியும் பல்லுமா இருக்கிற பெண்! கோரைப்பல்லு! முட்டைக் கண்ணு! கொக்கு மூக்கு! 'இவள் என் ஒய்ஃப்' என்று எப்படியப்பா சொல்லுவாய்? லட்ச ரூபாய் கொடுத்தாலும் நான் செய்து கொள்ள மாட்டேன்."

எதிர் எதிரான கருத்துக்களில் அகப்பட்டுக் கொண்டுத் தத்தளிக்கும் ஜீவன் தியாகு!

# சாரு

மெல்லிய லக்னோ மல் ஜிப்பா, கருப்பு பாண்ட், ஜீனத் அமன் ஹேர் ஸ்டைல், கறுப்பு மூக்குக்கண்ணாடி ,'பிளாட்பாரம்'. என்று நாகரீக நங்கையர்களால் அழைக்கப்படும் உயரமான மிதியடி,

தோளிலிருந்து தொங்கும் 'ஜம்பப் பை' முகத்தில் ஓர் அலட்சியம், தவறிப் போய் பெண்ணாகப் பிறந்து விட்டோம் என்கிற நினைப்பு , அந்த நினைப் பினால் உண்டான ஆண்மைத்தனமான அட்டகாசப்பேச்சு, இவைகள் ஓரளவு தான் சாருவைப் படம் பிடித்துக் காட்டும். காரணம் சாருவின் குணமோ, நடை உடை பாவனைகளோ வர்ணனைக்குள் அடங்கா, சாருவைப் போல்!



"யாருக்கு எதுக்கு அடங்கி நடக்கணும்? ஸொஸைடியில் பெண்ணைவிட ஆண் உயர்ந்தவன் என்பது தவறு மட்டுமல்ல, சரியான அசட்டுத் தனமும் கூட, வாட் டு யூ ஸே, ராஜா?" என்று சொல்வாள் சாரு. ராஜா என்பது அவள் கணவன்!

ஆமாம் கல்யாணமாகி இரண்டு பெண்களுக்கு அம்மாவாகி விட்டவள் தான் சாரு. அவள் சதா சர்வ காலமும் ஷாப்பிங், ஸ்லிம்மிங், கார் டிரைவிங் என்று பல 'ங்'குகளில் ஈடுபட்டுக் கொண்டிருப்பதைத்தான் பலர் பார்த்திருக்கிறார்கள். வீட்டில் குழந்தைகளைக் கவனிக்கிறாளா, சமையல் செய்கிறாளா, ஏன் தன் கர்சிஃப்பையாவது தானே தோய்க்கிறாளா என்பதெல்லாம் யாருக்கும் தெரியாத விஷயங்கள். ஏன் பலர் அவளை ஒரு காலேஜ் குமரி என்றுதான் எண்ணிக் கொண்டிருக்கிறார்கள். 'இவளுக்குக் கல்யாணம் ஆகி விட்டதா? அட? இரண்டு குழந்தைகள் கூடவா? எல்லாம் அவளுக்கே தெரியாமல் நடந்து விட்டிருக்கவேண்டும்! அவள் டிரஸ்ஸும் பேச்சும் சினிமா ஸ்டாரைத் தூக்கி அடிக்கின்றன.' என்று வியப்பவர்கள் தான் அதிகம்.

"ராஜா, இன்னிக்கு நைட் ஷோ 'டென் கமாண்ட்மெண்ட்ஸ்' போகணும். உனக்கு டயர்டா இருக்குதா? நெவர் மைண்ட்... பக்கத்து வீட்டு அஷோக்கை அழைச்சிக்கிட்டுப் போகிறேன். அவனுக்கு இரண்டு நாளைக்கு.. லீவு. ஏய், ஆஷா, உஷா! நீங்க இரண்டு பேரும் 'டாடி' யைத் தொந்திரவு செய்யக்கூடாது. சரியா எட்டரை மணிக்கு 'டாடி' க்கு குட் நைட் சொல்லிட்டுத் தூங்கப் போகணும்... ஓகே..."

"என்ன சாரு, நம்ம கார் கூட இப்போ வொர்க் ஷாப்பிலே விட்டிருக்கிறோம். தியேட்டர் ரொம்ப தூரத்திலே இருக்கிறதே?"

"இருக்கட்டுமே, அஷோக்கின் மோட்டார் சைக்கிளில் போகிறேன். என்ன ராஜா, உன் பர்மிஷன் உண்டு தானே?"

"சாரு... சார் டியர்..."

"சாரு... சார்.... என்ன 'சார்' வேண்டியிருக்கு? ஏற்கனவே என்னை எல்லாரும் ஆம்பளைன்னு சொல்றாங்க. நீ வேறு 'சார்' போட்டால் என்ன ஆகிறது?"

சாரு தன் கணவனுக்கு மதிப்பு கொடுப்பவள் தான்.

அவன் மீது அன்பும் ஆசையும் கொண்டவள் தான். இருந்தாலும் வாக்கியத்திற்கு வாக்கியம் 'எங்க ஹஸ்பெண்ட்', 'என் வீட்டுக்காரர்', 'எங்களவர்', 'அவர்' என்றெல்லாம் கூறமாட்டாள். அவளைப் பொறுத்த வரை கணவன் ஒரு நண்பன். பயணத்தின் பார்ட்னர்.

"கல்யாணம் என்பது ஒரு கைகுலுக்கல் மாதிரி. இதில் மேலே கீழே என்ற பேச்சுக்கே இடமில்லை" என்பாள் சாரு . சாரு பி ஏ. வும் படித்து பி. எட்.-டும் படித்தவள்.

"வேலைக்குப் போகிறேன்" என்றால் ராஜாவிற்குப் பிடிக்கவில்லை. ராஜாவிற்கு நல்ல சம்பளம். நெக்ஸ்ட் இயர் பிரமோஷன். ரீஜனல் மேனேஜர் வேலை கிடைக்கும். 'நான் பி.எட். படித்தது வேஸ்ட்தானா?' என்று கேட்டால், ராஜா ரொம்ப 'நாட்டியா', இல்லை இல்லை 'நாஸ்டியா' பதில் சொல்கிறது: பி.எட். என்றால் படுக்கையாம்!'

இப்படி சர்வ சாதாரணமாகத் தங்கள் வீட்டுக்கு வருபவர்களிடம் சாரு கூறுவாள். அச்சமயத்தில் கணவரும் இருப்பார். வருபவர்கள் தம்பதியராகவும் இருக்கக்கூடும்!

சாருவைப் பொருத்தவரை எந்த செய்தியும் கிசுகிசு செய்தியாக இருக்க முடியாது. உடைத்துப் பேசுவாள். 'லாஸ்ட் டாங்கோ இன் பாரிஸ்', 'ஓ கல்கட்டா', 'டீப் த்ரோட்' போன்ற 'ஆ' (ஆபாசமான) படங்களைப் பற்றி சர்வ சாதாரணமாகச் சம்பாஷணையின் போது பேசுவாள்.

அவளைப் பற்றி ஒரு சிலர் கசமுச என்று பேசுவது அவளுக்குத் தெரியும். 'யாராவது என் எதிரில் வந்து தைரியமாக ஏதாவது சொல்லட்டும், என்ன ஆகிறது என்று பார்க்கட்டும்.' என்பாள். அவள் நடை உடை பேச்சு எல்லாம் ஒரு மாதிரியாக இருந்தாலும், குணத்தில் அப்பழுக்கற்றவள்!

ஆனால் இந்த உலகில் பெரும்பாலோர் பசுத்தோல் போர்த்திக் கொண்டிருக்கும் புலிகள் தானே! ஆகவே அந்தப் புலிகள் சாருவைத் தாக்க முயல்கின்றன. எந்த சலசலப்பையும் சமாளிக்கக்கூடியவள் சாரு!

# ராமசேஷு

டில்லியில் உள்ள பெரிய மனிதர்களில் தமிழர்கள் வீட்டுக் கலியாணங்கள் பருப்பில்லாமல் கூட நடந்து விடும் ஆனால் ராமசேஷன் இல்லாமல் நடக்காது. கலியாண மாப்பிள்ளையை விட முக்கியமான ஆசாமியாகக் காட்சியளிப்பார் ராமசேஷன்.

ஐம்பது வருடங்களாக டில்லியிலிருப்பவர் ராமசேஷன். பத்தாவது வயதில் சித்தி அடித்ததால் டில்லிக்கு ஓடிவந்துவிட்ட சேஷு, யாரோ ஒரு பெரிய மனிதரின் வீட்டில் வேலைக்குச் சேர்ந்தார். எடுபிடி ஆள், சைக்கிள் பியூன், சமையல்காரன் மெட்ராசுக்குத் தனியாகப் போகும் பெரிய மனிதரின் மாமிக்கு 'எஸ்கார்ட்', கான்வென்டில் படிக்கும் குழந்தைகளைக் கொண்டுபோய் விடுவது, கரோல்பாக் சென்று காப்பிப் பொடி அரைத்து வருவது - இப்படி பல காரியங்கள் செய்தார்.



இன்று பெரிய மனிதர்களாக இருப்பவர்கள் ஒரு காலத்தில் ராம சேஷுவின் தோளில் குழந்தையாகச் சவாரி செய்தவர்கள் தான். ஆகவே

எல்லார் வீட்டிலும் சமையலறை வரை செல்லும் உரிமை உண்டு.

“விமலா, எங்கே உன் அகத்துக்காரர்? டூரா? சரியாப் போச்சு, காலேஜில் படிக்கச்சே ‘சிம்லா டூர் போகணும்’னு அப்படி பிடிவாதம் பிடிச்சவனம்மா உன் ஹஸ்பெண்டு. உங்க மாமனார், ‘அதெல்லாம் முடியாதுடா, வருகிற மாசம் பரீட்சை, படிடா பாடத்தை’ என்றார். அப்புறம் எங்கிட்ட வந்தான். ‘சேஷு, அப்பாகிட்டே நீ சொல்லு’ என்று கெஞ்சினான். நான் சொன்னப்புறம் தான் இவனுக்கு பர்மிஷன் கிடைச்சுது. இப்போ என்னடா என்றால் டூரே பொழப்பாப் போய்டுத்து.. என்ன டிபன் பண்ணியிருக்கே? மலபார் அடையா? ஒண்ணே ஒண்ணு கொடு, காப்பி வேண்டாம், டீயே போடு” இப்படி உரிமையுடன் கேட்டுச் சாப்பிடுவார்.

ஒரு இடத்திலும் இப்போது அவருக்கு வேலை கிடையாது, இருந்தாலும் ஏதோ வருமானம் வந்து கொண்டிருக்கும். யார் வீட்டிலாவது கல்யாணம் நிச்சயமாகி இருக்கிறது என்றால் “சேஷுவிற்குச் சொல்லியனுப்பு, கல்யாணம் முடிகிறவரை வீட்டோடு இருக்கட்டும்.... கடை கண்ணிக்குப் போகணும்,” என்பார்கள். சேஷுவும் ‘காம்ப்’ போட்டு இரவு பகல் என்று பாராது உழைப்பார்.

முகூர்த்தம் ஆனதும் தம்பதிகள் இவரை நமஸ்கரிக்க வரும்போது, “பணம் காசு கிடையாது, மனப்பூர்வமான ஆசீர்வாதம் தான் தரமுடியும். குழந்தையும் குட்டியுமா சௌக்கியமா இருக்கணும் நீங்க” என்பார். தன் ஏழ்மையைக் கண்டு அவர் வருந்தியதே இல்லை. ஆனால் அவர் சர்வ சாதாரணமாகச் சொல்லி ஆசீர்வதிக்கும் போது மணமக்கள் நெகிழ்ந்து போவார்கள்.

மல் பனியன், நாலு முழ வேட்டி, மேல் துண்டு இது தான் சேஷுவின் ஸ்டாண்டர்ட் உடை. நரை ஓடிய தலை. நெற்றியில் சந்தனப்பொட்டு. மூன்று நாளாக ஷேவ் செய்யாத வளர்ச்சி.

சேஷுவை எல்லாரும், ஐந்து வயதுப் பொடியன் உட்பட

'சேஷு' 'நீ' 'வா' 'போ' என்று தான் பேசுவார்கள். மரியாதைக் குறைவு அல்ல, அவ்வளவு அந்நியோந்நியம். அதே மாதிரி தான் சேஷுவும், எல்லாரையும் பெயர் சொல்லித்தான் அழைப்பார். ஏகவசனத்தில் தான் பேசுவார்!

சில சமயம் இவர் பெரிய அதிகாரிகளை அவர்களின் அலுவலகத்திலேயே சந்திக்கப் போய்விடுவார். ஆனால் அங்கு இவரை உள்ளே விட மறுப்பார்கள். அரசாங்க அலுவகங்களில் பாஸ் இல்லாமல் போக முடியாது. ரிசப்ஷன் குமாஸ்தாவிடம், "வெங்கட நரஸிம்மனுக்கு போன் செய், நான் பேசறேன்" என்பார். பிறகு போனில் "என்ன வெங்குட்டு, உள்ளே விடமாட்டானாம், அதனாலே நீ வா இங்கே" என்பார். தன் பி. ஏ. வை அனுப்பி சேஷுவை உள்ளே வரவழைப்பார் அவர்.

" சேஷு, ஆபீஸுக்கெல்லாம் எதுக்கு வரே?"

"நல்லா இருக்கே, அனந்தசயனம் ஸ்பீக்கரா இருந்தாரே, அப்போ நான் நேரே பார்லிமெண்ட் உள்ளேயே போவேன், உன் ஆபீஸ் என்ன சுண்டைக்காய் ஆபீஸ்?.. ஜஸ்டிஸ் ராகவனின் மாமனார், மாமியார் பத்ரிநாத் போகிறார்கள். 'சேஷு, நீ துணைக்குப் போய் வா' என்கிறார் ராகவன். குளிரா இருக்கும். பழைய கம்பளிக் கோட்டு ஒண்ணு கொடு, ஏகப்பட்ட ஏற்பாடுகள் பண்ண வேண்டியிருக்கு. என்னாலே வரமுடியாது. உன் டிரைவர் மூலமாக கொடுத்தனுப்பு," என்பார்.

ராமசேஷுவிடம் யார் என்ன உதவிகளை வேண்டுமானாலும் கேட்கலாம். அதே மாதிரி இவரும் யாரிடமும் உதவிகளைக் கேட்பார். இவரிடம் முகம் கோணியவர்கள் கிடையாது. ஏனென்றால் சேஷு அவர்கள் குடும்பத்தைச் சேர்ந்தவர் என்று அவரவர் கருதுவது தான் காரணம். சேஷு அவர்கள் வாழ்க்கையின் அங்கம்.

அவரிடம் உள்ளவை ஓயாத உடல், அழுக்கில்லாத மனம்.

சேஷு ஒரு தனிப் பிறவி!

# பட்டம்மா

"நீ நாசமாய் போக! எங்கேடா உன்னை ஆளையே காணோம்? டில்லிக்குப் போய் விட்டால் பெரிய மனுஷன் என்று எண்ணமோ? மாமியை வந்து பார்க்கக்கூட நேரமில்லாமல் போய்விட்டதா? நேற்று வரைக்கும் இந்தச் சாக்கடையில் கோலி விளையாடின சோம்பேறி தானேடா நீ....?" சரமாரியாகப் பொரிந்து தள்ளுபவள் பட்டு மாமி என்னும் பட்டம்மாள்!



பட்டு மாமி மனதில் கல்மிஷம் எதுவும் இல்லாமல்தான் வசை பாடுவாள். யாரையும் இப்படி பேசுவது அல்லது ஏசுவது என்பது அவள் வழக்கம். இப்படி அவள் திட்டுவதைக் கண்டு யாரும் கோபப்பட மாட்டார்கள்.

பட்டு மாமி ஒரு தனிக்கட்டை. ஊரில் நன்றாக வாழ்ந்தவள்தான். இப்போதும் பார்க்கப் போனால் அவளுக்கு ஒரு குறையும் கிடையாது. மூன்று பிள்ளைகள். டில்லி, பம்பாய், கல்கத்தா ஆகிய மூன்று இடங்களில் நல்ல உத்தியோ கத்தில் இருக்கிறார்கள். ஆனால் ஒருத்தன் கூட தாயாருக்குச் சல்லிக் காசு அனுப்புவதில்லை.

"போகிறாங்க, பெத்தேன், வளர்த்தேன். அவனவன் தடிப் பசங்க, தன் பெண்டாட்டி,

குழந்தை குட்டி என்று இருக்கிறாங்க, எனக்கென்னடா, மாமா விட்டுப் போன பணத்திலே வட்டி வருகிறது, மார்க்கெட்டில் உள்ள கடையிலிருந்து வாடகை வருகிறது,. ஒருத்தன் சோத்துக்கு நான் காத்துக்கொண்டிருக்க வில்லை. நானே நாள், கிழமை என்றால் ஐந்து பத்து என்று அவர்களுக்கு அனுப்பி வைக்கிறேன்."

அவள் குரலில் விரக்தியோ கசப்போ இருக்காது. இப்படித்தான் நமது வாழ்க்கை என்று நிர்ணயிக்கப் பட்டிருக்கிறது என்று நம்பினாள். பட்டம்மாள் என்றும் எதற்கும் வருத்தப்பட்டதே கிடையாது. ஏன் கணவர் இறந்து போன போது கூட. "நன்னா வாழ்ந்தார், எனக்கு ஒரு குறையும் வைக்காமல் எல்லாம் செட்டில் பண்ணிட்டுப் போய் விட்டார். மஞ்சள் குங்குமம் மட்டும் எடுத்துக்கொண்டு போய் விட்டார். உம்,போகட்டும்.... பசங்களுக்குத் தந்தி அடிக்க வேண்டாம். அவனவன் அலறியடித்துக்கொண்டு எதற்கு வரவேண்டும். மேலே ஆகவேண்டியதைப் பாருங்கள்" என்றாள்.

ஊருக்கு உபகாரியாக இருப்பதில் பட்டு மாமிக்கு ஒரு மகிழ்ச்சி. ஆனால் உபகாரம் செய்யும் போதும் ஏதாவதுவசை பாடிக்கொண்டுதான் செய்வாள்.

"உன்னைக் கட்டால வைக்க, உன் குழந்தைக்கு உடம்பு சரியில்லை என்றால் சொல்லியனுப்பக்கூடாதா? நான் வந்து சமையல் செய்து வைத்திருக்கமாட்டேனா? உனக்கு அப்படி என்ன கொழுப்பு", என்று கத்துவாள். நேரே சமைய லறைக்குள் சென்று பத்துப் பாத்திரங்களைத் தேய்ப்பாள்.

"ஏண்டாப்பா முனுசாமி படுபாவி, திடீர் என்று உனக்கு என்ன வந்தது? பொங்கல் இனாம் வாங்க இந்த வருஷம் வரவேயில்லையே? இந்தா, இரண்டு ரூபாய், உன் பொண்ஜாதியை நாளைக்கு அனுப்புடா, பழைய புடவை கொடுக்கிறேன்." என்று திட்டிவிட்டே இனாம் கொடுப்பாள்.

"உன் தலையிலே இடிவிழ! நீ காலரா வந்து போய்விட!" என்பது போன்ற வசவுகள் இல்லாமல் பட்டு மாமி சாதாரணமாகப் பேசமாட்டாள். எவ்வளவுக்கெவ்வளவு

அதிகம் திட்டுகிறாளோ அவ்வளவுக்கவ்வளவு அதிகம் உதவி செய்வாள். ஏழை, பணக்காரன், ஜாதி, மதம் என்ற வித்தியாசம் எதுவும் பட்டுவிற்குக் கிடையாது. சுளுக்கு, தேள்கடி ஆகியவைகளுக்கு பட்டு மாமி மந்திரிப்பாள். 'பயந்து' கொண்டிருக்கும் குழந்தைகளை மந்திரித்து சரி செய்வாள். எந்தக் குழந்தையானாலும் தன் மடியில் போட்டுக் கொண்டு தான் மந்தரித்து விடுவாள் பட்டு மாமி. இந்த சமயங்களில் சாதாரண வேலைக்காரி குழந்தையானாலும் தன் மடியில் விட்டுக் கொள்வாள். பொய்யான ஆசாரங்களுக்கு அவளிடம் இடமில்லை. அதே மாதிரி அமாவாசை, கார்த்திகை, ஏகாதசி என்று விரதம் இருக்க மாட்டாள். ஆனால் திடீரென்று இரண்டு நாள் பச்சைத் தண்ணீர்கூட வாயில் படாமல் விரதம் இருப்பாள்.

இம்மாதிரிதான் சினிமா, டிராமா என்று அடிக்கடி போவாள். சில சமயம் தொடர்ந்து ஒரு மாதம் கூட சினிமாவுக்குப் போகாமல் இருப்பாள். "என் மனசுக்கு நான் அடிமையாக மாட்டேன். என் நாக்கிற்கும் நான் அடிமையாக மாட்டேன்," என்று அவள் சொல்லுவாள். அது ஜம்பப் பேச்சில்லை. நூற்றுக்கு நூறு உண்மை.

"ஏன், பட்டு மாமி, நாலு நாளா உங்க சாபம் இந்தப் பக்கம் கேட்கவே இல்லையே?" என்றால், "ஊரிலிருந்து உங்க தாத்தா அனுப்புகிறார் அரிசி. அதுதான் உனக்கு வாய் வளர்ந்திருக்கிறதுடி. என்னை மாதிரி கல்லும் மணலும் சேர்ந்த அரிசி நாலு ரூபாய் லிட்டர் வாங்கிச் சாப்பிட்டால் இப்படிப் பேசுவியா? நாலு நாளா ஜுரம். இருக்கியா, செத்தாயா என்று கேட்டாயா? போகட்டும், நான் போக வேண்டிய ஜன்மம். நீங்கள் எல்லாரும் நன்னா இருந்தால் அதுவே போதும். தவலை அடை பண்ணினேன். உங்க அகத்துக்காரருக்குக் கொடு. அவனுக்கு தவலை அடை என்றால் பித்து. அந்தக் கர்வம் பிடிச்ச பயல்தான் எனக்கு வேற மூக்குக் கண்ணாடி வாங்கிக் கொண்டு வரமாட்டேன் என்கிறான்.... பெரிய துரை! டயம் இல்லை.. சரி.. நான் வரேண்டி. காத்தாயிக்குத் தேள் கடிச்சிதுன்னு மந்திரிச்சேன். எப்படி இருக்கா என்று பார்த்துவிட்டு வரேன்...."

## ஜயசந்திரன்

"இந்த வாட்டர் ப்ராபளம் இப்படிப் படாத பாடு படுகிறது. இதைச் சுலபமா சால்வ் பண்ண முடியும். அமெரிக்காவிலிருந்து ஆளுங்களை வரவழைக்க வேண்டிய அவசியமில்லை..

"கடலில் தண்ணீர் இருக்கு. அதிலிருக்கிற உப்பைப் பிரிச்சு எடுத்தால் போதும். உப்புக்கு உப்பும் கிடைக்கும்; குடி தண்ணீரும் கிடைக்கும். பிரிக்கிறதுதான் முக்கியம்.



"அனுவை எப்படிப் பிளந்தான்? அதே பிரின்ஸிபள்தான். ஒரு எலக்ட்ரானிக் முறையில் பிரிச்சுடலாம்.

"தண்ணீரையும் பாலையும் கலந்து வெச்சால் அன்னம் எப்படி பாலை மட்டும் குடிக்கிறது? கேவலம் ஒரு பறவை செய்யற காரியத்தை மனுஷனால் செய்ய முடியாதா? நான் யோசிச்சேன். இதுக்காக நூற்றுக் கணக்கான அன்னங்களை

வாங்கி ஆராய்ச்சி பண்ணினேன். அந்த சமயத்தில் தான் கடல் தண்ணீரைப் பிரிக்கிற மெதட் தெரிஞ்சது.

"நம்மவங்க என் ஐடியாவை அலட்சியம் பண்ணிட்டாங்க. அதை அமெரிக்காவிற்கு அனுப்பி வெச்சிருக்கேன்.

"இரும்பு இல்ல இரும்பு. அதில் எப்படி துரு பிடிக்கிறது? தண்ணீர் படவே தான். சரி, துருவை எடுத்துக் கொண்டு அதை ஒரு முறைப்படி பிராஸஸ் பண்ணால், நிச்சயம் இரும்பும் தண்ணீரும் கிடைக்கும். இதற்கும் ஒரு வழி வைத்திருக்கிறேன்.

"இது மாதிரி நிறைய ஆராய்ச்சி வெச்சிருக்கிறேன். 'ஐயா, எடுத்துக் கொள்ளுங்கள் நம் ஐடியாவை' என்று சொல்ல மாட்டேன். உனக்கு நாட்டு முன்னேற்றத்தில் அக்கறை இருந்தால் நீ வா ஜயச்சந்திரன்கிட்டே."

ஆம், பேசுவது திருவாளர் ஜயச்சந்திரன் தான்!

கலைந்த தலை, துண்டு மீசை, அடர்ந்த புருவம், காலர் கிழிந்த கட்டம் போட்ட சட்டை, வயிற்றுக்குக் கீழே இறங்கிய தொள தொள பாண்ட், அது மேலும் கீழே இறங்கியபடி பெரிய பட்டை பெல்டால் கட்டப்பட்டிருக்கும். காலில் பூட்ஸ், அதன் மேல் பாகம் ஒட்டு. இடது கையில் ஒரு பெரிய தோல் பை. கிட்டத்தட்ட அவர் வயது அதற்கும் ஆகியிருக்கும். அவர் சட்டைப்பை, கைப்பை மாதிரி ஏகப்பட்ட காகிதம், (பிளான்கள்?) கடிதங்கள் ஆகியவைகளால் பரிதாபமாகப் பிதுங்கிக் கொண்டிருக்கும்.

ஜயச்சந்திரன் பார்க்காத வேலையில்லை, எதிலும் நிலைத்ததில்லை. பாவம், சதா ஆராய்ச்சியில் அவர் மனம் ஈடுபட்டிருப்பதால், சாதாரண வேலைகளில் அவரால் தொடர்ந்து நிலைக்க முடியவில்லை.

தற்சமயம் அவர் முன்னாள் ஜோத்புர் திவானிடம் இருக்கிறார்.

"மாஜி திவான் ரொம்ப கெட்டிக்காரர். எனக்கென்று

தனி பங்களாகூட கொடுத்திருக்கிறார். நம்ப மாட்டீங்க, மாஜி திவானை பம்பாய் பீச்சில் தற்செயலாக பார்த்தபொழுது என் ஆராய்ச்சிகளைப் பற்றிச் சொன்னேன். அசந்து போய்விட்டார்.... அவருக்கு ரொம்ப நாளா ஒரு ஐடியா, இந்தக் கண்ணாடிப் புட்டிகள் உடைந்து போனால் என்ன செ.ய்கிறோம். தூக்கித்தானே போடுகிறோம்? அவர் கேட்டார், 'மிஸ்டர் ஜயச்சந்திரன், இந்த கண்ணாடி புட்டிகளை நைஸ் பவுடராகச் செய்து ஒரு புட்டி ஸ்பெஷல் கோந்துடன் கலந்து விசேஷ திரவத்தைப் போட்டு கலக்கி மறுபடியும் புட்டிகள், டம்ளர்கள் இப்படி வார்ப்பு எடுக்க முடியாதா?" இதைக் கேட்டு எனக்கே மலைச்சுப் போச்சு. இத்தனை வருஷமா எனக்கே தோன்றாத ஐடியா, இல்லையா?

"மூணு மாசமா ஜோத்பூரில் தீவிரமாக ஆராய்ச்சிகள் செய்கிறேன். ஒரு மாதிரி வெற்றிகரமாகப் பண்ணினேன். அப்படி தயார் செய்த புட்டியில் தண்ணீர் ஊற்றினேன். புட்டியே கறைஞ்சு போச்சு! இதனால் வேறு லைன்லே ஆராய்ச்சி பண்றேன். பார்த்துக் கொண்டிருங்களேன். இதற்கு உரிமைப் பதிவு செ.ய்து கொள்ளப் போகிறோம். கோடி கோடியாக டாலர் கொடுத்து அமெரிக்காக்காரன் உரிமை வாங்கிக்க வருவான்.

"வாங்க, காப்பி சாப்பிடலாம்."

ஓட்டலுக்குப் போனால் ஒன்று உறுதி. பில் நீங்கள் தான் கொடுக்க வேண்டும்.

"இந்த மாசம் ஆராய்ச்சிக்காக நிறைய கெமிக்கல் வாங்கிவிட்டேண். காசு 'ஷார்ட்டாக' இருக்கிறது. நூறு ரூபாய் கொடுங்கள். ஊருக்குப் போய் எம். ஓ. பண்ணிவிடுகிறேன்." என்பார்

ஜயச்சந்திரன் தன் கைப்பையைத் திறந்தால் உங்களுடைய ஒரு மணி நேரத்தையாவது தியாகம் செய்ய வேண்டி இருக்கும்.

"இந்த ஃபைலைப் பாருங்கள், நைன்டீன் தர்டி டூ

விலிருந்து குறிப்பு வைச்சிருக்கேன். கென்னடிக்கு ஒரு லெட்டர் போட்டேன். முன் லாண்டிற்கு நான் ஒரு 'ஐடியா' கொடுத்தேன். சும்மா ஃப்ரீயாத்தான்! 'வேண்டும் என்றால் நானே ஒரு நடை அமெரிக்கா வருகிறேன்' என்று சொன்னேன். ஆனால் அமெரிக்கா காரர்கள் கில்லாடிகள், நான் எழுதி அனுப்பிய குறிப்பை நன்றாகப் புரிஞ்சிகிட்டாங்க. இல்லாவிட்டால் ஆர்ம்ஸ்ட்ராங் சந்திரனில் இறங்கினாரே அது ஃபெயில் ஆகியிருக்கும். நம்ப ஐடியா என்னன்னு கேட்காதீங்க. இப்ப நான் சொன்னால் அமெரிக்காவையே கேவலப்படுத்தற மாதிரி இருக்கும், சார். ஆராய்ச்சிக்காரர்கள் ஒருத்தரை ஒருத்தர் காட்டிக் கொடுக்கிறது வழக்கமில்லை. பார்க்கப் போனால், உலக முன்னேற்றத்துக்குத் தானே அவங்களும் இத்தனை முயற்சிகளை எடுத்துக்கறாங்க, என் மாதிரி...."

ஜயசந்திரனின் ஆராய்ச்சிகள் யாவும் அந்தப் பையில்தான் இருக்கின்றன. எவ்வளவு கடிதங்கள், எவ்வளவு குறிப்புகள், பத்திரிகைச் செய்திகள்! (ஒரு பத்திரிகைக் குறிப்பின் பின் பக்கம் ஹரிதாஸ் சினிமாப் படத்தின் விளம்பரத்தைப் பார்க்கலாம்.)

இந்தியாவின் வீட்டுப் பிரச்னையைத் தீர்க்க ஒரு சின்ன 'புக்லெட்'டை அவர் தயார் செய்திருக்கிறார். அதை அச்சடித்து எல்லா எம்.பி.க்கள், அமைச்சர்கள், பிரமுகர்களுக்கு அனுப்பியிருக்கிறார். (இந்தியாவில் மொத்தம் 46786 கோடி மரங்கள் இருக்கின்றன. அவைகளை அறுத்து வீடு கட்டினால் மொத்தம் 32676 லட்சம் வீடுகளை......')

ஜயசந்திரனின் பிளான்கள் வெற்றிகரமாக அமைகின்றனவோ இல்லையோ, அவரது வாழ்க்கை வெற்றிகரமாக அமைந்துவிட்டது. இரண்டு பெண்களையும் நன்றாகப் படிக்க வைத்து ஜாம் ஜாமென்று கலியாணம் செய்து வைத்து விட்டார். ஜோத்பூர் மாஜி திவான்கள் இருக்கும்வரை ஜயசந்திரன்களுக்குத் தோல்விதான் ஏது? கவலைதான் ஏது!

# அருமைநாயகம்

அருமைநாயகம் நன்றாகப் படித்தவர். திறமையை விட சர்வீஸ் காரணமாகப் பதவி உயர்வு பெற்று பம்பாய் அணு கமிஷனில் ஓர் உயர் அதிகாரியாக இருக்கிறவர். வெள்ளை மனது ஆசாமி. தலை முடியும் வெள்ளை. பக்திமான். கிறிஸ்துவும் கிருஷ்ணனும் மேரியும் மாரியம்மனும் அவர் வணங்கும் தெய்வங்கள்.



''என்னைப் பொறுத்த வரை எல்லா சாமியும் ஒன்றுதான்." என்பார். அவரது அறையில் சுவரை மறைத்துக் கொண்டு பலவித தெய்வப் படங்கள் மாட்டப் பட்டிருக்கும்.

அருமைநாயகம் அப்பாவி மனிதராகக் காட்சி அளிப்பார். "இவர் எப்படி இந்த பதவிக்கு வந்தார்?" என்று பலருக்கு அவ்வப்போது சந்தேகம் எழும். "போகிறார், நல்ல மனிதர். சமயத்தில் சிறு பிள்ளை மாதிரி ஏதாவது பேசுவார். தொலைந்து போகட்டும். புரமோஷன்

கொடுக்கலாம்," என்று சொல்லியே பதவி உயர்வுகள் தரப்பட்டனவே தவிர, இவர் திறமைக்காக அல்ல!

சாதாரண பியூனிடம் கூட "ஏம்பா, இந்த பைலைக் கொண்டுபோய் கொடுக்கிறியா?... இல்லை, வேண்டாம், நீ உட்கார்ந்துகிட்டு இரு. நான் அந்தப் பக்கம் போகும்போது கொடுக்கிறேன்... சரி, பொடி இருந்தால் கொடு, என்பார்"

"இன்னா, ஸார்.. நீயே ஒரு டப்பா வாங்கி வெச்சுக்கக் கூடாதா? தெனத்திக்கும் என்னைக் கேக்கறியே" என்பான் அந்த மராத்தி பியூன். படு கிழவன். ஆகவே உரிமையுடன் பேசுவான்.

இவ்வளவு நல்லவரான அருமைநாயகம் ஒரே ஒரு தவறு செய்தார். தனது ஐம்பதாவது வயதில் இருபத்திரண்டு வயது பெண்ணைத் திருமணம் செய்து கொண்டார்.

"பேச்சலராகவே இருந்திடணும்னு நினைச்சேன். அவன் இன்றி அணுவும் அசையாது என்பாங்க. அணு கமிஷன்லே இருக்கிற நான் மட்டும் விதி விலக்கா? அவன் சித்தம் இப்படி இருக்கிறப்போ நான் என்ன செய்ய முடியும்? அம்மாளை ரெயிலில் பார்த்தேன். ஒரே பெட்டியில் போனோம். அம்மாவுக்கு மனுஷங்க யாரும் இல்லை. எங்களுக்குப் பிடிச்சுப் போச்சு. கர்த்தர் என்னை கிரஹஸ்தனாக்கி விட்டார். இத்தனைக்கும் அவங்க இந்து," என்பார்.

இந்த வயதில் அவர் கலியாணம் செய்து கொண்டதைப் பார்த்து ஆச்சரியப் படுவதைவிட, இவரை எப்படி திருமணம் செய்துகொள்ள அந்த அம்மா முன் வந்தார் என்பதை நினைத்துத் தான் வியப்படைய வேண்டும்.

வயதான காலத்தில் கிடைத்த புதிய மனைவியாதலால் வார்த்தைக்கு வார்த்தை அருமைநாயகம், 'வீட்லே' 'வீட்லே' என்று தான் பேசுவார்.

"நேற்று பாருங்க, வீட்லே பிறந்த நாள். சரி, செம்பூர் கோவிலுக்குப் போகலாம் என்று கிளம்பினோம். கிங்

சர்க்கிள் காந்தி மார்க்கெட்டில் ஒரு புடவை வாங்கலாம் என்று வீட்லே சொன்னாங்க. நூற்றி எழுபது ரூபாய் ஆச்சு. கையிலே முப்பது ரூபாய் குறைஞ்சுது. வீட்லே தான் கொடுத்தாங்க. அப்புறம் பாருங்க, வீட்லே தலைவலி வந்திடுச்சு. சரின்னு மாத்திரை வாங்கிக் கொடுத்தேன் வீட்டுக்கு வந்ததும் அப்படியே வீட்லே படுத்துட்டாங்க. நான் அடுப்பைப் பற்ற வைத்து காப்பி போட்டுக் கொடுத்தேன். காலையிலே லேசா வலி இருந்தது. கன்சர்ன்ஸ்லே போய் சாப்பாடு எடுத்து வந்து சாப்பிட்டோம்."

சில சமயம் வேட்டி கட்டுவார். வெறும் மல் பனியனுடன் செருப்புக் கூட இல்லாமல் எங்கு வேண்டுமானாலும் போவார்.

"வீட்லே நேற்று கோவிச்சுகிட்டாங்க, கிழிசல் வேட்டியைக் கட்டிக்கிட்டு ஏன் வெளியே போறீங்கன்னு. உடனே நான் ஊசியை எடுத்து தைத்துப்புட்டேன். ..... பம்பாய் மழை, வீட்லே ஒத்துக்கல்லே. அதனாலே இரண்டு மாசம் ஊருக்கு அனுப்பிடப் போறேன். எனக்கு என்ன, அரை ஆழாக்கு சோறு பொங்கி வச்சிக்கிடுவேன். தயிர் இருக்கவே இருக்கிறது...

...ஆமாம் உங்களை ஒண்ணு கேட்கணும், மாதுங்கா மாணவர் மன்றத்திலே அஜந்தா, எல்லோரா டூர் போகிறாங்களாமே? விவரம் விசாரித்துச் சொல்லுங்க. வீட்லே போய்வர ஆசைப்படுவாங்க!"

அருமைநாயகத்துக்கு இருபத்துநாலு மணி நேரமும் 'வீட்லே' நினைவாகவே இருப்பார், பேசுவார்.

அவருடைய உலகம் 'வீட்லே தான்' இருக்கிறது!

# ஜோதி ஆசீர்வாதம்

அந்த போர்டு ஸ்கூல் மணி 'ணங் ணங்' என்று அடித்ததைத் தொடர்ந்து ஊளையிட்டுக்கொண்டு வரும் சிறுவர், சிறுமியர் பட்டாளத்தின் பின்னால் ஒற்றை நாடியாக, சராசரிக்கும் அதிகமான, உயரமாக, கொசுவம் வைத்த உயரக்கை ப்ளவுஸும், ப்ரூச்சில் கொசுவப்பட்ட பூப்போட்ட புடவையுமாக, தலையில் பிச்சோடாவும், கையில் குடையுமாக வருபவர் தான் பள்ளிக் கூடத்தின் 'மிஸ்' ஸான திருமதி ஜோதி ஆசீர்வாதம். அவர் பெயர் ஜோதி என்பதே பலருக்குத் தெரியாது. காரணம், அந்த சின்ன ஊரில் ஒரே பள்ளியின் 'மிஸ்'ஸாக இருபது வருடங் களாக இருப்பதால் ஊராருக்கு அவர் 'மிஸ்' தான். ஆனால் சில சமயம் மிஸ்ஸுக்கு வேறொரு பெயரும் தரப்படும். 'நர்ஸ்'! ஆம், பிரசவம் பார்க்கத் தெரிந்த ("மெட்ராஸ் ஜி. எச்லே நானு ட்ரெய்னிங்கு எடுத்தேன், ஆம்மாம்.") ஒரே பெண்மணி அவர்.



படிப்பு அறியாத பெண்கள் இவரை நரசம்மா என்றும் அழைப்பார்கள்.

"என்ன. பாப்பம்மா, நரசம்மாவைக் கூப்பிடறே, நர்ஸ் என்று சொல்ல என்னிக்கித் தான் நீங்க கத்துக்கப் போறிங்களோ? நாளைக்கு நரசிம்மான்னு கூட கூப்பிட ஆரம்பிச் சுடுவீங்க. ஒங்களைக் கர்த்தரு தான் காப்பாத்தணும்...

அதிருக்கட்டும், என்னா விஸயம்? இஸ்கோல் இன்ஸ்பெக்டர் வர்ராரு. வேலை இருக்குது. பேஸ்ஸிக்கிட்டு இருக்க நேரமில்லை. ஸமையல் செய்யக்கூட நேரமில்லாமல் ரெண்டு கேக்கைத் துண்ணுட்டு போய்க்கிட்டிருக்கேன் ஸ்கூலுக்கு... என்னா சொல்றே, ஓம் பொண்ணு வந்திருக்குதா? ஆயிடுச்சா மாஸ்ஸம். வலி எடுத்ததும் சொல்லியனுப்பு. ஆமாம், அதிருக்கட்டும், உம் பொண்ணுக்குத் தானே போன வருஸம் பொங்கலன்னிக்குக் குளந்தை பொறந்திச்சு. மறுபடியும் பொங்கலுக்கு வந்திருக்குதா? ஸரியாப் போச்சு, வருஸா வருஸம் மாரியம்மனுக்குக் கூழ் வார்க்கறாப் போல வருஸா வருஸம் எனக்கு பீஸ் கொடுக்கறே....”

நர்ஸ் பணியில் ஈடுபடும் போது பளீரென்று வெள்ளை ரவிக்கை, புடவை, (தலையில் மல்லிகைப்பூ) ஆகியவையுடன் தான் போவாள்! ஆயிரம் ஒட்டுப்போட்ட டாக்டர் பை, அதனுள்ளே முக்கியமான பொருள் எதுவும் இருக்காது. பஞ்சு, கத்தரி, பாண்டேஜ், டெட்டால் அவ்வளவு தான். ஒரு பழைய ஸ்டெதாஸ்கோப்பை இடது கையில் வைத்துக் கொள்வாள். சில சமயம் வெறுமனே ஸ்டெதாஸ்கோப்பை வைத்துப் பார்த்து விட்டு இரண்டு ரூபாய் பீஸ் வாங்கி விடுவாள். அது பெரிய விஞ்ஞானக் கருவி என்பது கிராம மக்களின் கணிப்பு.

பிரசவம் பார்க்கும் போது, மிஸ்ஸம்மா, நர்ஸாக மாறும் போது எக்கச்சக்கமாக, தப்பும் தவறுமாக ஆங்கில வார்த்தைகளைப் போட்டுப் பேசுவாள். “ஒண்ணும் கவலைப்படாதே, டெலிவரி ஈஸி இல்லை. மெட்ராஸ்லே இதைவிட டிஃபிகல்ட் கேஸ் கொடுப்பாங்க, டிரெய்னிங்கப்போ, மை காட், உயிர் கோ, உயிர் கம்.”

“நரஸம்மா வலி தாங்கல்லே., நீங்க தான் காப்பாத்தனும், ஐய்யோ...அம்மா.”

“இப்படி எல்லாம் கத்தினா எப்படி? பெரிய படிப்பெல்லாம் படிச்கட்டு எதுக்கு வந்திருக்கிறோம். வலி இல்லாம குளந்தை பிறக்குமா? குளந்தை நல்லா பிறக்கும்படி பார்த்துக்கத் தானே நாங்க இருக்கிறோம்” என்று அவர்

கூறுவது, மருத்துவ உலகத்தினர் அனைவரையுமே பெருமிதத்தில் ஆழ்த்தும்!

"நரசம்மா.. இந்தாங்க இருபது ரூபாய்," என்று பீஸ் கொடுக்கும் போது, "சரியாப் போச்சு, இருபது ரூபாயா? ஊரெல்லாம் கு. க. திட்டம் பரவிடுச்சு, என் தொழில் வருமானம் குறைந்து விட்டது. ஐம்பது ரூபாய்க்குக் குறைந்தால் கட்டுப்படியாகாது. முன்னே போலையா இருக்குது காலம்? மாசம் இரண்டு, மூணு பிரசவம் இருக்கும். இப்போ ஒண்ணுகூட தேறமாட்டேங்குது."

பள்ளிக்கூட ஆசிரியை ஆக இருப்பதால் கு. க. பிரசாரம் செய்ய வேண்டிய பொறுப்பும் ஜோதிக்கு உண்டு. "நம்ம பொளப்பிலே நாமே மண்ணைப் போட்டுக்கிறது என்பது இது தான். நாட்டுக்கு நல்லது, ஒத்துக்கிடறேன். எனக்கு மேல் வரும்படி என்ன ஆவுது? பணம் செலவளிச்சி 'ஜி. எச்.'லே எடுத்த ட்ரெய்னிங்கு என்னாவது? மாதாகோவில்லே மோதிரம் மாத்திக்கிட்ட வேளை சரியில்லை. ஆசீர்வாதம் அப்பப்போ வாதம் வந்து படுத்துடுது. நான் தான் உளைக்க வேண்டியிருக்கிறது. ஆரோக்கியமாதா தான் காப்பாத்தணும்...."

பள்ளிக்கூடத்துக்கு மிஸ்ஸம்மா ஒரு சர்வாதிகாரிதான். ஏனெனில் அந்த ராஜ்யத்தில் அவளுக்கு எதிராகப் பேசக்கூடிய ஆத்மா யாரும் இல்லை.

"யாருடா அங்கே, துரைக்கண்ணு, நீ தான் பாடம் எளுதாமே, தலை சிவாமே வந்து குந்திக்கினு லோலோன்னு பேசிக்கிட்டிருக்கியா? உனக்கு துரைக்கண்ணுன்னு பேர் வச்சதுக்கு பதிலா 'எருமைக்கண்ணு'ன்னு வெச்சா சரியா இருந்திருக்கும். எந்நேரமும் பேச்சுத்தானா? பாருங்கடா, மதுரை வரான். ஏண்டா மதுரை, என்ன நிதானமா வர்றே? பகல் சோறு டயமுக்கு வந்திட்டே.... நீ பொறக்கும்போது இரண்டு மணி நேரம் உங்கம்மா உசிரை வாங்கிட்டு பொறந்தே. அப்போ உங்கம்மா உசிரை வாங்கினே; இப்போ என் உசிரு போவுது. நேத்து களத்து மேட்டிலே என்ன சண்டை போட்டுகிட்டு இருந்தே?.. சரி, சரி. எல்லாரும் வாய்ப்பாடு சொல்லுங்க.. ஒண்ணோண் ஒண்ணு..."

# பரந்தாமன்

வாழ்க்கையில் ஒவ்வொருவருக்கும் ஒரு லட்சியம் இருக்கும். திருவாளர் பரந்தாமனுக்கு உள்ள லட்சியம் எத்தனை சங்கங்களில் பிரசிடெண்டாக ஆகிறோமோ அத்தனைகளில் ஆக வேண்டும். அவருக்குப் பிரதம மந்திரி பதவியோ, ஏன் ஜனாதிபதி பதவியோ கிடைத்தால் கூட அதை ஏற்கத் தயங்குவார். ஆனால் 'ஆபீஸ் நேரத்தில் தூங்கி விழுவோர் சங்கம்' என்பது போன்ற சங்கம் ஏதாவது ஒன்றில் பிரசிடெண்டாக இருக்கிறீர்களா என்று கேட்டால் போதும், இந்திர பதவியே கிடைத்த மாதிரி பூரித்துப் போவார்.



டில்லியில் உள்ள அறுபத்து நான்கு தென்னிந்திய சங்கங்களில் ஒன்பதில் இவர் பிரசிடெண்ட்; பத்தொன்பதில் நிர்வாகக் கமிட்டி உறுப்பினர். இத்தனை சங்கங்களில் இவருக்கு எப்படி சந்தா கொடுத்துக் கட்டுப்படியாகிறது என்று ஆச்சரியப்பட வேண்டாம்.

எப்போது கமிட்டியில் தேர்ந்தெடுக்கப்பட்டு விட்டாரோ, இனி சந்தா வாவது ஒண்ணாவது! அவர் பெயரில் பாக்கி இருக்கும்.

சந்தா தொகை களைக் கட்டித் தீர்க்க வேண்டுமானால் குறைந்த பட்சம் அவர் வீட்டு டி.வி.யை விற்றால்தான் முடியும். பல சங்கங்களில் தேர்தல்கள் நடக்கும்போதுதான் சந்தா வசூலிப்பார்கள். ஒரு சமயம் தேர்ந்தெடுக்கப்பட்டு விட்டால் பிறகு அந்த சங்கத்தில் தேர்தல் வராமலே பார்த்துக் கொள்வார்!

பளிச்சென்ற வெள்ளை அரைக்கை சட்டை, வேட்டி, கறுப்புப் பளபளப்பு தேயாத செருப்பு, ரிம்லெஸ் மூக்குக் கண்ணாடி, கையில் கார் சாவி இதுதான் திருவாளர் பரந்தாமன். பெரிய கம்பெனி ஒன்றின் டில்லிப் பிரதிநிதி. மாளவியா நகரில் மாளிகை. மூன்று போன்கள். எல்லாம் கம்பெனி போன்கள்.

பரந்தாமன் ஒரு கூட்டத்திற்கு முதல் தடவையாக வருகிறார் என்றால் அந்த சங்கத்திற்கு உடனடியாக அதிர்ஷ்டம் அடிக்கும். எப்படி?

"இந்த அசோசியேஷன்ல லைப் மெம்பருக்கு முன்னூறு ரூபாயா? என்னைப் போட்டுக் கொள்ளுங்கள்.. யார் செகரட்டரி? ஓ! நீங்களா? எந்த மினிஸ்ட்ரி?... நம்ம ராமபத்ரனுக்குக் கீழே இருக்கிறீர்களா? நாளைக்கு ராமபத்ரன் கிட்ட சொல்லுங்க, எனக்குப் போன் பண்ணச் சொல்லி. 'மினிஸ்டர் கிட்ட சொல்லுங்கள்' என்று ஓடி வந்தான். டிரான்ஸ்ஃபர் கேன்ஸல் ஆச்சு. ஒரு வார்த்தை. ஒரு தேங்க்ஸ்... பேச்கூடாது!... ஆமாம்...செகரட்டரி ஸார். தமிழ்நாட்டு வெள்ள நிவாரண நிதிக்கு நம்ம தியேட்டர் டிராமா போட்டுப் பணம் வசூல் பண்ணி அனுப்ப வேண்டும். நான் ஆயிரம் ரூபாய் தருகிறேன்... இன்னிக்கி என்ன அஜண்டா? ஆபீஸ் பேரர் எலக்ஷனா?... நடக்கட்டும்" என்பார்.

பின்பு விவாதங்களில் பங்கு கொள்வார். "வருஷத்தில் நாலு டிராமாவாவது போடணும். சாவனீர் விளம்பரப்

பணம் மூணு வருஷமா வராமல் பாக்கியிருக்கிறதை ரைட் ஆஃப் பண்ணிடலாம். இந்த வருஷம் சாவனீர் என் பொறுப்பு... பத்து விளம்பரம் நான் வாங்கித் தர்ரேன்." இந்த ரீதியில் பேசி எல்லாரையும் பிரமிக்க வைப்பார்.

பிறகு தேர்தல் வரும். தலைவருக்கு இவர் பெயரை யாராவது ஒரு அப்பாவி முன்மொழிவார். "நோ... நோ. எனக்கு டயம் இல்லையப்பா. நான் ஒரு வாலன்டியரா இருக்கேன். நம்ம செகரட்ரி பார்க்கிறதைப் பார்த்தால் பயமாக இருக்கிறது. மரியாதையாகச் சரின்னு சம்மதம் சொல்லிடணும்னு நினைக்கிறேன்.... ஒரு விஷயம். பல சங்கங்களுக்குத் தேர்தல்கள்தான் விரோதிகளாக அமைந்து விடுகின்றன. அதனால யுனானிமஸ் எலக்ஷன் என்றால் ஒத்துக்கறேன்." என்பார். இவருடைய ஆயிரம் ரூபாயையும் 10 விளம்பரங்களையும் எதிர்பார்க்கும் செகரட்டரி, "நம்ப பிரிசிடெண்ட் சொல்வதுதான் சரி" என்பார்! அதாவது பரந்தாமன் தலைவராகத் தேர்ந்தெடுக்கப் பட்டுவிட்டதாக மறைமுக அறிவிப்பு இது!

வைதிக சங்கம், பேட்டை தொண்டர் படை, பஸ் பயணிகள் சங்கம், பக்தி பஜனை மண்டலி, நண்பர் கலாசாரக் கழகம், இயற்கை வைத்திய மன்றம், மதர் தெரசா சேவா சங்கம், ஹனுமான்ஜி மந்திர் கமிட்டி இப்படிப் பலவற்றில் பரந்தாமன் வியாபித்திருப்பார். காரியக் கமிட்டிக் கூட்டங்களில ஆடிக்கொரு தடவைதான் கலந்து கொள்வார். ஆனால் அந்த சங்கம் ஏதாவது நிகழ்ச்சி நடத்தினால் 'மினிஸ்டரை நான் போய் அழைச்சிகிட்டு வரேன்,' என்று 'தொண்டு' செய்ய முன்வருவார். மேடையில் இவர் தான் இங்குமங்கும் போய் வருவார். வேலை ஒன்றும் செய்யமாட்டார். வேண்டாத யோசனைகளையும் உத்தரவுகளையும் போடுவார்.

பரந்தாமனுக்கு மைக் என்றால் ஒரே நடுக்கம். நாலு வார்த்தை குழறாமல் பேச வராது. அதற்காகப் பேசாமல் இருந்து விடுவாரா? சபையோர் எவ்வளவு கைதட்டினாலும் ஊளையிட்டாலும் ஏதாவது அறுக்காமல் விடமாட்டார்!

# வரதராஜுலு



*குறிப்பு: திரு. கோபுலு வரைந்திருந்த இந்த ஓவியத்தை திரு. சாவி எனக்கு அனுப்பி, அதற்கேற்ற மாதிரி கேரக்டர் எழுதச் சொன்னார்.*

பிளாஸ்டிக் ஹாண்ட்பாக், வலைப்பையில் டிபன் பாக்ஸ், உயிரை எந்த நிமிடத்திலும் விடத் தயாராக இருக்கும் ஆயிரம் ஒட்டுக்குடை, பட்டை பெல்ட், உயரம் குறைவான 'பிடிக்கும் பாண்ட்' இவைதான் திருவாளர் வரதராஜனின் ஸ்டாண்டர்ட் அலங்காரங்கள். பாலைவனத்தின் நடுவே ஓடும் சிற்றாறு போல், பரந்த வழுக்கைத் தலையின் நடுவில் நெளிந்து பறக்கும் மூன்று தலைமுடிகளும், புருவங்களுக்கிடையே உள்ள இரண்டு சுருக்கங்களும் அவரைக் கோபக்காரராகக் காட்டுவதைக் கவனிக்காமல், அவரிடம் பேச்சுக் கொடுத்தால், வந்தது வம்பு.



வரதராஜுலுவுக்கு பல விஷயங்களின் மேல் சதா கோபம்.

அவர் கைப்பையிலி ருக்கும் கடிதங்களின் பிரதிகளைப் பார்த்தால் தெரியும், அவர் கோபத்திற்குக் காரணங்கள். காரசாரமான கடிதங்கள் எழுதுவது தான் வரதரா ஜுலுவின் ஒரே வேலை.

ஜெயில் வார்டராக இருந்து ரிடையரான இவருடைய கண்களுக்கு பலர் குற்றவாளிகளாகக் காணப்படுகிறார்கள். பதவி இல்லாததால் அவர்களைச் சிறைக்குள் அடைக்க முடியவில்லை. ஆகவே தன்னுடைய கோபத்தைக் கடிதங்கள் எழுதுவதன் மூலம் தீர்த்துக் கொள்கிறார். யாருக்கு வேண்டுமானாலும் எழுதுவார். ஐ. நா. காரியதரிசி முதல் காட்டாங்குளத்தூர் கர்ணம் வரை எழுதுவார்.

காலை ஒன்பதரைக்குச் சாப்பிட்டுவிட்டு, டிபனைக் கட்டிக் கொண்டு வெறும் மோர் சாதம் தான் கிளம்பினார் என்றால் நேரே லைப்ரரிக்குத்தான் போவார். எல்லா பத்திரிகைகளையும், அகப்பட்ட பக்கத்திலிருந்து முன் பின்னதாகவாவது படித்துவிடுவார். இதற்குள் லஞ்ச் டைம் வந்து விடும். டிபனைச் சாப்பிட்டு விட்டு பார்க்கிற்கு வந்து விடுவார். பேனாவை எடுத்து வரி வரியென்று வரிந்து கட்டுவார். கடிதங்களுக்கு ரெஃபரன்ஸ் நம்பர் இல்லாமல் எழுத மாட்டார். பல சமயங்களில் முன்பு எப்போதோ, நான்கு ஐந்து வருடங்களுக்கு முன்பு எழுதப்பட்ட ரெஃபரன்ஸைக் குறிப்பிடுவார். கடிதத்தைப் பார்க்கும் ஜெர்மன் குடியரசுத் தலைவரோ, கியூபாவின் ஃபிடல் காஸ்ட்ரோவோ, பிரிட்டிஷ் இளவரசர் சார்லஸோ அவரது பழைய கடிதங்களைப் பாதுகாத்து வைத்து திரும்பவும் எடுத்துப் பார்ப்பார்கள் என்ற நினைப்பில்!

வரதராஜுலுவின் கருத்துக்களைச் சற்று பார்க்கலாம்.

"சென்ற வருடம் மார்ச் 7 தேதி கடிதத்திற்கு தங்களிடமிருந்து பதில் வரவில்லை. ஜனாதிபதி தேர்தல் நடக்கப் போகும் சமயத்தில் இப்படி மெத்தனமாக இருப்பது தவறு. யார் வேட்பாளர் என்ற சண்டை எதற்கு? அரசியல்வாதி தான் இப்பதவியில் இருக்க வேண்டுமா? இந்த நாடு உருப்படாமல் போனதே

அரசியல்வாதிகளால்தான். ஏன், என்னைப் போன்ற நேர்மையாளர்கள் இருந்தால் கெட்டுவிடுமா? பார்க்கப்போனால், நானும் ஒரு விதத்தில் அரசியல் தொடர்புடையவன். எரவாடா சிறை வார்டனாக இருந்த போது ...."

"......பௌர்ணமி சமயமானாலும் தெரு விளக்குகள் இரவு பூராவும் எரியவேண்டுமா என்ன? இந்த செலவுக்கு யார் பணம் கட்டுவது? மக்களின் வரிப் பணத்தை வசூலிப்பவர்கள் இதைச் சிந்திக்க வேண்டாமா?....."

"எந்த தேசத்திலும் இப்படி நடந்ததில்லை என்று எண்ணும்படி டிம்பக்டூவில் பூகம்பம் தலைவிரித்து ஆடியிருக்கிறது. அதைப் பற்றி நீங்கள் கவலைப் படாமல் அசம்பளி தேர்தல் எப்போது என்று கேட்டிருப்பதைப் பார்த்து மனம் கொதித்தேன் நீங்கள் நிதி வசூலித்துக் கொடுத்தால் என்ன? என்னைப் போன்றவர்களிடம் நிதியுமில்லை, வசூலிக்கும் திறமையும் கிடையாது........"

"சிகரெட் பிடிப்பவர்கள் துண்டுகளை அணைக்காமல் கீழே போடுகிறார்கள். இதனால் பலர் தங்கள் கால்களைச் சுட்டுக் கொள்கிறார்கள். போலீஸ் 'ஐ. ஜி.'யான நீங்கள் இதைப் பற்றிச் சிந்தித்தது உண்டா?..."

"சென்னையில் தண்ணீர் இல்லை என்று ஓலமிடுகிறார்கள். இமயமலையில் பனிக்கட்டி அளவில்லாமல் இருக்கிறது. நிலக்கரியை வெட்டி எடுத்து அனுப்புவது போல் பனிக்கட்டியை ஏன் அனுப்பக்கூடாது? வழியில் உருகிவிடுமே என்று சில பிரகஸ்பதிகள் கேட்கக்கூடும். உருகட்டுமே. அந்தந்த ஊர்களின் ஜலப் பிரச்னை தீரட்டுமே..."

ஹிட்லர், எலிசபெத் டெய்லர், இடி அமீன், முகம்மது அலி, வினோபா பாவே என்று பலரின் மேல் அவர் கொண்டுள்ள கோபம் சொல்லி முடியாது.. பின் என்ன? வரதராஜுலு எழுதிய கடிதங்களுக்கு இது வரை அவர்கள் பதில் எழுதவில்லையே!



# குந்தன்மல்

'நகைகளின் பெயரில் கடன் கொடுக்கப்படும்' என்று எழுதப்பட்ட போர்டு தொங்கும் சின்னக் கடையின் கல்லாவின் முன் சப்பணம் கட்டிக்கொண்டு எதிரே இருக்கும் பளபளக்கும் தராசில் இரண்டொரு வெள்ளி நகைகளை நிறுத்துக் கொண்டிருக்கும் நபர் தான் குந்தன்மல் சௌகார். அந்த சின்ன ஊரின் ஒரே லேவா தேவிக்காரரர்.

பளிச்சென்று வெள்ளை மல் வேட்டி, வெள்ளை ஜிப்பா, பிரிமனை மாதிரி முறுக்கப்பட்டு தலையில் கட்டப்பட்டுள்ள வெள்ளை முண்டாசு, இவைகளுக்கு 'மேச்' ஆவது போன்ற வெள்ளை 'தொங்கு' மீசை. வாழ் நாள் முழுவதும் வெள்ளையப்பருடனும் வெள்ளி

நகைகளுடனுமே கழித்து விட்டதால் இப்படி வெள்ளையாகக் காட்சி அளிக்கிறாரோ!.

"என்ன சௌகாரே, மல் நீங்க பீஸ் கணக்கில் வாங்கிடுவீங்களா? முண்டாசிலிருந்து திண்டு வரை ஒரே மல் தானா?" என்று கேட்டால், "ஸுத்தம் சோறு போடும். நமக்கு எதுக்கப்பா ஆடம்பரம்? நம்ப பேரே என்னா தெரியுமா? குந்தன்மல்" என்பார். "ஸர்ரி... ஸர்ரி... என்னா கையிலே, வெள்ளி கொலுஸா? இப்பத்தானே மூட்டுக்கினு போனே, மல்லாக்கொட்டை வித்தேன்னு சொல்லி... அம்பது ரூபாய் வாங்கிட்டு போ.... அரே கோன் ஹை.... இஸ்கோ பச்சாஸ் ருப்யா தேதோ" தன் உதவியாளருடன் மட்டும் இந்தியில் தான் பேசுவார். இரண்டு தலைமுறைகளுக்கு முன்பே தமிழ் நாட்டுக்கு வந்துவிட்ட அவர் இரண்டு வருஷத்திற்கு ஒரு முறை ராஜஸ்தான் போய் வருவார். வரும்போது ஒரு மாப்பிள்ளை, அல்லது மருமகன், அல்லது பக்கத்து ஊரில் வியாபாரத்தைத் துவங்கப் போகும் உறவினர் ஆகிய யாருடனாவது வருவார்.

சௌகார் இருந்த ஊரில் பணத் தேவையில்லாத நபரே இல்லாததால் அவர் கடைக்கு வராதவர்களே கிடையாது. பத்து ரூபாய் கடன் வாங்க வருபவர்களிடமும் துருவித் துருவிப் பேசி என்ன செலவிற்காக பணம் வாங்குகிறார் என்பதைக் கண்டு பிடித்து விடுவார். இதனால் ஊரில் உள்ள எல்லாருடைய சொந்த விஷயங்கள், குடும்ப விவகாரங்கள், சச்சரவுகள், கோர்ட் வழக்குகள் ஆகியவை யாவையும் குந்தன்மல்லுக்கு அத்துப்படி. பணம் இருக்கிற இடத்தில் குணம் இருக்காது என்பார்கள். குந்தன்மல் இதற்கு விதிவிலக்கு. 'வளவள'வென்று பேசுவார். 'கலகல'வென்று வெள்ளிக் காசுகளைப் போல் சிரிப்பார். எல்லாரிடமும் அன்னியோன்னியமாகப் பேசுவார்.

"இன்னா பாப்பம்மா, கத்திரிக்காயா? பத்துபலம் போடு. அரை வீசையா? சரிய்யா போச்சு. வெலைவாசி இருக்கிற நிலையிலே யாருக்குக் கட்டுப்படி ஆவுது. உனக்கு இன்னா, மண்ணிலே வெதை தூவிட்டே. காயா காய்க்குது. நம்ப பாடு அப்படியா?"

"போ, சாவுக்காரே, உன் கல்லாப் பெட்டியிலே பணம் தானாகக் குட்டி போடுது..."

"போடும், போடும். அவன் அவனுக்கு ரூபாயைக் கொடுத்துப்பிட்டு பணம் வருமா வராதான்னு பயந்து கிட்டே கிடக்க வேண்டியிருக்குது. அவன் கொடுக்கற ஒண்ணே காலணா வட்டிக் காசுக்காக அவன் நகைகளை பூதம் காக்கற மாதிரி காப்பாத்திக் கொடுக்கணும்.

"அவன் பூட்டானே யார் அவன்? ஆமாம், அவன்தான் அருகாணி, வாங்கின பணத்தைக் கொடுக்காம டில்லி பூட்டானே, நஷ்டம் இன்னா ஆச்சு....ஸர்ரி.... ஸர்ரி, உன்னோடு பேசிக்கினு இருந்தா வேலை ஆவாது. அரே சுகன்சந்த், இந்தா பத்து பலம் கத்திரிக்காய் வாங்கிக்கினு போ."

சௌகார், 'பூட்டானே' என்று குறிப்பிட்ட அருகாணி இருபத்தேழு வருஷத்துக்கு முன்பு பன்னிரண்டு ரூபாய் வாங்கியவன். அதைத் தான் அவர் எப்போதும் சொல்லிக் கொண்டு இருப்பார்!

பணம் செலவழியாத எந்த வேலையானாலும் சௌகார் உற்சாகமாக அதில் பங்கேற்பார். ஆகவே ஊரில் உள்ள குடும்பச் சண்டை போன்ற விவகாரங்களில் பஞ்சாயத்தாக இருப்பார்.

"இத பாரு, கேசவலு! வீணாக ஏன் லோலோன்னு சத்தம் போடறே? அவன் யாரு நீ பெத்த புள்ளைதானே? சொத்தைப் பிரிச்சு குடு என்றால், குடுத்துடேன் அவன் கேட்கிறபடி ஆயிரமோ இரண்டாயிரமோ மேலே கொடுத்து சமாதானமா போவியா... அத்தைவுட்டுட்டு..... "

மற்றவர்கள் பணம் என்றால் ஆயிரம் ரூபாய் ஒரு பைசா மாதிரி, இவர் கல்லாவிற்குள் வந்து விட்டால் ஒரு பைசா ஆயிரம் ரூபாய் மாதிரி...!

"துட்டு லெட்சுமியாச்சே! அலட்சியப்படுத்தக் கூடாது" என்பார். ஆகவே 'லெட்சுமி' உபாசகர் ஆக அவர் இருப்பதில் வியப்பு இல்லை.

# பட்டாபி

பட்டாபிக்கு தெரியாதது சிரிப்பு. தெரிந்தது, முணுமுணுப்பு!

ஏழெட்டுக் கப்பல்கள் ஒரே சமயத்தில் கவிழ்ந்து போனவன் கூட சிறிது முக மலர்ச்சியுடன் இருப்பான். நம் பட்டாபியைப் பார்த்தால் எட்டுக் கப்பல்கள் கவிழ்ந்ததுடன், இன்கம்டக்ஸ் ரெய்டும் நடந்து, வீடும் ஏலத்திற்கு வந்து விட்டது போன்று படு சோகத்துடன் காட்சியளிப்பார்!



இவருக்கு என்ன கவலை? ஒன்றுமில்லை. ஒரு கவலையுமில்லையே என்று நினைத்துக் கவலைப்படும் ஆத்மா!

மண்ணடி இரும்புக் கடை ஒன்றில் மொத்தம் நாற்பத்தியேழு வருஷம் பணியாற்றி விட்டு ரிடையர் ஆனவர் பட்டாபி. முழு வழுக்கை. நீண்ட அரைக்கை சட்டை (காமராஜர் மாடல்), கச்சம் வைத்த வேட்டி, இடது கையில் பொடி டப்பா, வலது கையில் நியூஸ் பேப்பர்.. ஒரே சமயத்தில் பாகற்காய், எட்டிக்காய், இஞ்சி, கொய்னா ஆகியவற்றை அரைத்துச் சாப்பிட்ட மாதிரி முக விலாசம்.

இவரது பையன்கள், பெண்கள் எல்லாருக்கும் கலியாணம் ஆகி குழந்தை குட்டிகளுடன் இருக்கிறார்கள். இருந்தாலும் பட்டாபி சதா முணுமுணுத்துக் கொண்டிருப்பார். சரி பட்டாபியின் முணுமுணுப்பை டேப் ரிகார்ட் செய்து போட்டுப் பார்க்கலாமா?

"என்ன அரிசி கொடுக்கறான்? மாடு கூட சாப்பிடாது. இந்த அழகில் கிலோ அஞ்சு ரூபாய். இப்படியே விலை ஏறிக்கொண்டு போனால், எல்லாரும் தூக்குப் போட்டுக் கொண்டுதான் சாக வேண்டும். ஒரு விதத்தில் இதுவும் நல்லதுதான். இந்த அறிவு கெட்ட ஜனங்க அரிசியைக் கட்டிக் கொண்டுதானே அழறதுகள். அந்தக் காலத்திலே கேழ்வரகு சாப்பிடலையா? செத்தா போய்விட்டார்கள்? அரிசியையும் விடமாட்டார்கள். சினிமா வையும் விடமாட்டார்கள். 'எந்த சினிமாக்காரன் எந்த சினிமாக்காரியை இழுத்துக் கோண்டு போனான்?' என்பதே இவங்களுக்கு விசாரம்.

"வியட்நாமில் ராத்திரி படுக்கிறவன் காலையில் எழுந்துக்கறது நிச்சயமில்லை. அங்கோலாவில் வெள்ளத்தில் நூறு பேர் சாகிறார்கள். சைனாவில் ரயில் விபத்து. எல்லாரும் கூண்டோடு கைலாசம். ஹெல்சிங்கியில் நெருப்புப் பிடிச்சு கிராமமே பஸ்மமாகி விட்டது. காஸ்டரீகாவில் காலரா தலை விரித் தாடுகிறது. ஹூம். இதெல்லாம் பற்றி அவங்களுக்கு எங்கே அக்கறை? யாரவன், தேவானந்தனாமே, ஒரு ஆக்டர், அவன் தினமும் எவ்வளவு குடிக்கிறான், ராஜேஷ் கன்னனுக்கு அடுத்ததாவது பிள்ளை பொறக்குமா? இது மாதிரி விஷயங்களில் தான் கவலைப்படுகிறார்கள்.

"பெரிய பிள்ளை இருக்கிறானே, அடையாரில் வீடு வாங்கியிருக்கிறான். அதில் வாடகை சரியா வருகிறதா, எவ்வளவு பாக்கி என்று ஒரு கவலையும் கிடையாது. வீட்டை விற்றவன், உடைஞ்சு போன ஜன்னல் கண்ணாடியை ரிஜிஸ்டிரேஷனுக்கு முன்னேயே புதுசாப் போட்டுத் தருகிறேன் என்றான். கடைசியிலே போடாமல் இருந்து விட்டான். அப்புறம் பத்து ரூபாய் செலவு பண்ணி இவன் தானே போட்டான்.... நான் சொல்கிறேன், காலம் ரொம்ப கெட்டுப் போய்விட்டது. பசங்களுக்கும் சாமர்த்தியம் இல்லை. இரண்டாவது பிள்ளை இருக்கிறான், மாசம் சுளையா இரண்டாயிரம் ரூபாய் சம்பளம் வாங்குகிறான். ஆனால், ஒரு கறிவேப்பிலைக்காரியிடம் பேரம் பேசத் தெரியாது. பாருங்களேன், பத்துப் பைசா கொடுத்துக்

கொத்தமல்லி வாங்கியிருக்கிறான். அவன் மூனு கட்டு கொடுத்துவிட்டுப் போகிறான். இவனும் வாங்கிக் கொள்கிறான். நான் அதைப் பார்த்து 'மூனுதானா? நாலு கொடு', என்றேன். அப்புறம் கொடுத்து விட்டுப் போகிறான். எல்லாரும் ஏமாற்றுவதில் கெட்டிக்காரர்களாக இருக்கிறார்கள். உலகம் சீக்கிரம் அழியப்போவதற்கு அறிகுறி.

"கலி முற்றிப் போச்சு. இப்போது கதா காலக்ஷேபத்துக்கு நிறைய கூட்டம் வருகிறது. பக்தியுமில்லை, கத்தரிக்காயுமில்லை.. இது ஒரு பாஷனாகப் போச்சு. இதெல்லாம் கலி பண்ணுகிற கோலம். கோவில் கட்டறான். இவன் கட்டலை என்று தான் கடவுள் ஏங்கிக் கொண்டிருந்தானாக்கும்! பாண்டி பஜாரில் இவன் நகைக் கடை வைத்திருக்கிறான். ஒரு வைர நெக்லஸ் இவன் கடையில் என் பொண்ணு வாங்கினாள். அன்பளிப்பாக, ஒரு காலண்டர் கொடுத்தான். 'அட இன்னும் ஒண்ணு கொடுடா' என்று கேட்டேன். 'இல்லைங்க ஒண்ணு தான் தர முடியும்' என்றான். மகா அல்பம்! இவன் இப்படி மிச்சம் பிடித்து கோவில் கட்டினால் அதில் கடவுளா வந்து இருப்பான்? இவன் பணத்துக்குச் சாமிகூடக் குலாம் போடுவாரா? போய்யா, அப்புறம் ஏதாவது சொல்லப்போறேன்........

"டி.வி. ஒண்ணுதான் இல்லை என்று அழுது கொண்டிருந்தோம், அதுவும் வந்து விட்டது. என்னைக் கேட்டால், ரேடியோவையே ஒழிக்கணும் என்பேன். கண்ட கண்ட பொண்ணுங்களை டிவியில் பார்த்துப் பசங்க கெட்டுப் போய் விடப் போகுது. பாஷன் இன்னும் தலை விரித்தாடும். இதையெல்லாம் பற்றி எவன் கவலைப்படுகிறான்?.. ஐயோ, குழாய்லே தண்ணீர் வரவில்லையே என்று கவலைப்படுகிறான். குழாயை நம்பியா நாம் பிறந்தோம்? இது ஒரு பிரச்சனையா? இதுக்காக முணு முணுப்பாங்களா? பொடி விலை ஏறிக் கொண்டே போகிறது. நியூஸ் பேப்பர் பக்கம் குறையுது. இது யாருக்குத் தெரிகிறது?

பட்டாபியின் மறுபெயர் பெரிய முணுமுணுப்பு!

# தாயி

தம்புச் செட்டி தெருவின் அந்தப் பழைய கால வீட்டின் நடை வழியில் உள்ள திண்ணையில் அமர்ந்து இரும்புரலில் வெற்றிலைப் பாக்கு இடித்துச் சாப்பிட்டுக் கொண்டிருக்கும் 'தாயி'யின் வயது என்ன? அவளுக்கே தெரியாத விஷயம் இது. பலருக்கு நினைவு தெரிந்த நாள் முதலே அவள் கிழவியாகவே இருக்கிறாள்.



உடல் எல்லாம் சுருக்கம். வெளுத்த தலை முடி. அவள் கறுத்த நிறத்தை மேலும் அதிகப்படுத்திக் காட்டியது அது. அந்த வீட்டின் எட்டு குடித்தனக்காரர்களின் வேலைக்காரி அவள். ஆகவே அவளுக்கு அந்த நடைத் திண்ணையில் இருக்க உரிமை உண்டு. எத்தனையோ குடித்தனக்காரர்கள் வந்து போனாலும், முப்பது வருடங்களுக்கு மேலாக அந்த வீட்டில் நடக்கும் நல்லவை, கெட்டவைகளில் பங்கு கொண்டு குடித்தனக்காரர்களின் வாழ்க்கையில் அதாவது

அந்த வீட்டில் இருந்த காலத்திற்கு மட்டுமாவது ஓர் அங்கமாக இருப்பவள் தாயி.

அந்த வீட்டில் வேறு ஒரு வேலைக்காரனோ, வேலைக்காரியோ வர முடியாது. சரியாக வேலை செய்கிறாளோ இல்லையோ, துணிகளை அழுக்கு போக துவைக்கிறாளோ இல்லையோ, பாத்திரங்களைக் கரி போகத் தேய்க்கிறாளோ இல்லையோ, வீட்டை ஒழுங்காகப் பெருக்குகிறாளோ இல்லையோ அவளை யாரும் ஒன்றும் கேட்டுக் கொண்டிருக்க முடியாது

'நாளையிலிருந்து வேலைக்கு வேண்டாம்' என்றும் சொல்லவும் முடியாது. தப்பித் தவறி யாராவது சொல்லிவிட்டால் அன்று எல்லார் வீட்டு வேலையும் அப்படியே நின்று விடும். அத்துடன் தாயி 'ஓ' வென்று முணுமுணுப்பதும் தொடங்கிவிடும்!

"இன்னா ஜானகி? குடித்தனம் வந்து ஆறு மாசம் ஆச்சில்லை, அதான் தாயியை வூட்டைவுட்டு போகச் சொல்றே! நான் ஏன் போவணும்? இஸ்டமில்லைன்னா நீ வூட்டைவுட்டு காலி பண்ணிட்டு போ. என்னடான்னு பார்த்தேன். காலேஜ் படிச்ச பொண்ணில்லே, அது தான் இப்படி பேசுது! ஒரு கண்ணு போட்டா தெரியும் தானே, தாயின் மஹிமை! கொழந்தையை குளிப்பாட்ட தெரியாம அவஸ்தை படறபோது தானே இவுங்க இங்க்லீஸ் படிப்பு வண்டவாளம் தெரியும்! போம்மா..... இப்படித் தான் கமலா சொல்லிச்சு. கடைசிலே இடுப்பு வலி எடுத்தபோது தாயி தான் கூட ரூம்லே இருக்கவேண்டியிருந்திச்சி.... "தாயி, நீ இல்லாட்டி நான் செத்தே போயிருப்பேன்"னு சொல்லிச்சு. இந்த வூடு கட்டினதிலிருந்து நான் இங்கே இருக்கிறேன். வூட்டுக்காரர் தனபாலு இருக்கிறாரே, அவரே என்னைப் போகச் சொல்ல முடியாது. இந்த தாயியோட தோளில் வளர்ந்த புள்ளை தானே அது! சரி உன்னோட மல்லுக்கு நின்னது என் தொண்டை தண்ணிதான் வறண்டு போச்சு. அரை டம்ளர் காப்பித் தண்ணி கொடு... அட, சும்மா பாக்காதே ..... போம்மா கொழந்தே.... " என்பாள் தாயி.

தாயிக்கு குழந்தை குட்டி எதுவும் கிடையாது. இளம் வயதிலேயே கணவனை இழந்தவள். ஏதோ ஒரு கிராமத்திலிருந்து வயிற்றுப் பொழைப்புக்காக சென்னை வந்தவள். வீடு கட்டும் போது சிற்றாளாகச் சேர்ந்தவள். பிறகு அந்த வீட்டுடனேயே ஐக்கியமாகி விட்டாள். அந்த வீட்டில் வரும் குடித்தனக் காரர்களின் சுக துக்கத்தில் தாயி பங்கு கொள்வாள். ஆமாம், அவளுக்கென்று வாழ்க்கையில் சுகமும் இல்லை. துக்கமும் இல்லை.

குடித்தனக்காரர்களிடமிருந்து சாதம், குழம்பு, ரசம் என்று வாங்கிச் சாப்பிடுவாள். டீ, காப்பியும் கிடைத்துவிடும். இல்லை என்றால் தெருக்கோடிக் கடையில் டீ, இடியாப்பம் வாங்கிச் சாப்பிடுவாள். ஆகவே அவளுக்குக் கிடைக்கும் சம்பளத்தின் பெரும் பகுதி மிச்சமாகிவிடும் அதை ஒரு சுருக்குப் பையில் போட்டு வைத்திருப்பாள்.

"தாயி, இந்த பணத்தைச் சேர்த்து வைக்கிறயே, என்ன செய்யப்போறே" என்று கேட்டால் "போயேன் பங்களா கட்டப்போறேன்! நான் கண்ணை மூடினால், கட்டை முட்டை வாங்க பணம் வேண்டாமா? செலவு போக மீதி பணத்திலே மாரியம்மன் கோவிலில் கூழ் வாத்துடுவாங்க. ஏழை பாழைங்க சாப்பிட்டு விட்டுப் போகட்டும்" என்பாள்.

"ஏம்பா, நாராயணா... இன்னா ராவிக்கு அப்பிடி கூப்பாடு போட்டிக்கிட்டு கிடந்தே? உன் பொண்சாதி சரியா சமையல் செய்யலியா? நான் சொல்றேனே பாவம், அதுக்கு மாசம் ஆயிடிச்சு. சும்மா திட்டினா என்னா செய்யும்? அதை உன் மாமியார் வூட்லே கொண்டு வுட்டுடு. ரவை கூட அதாலே வேலை செய்யமுடியலே. நீ விடிகாலை போய் ராத்திரி பத்து மணிக்கு வறே. பாவம் ஒண்டியாய் இன்னா செய்யும். ... ஏய் பாபு, இன்னா சாக்குக் கட்டியைத் துண்றியா? என்னடான்னு பார்த்துக்கிட்டிருக்கேன். இரு, இரு உன்னே ரெண்டு கண்ணன் கிட்டே புடிச்சு கொடுத்துடறேன்........ சொக்காயை ஏன் கடிக்கறே? உங்கப்பா அந்த சேட்டு கடையிலே உழைச்சு வாங்கின புது சட்டை. உனக்கு இன்னா தெரியும் இதெல்லாம்...... போ மணியாச்சு.... பையை

எடுத்துக்கிட்டு. இஸ்கோலுக்கு நேரமாவல்லே? இட்டுகிட்டு போறேன், வா...."

"ஏம்மா, லட்சுமி... உன் மாமியார் மாவு அரைக்கனும்னு சொன்னாங்களே, கொடு அரைச்சுக்கிட்டு வறேன், அப்புறம் உன்னைத்தானே கூப்பாடு போடும். ஆமாம் நேத்தி ராத்திரி ஊத்தினியே கொழம்பு, உப்பு ஜாஸ்தி, புளியே இல்லை. கத்திரிக்காய் வேகல்லை. அதான் உன் மாமியார் திட்டுது..... சமையல் பார்த்து செய்! எதுக்கு வீணா பேச்சு கேக்கறே?"

"ஏம்மா ராஜம்மா, குழந்தையை ஏன் இப்படி அழுவ வுடறே? இப்படி கொண்டா, நான் கால்ல போட்டு தூங்கப் பண்றேன், நீ சமையல் பண்ணு. உன் வூட்டுக்காரரை ஆபீஸுக்கு அனுப்பு. வண்டியைப் புடிச்சு ஆவடிக்கு போவணும் இல்லை?

"சாந்தா அம்மா...... ராவிக்கெல்லாம் ஒரே குளிரு. காய்ச்சல் அடிச்சுது. எனக்கு ரெண்டு மொளகைப் போட்டு சூடா கஷாயம் பண்ணி ஒரு டம்ளர் கொடு. இன்னிக்கி என்னாலே வூடு கூட பெருக்க முடியாது. யாராவது ஒரு வாய் கஞ்சி வெச்சி ஊத்தனும்....."

தாயி அந்த வீட்டின் வேலைக்காரி தான். இருந்தாலும் எல்லாரையும் வேலை வாங்குவாள் அவ்வப்போது!

அந்த வீட்டின் சுவர், நிலைப்படிமாதிரி, தாயியும் அந்த வீட்டின் ஒரு முக்கிய பாகம்.

# டாக்டர் தர்மராஜன்

அந்த போர்டை சற்று உற்றுப் பார்த்தால் தான் "விக்டோரியா டிஸ்பென்சரி, ஸ்தாபிதம் 1932" என்று எழுதப் பட்டிருப்பதை சிரமப்பட்டு படிக்க முடியும்.

'விழுந்து விடுவேன்' என்று பயமுறுத்திக் கொண்டிருக்கும் பந்தல் அலங்கரித்துக் கொண்டிருக்கிற அந்த பழைய கட்டிடத்தின் முகப்பைத் தாண்டி உள்ளே போனால், ஜாக்கிரதை அங்குமிங்கும் பெயர்ந்திருக்கும் செங்கல்கள் உங்கள் கால் நகங்களைப் பெயர்த்துவிடப் போகிறது உள்ளே டாக்டர் தர்மராஜனைப் பார்க்கலாம்.



'வி' கழுத்து மல் ஜிப்பா, 'நேரு மாடல்' வழுக்கை, முன் மூக்கில் தங்கப் ஃப்ரேம் மூக்குக் கண்ணாடி, பரந்த மேஜையின் முன் எட்டாம் எட்வர்ட் காலத்து நாற்காலியில் அமர்ந்து மருந்து சீட்டு எழுதிக் கொண்டிருப்பவர் தான் டாக்டர்.

வாய் ஓயாமல் பேசிக் கொண்டிருப்பார், முக்கியமாய் நோயாளிகள் தங்கள் நோயைப் பற்றிச் சொல்வதற்கு சான்ஸே கொடுக்காமல். அவ்வப்போது டெலிபோன் மணி வேறு அடிக்கும்.

அந்த அறையில் இருபதாவது நூற்றாண்டைச் சேர்ந்தது அந்த டெலிபோன் தான். மற்றதெல்லாம் டாக்டரின் தாத்தாவின் காலத்தைச் சேர்ந்தவை. மேஜைமேல் தொங்கும் டோம் விளக்கு, சுவரில் மாட்டப்பட்டிருக்கும் படங்கள், காலண்டர் எல்லாம் டிஸ்பென்சரியின் வயதைப் பளிச்சென்று எடுத்துக் கூறும்.

"வாய்யா கனகசபை... என்ன ஏகமாகப் போர்த்திக்கொண்டு வருகிறாய்?"

"ஒரே குளிருது, கண் எரிச்..."

"அதிருக்கட்டும் கனகசபை, கடைத்தெருவிலே என்ன கலாட்டாவாம்? இந்த காண்டீபன் சோடாக் கடையை என்னிக்கி அங்கே போட்டானோ, அப்பவே தெரியும். முனிஸிபாலிடி ஒரு தீர்மானம் கூட போட்டிருக்குது. ஆனா அந்தக் கடையை எவன் இடிக்கிறது?"

"ராத்திரி 102 டிகிரி..."

"ராத்திரி ராஜாபாதர் எலக்ஷன் மீட்டிங்கில் வெளுத்துக்கட்டி விட்டானாமே? வியட்நாம் பிரச்னைக்கு இவனைத்தான் வழி கேட்டாங்களா? என்னை வந்து கூப்பிட்டாங்க, 'அட இதுக்கெல்லாம் நேரமில்லை எனக்கு,' என்று சொல்லி அனுப்பி விட்டேன்."

"ராத்திரி 102...."

"அடேடே, வாய்யா, ராஜாபாதர் உன்னைப் பத்தித்

தான் பேசிக்கிட்டிருந்தேன். உட்காரு. இந்தா கனகசபை! மருந்து வாங்கிட்டுப்போ..."

"மூணு தடவை ராத்திரி...."

"சரிதான்யா வாங்கிட்டு போ. ஆமாம், உன் மாப்பிள்ளை கூட கார்ப்பரேஷன் விவகாரத்தில் மாட்டிக்க இருந்தானாமே? போ, தப்பிச்சான். ஒரு விஷயம் ஜட்கா வண்டியில் வரும் போது பார்த்தேன். உன் வீட்டு முருங்கைமரத்தில் ஏகமாகக் காய்கள் இருக்குதே. கொஞ்சம் வீட்டுக்குக் கொடுத்தனுப்பு. ஆகாரம் என்னவா? போய்யா, பிரியாணியும் சிக்கனும் சாப்பிடு. ராஜாபாதர், என்ன ரொம்ப ரோஷமா பேசினீங்களாமே, தொண்டைவலிக்கு மருந்து வேண்டுமா? "இந்த வியட்நாம் விவகாரம் அவ்வளவு சுலபமானது இல்லை. என்ன தெரியுதா?..இந்த வியட்நாம் விவகாரம் அவ்வளவு சுலபமானது இல்லை. என்ன தெரியுதா. ஆனானப்பட்ட அமெரிக்காவே என்ன? ஆனானப்பட்ட அமெரிக்காவே என்ன திணறுகிறான். நீ போய் என்னமோ பிரமாதமாகப் பேசறே! என்ன சொல்றே அங்கமுத்து."

இவரது கம்பவுண்டர் அங்கமுத்து உடனே, "ஆமாங்க.. நம்ம ராஜாபாதர் இந்த மாதிரி விஷயமெல்லாம் பிச்சி உதறுவாரு. ஆனா அந்தப் பொண் ஜகதா கிட்டே மாட்டிக்கிட்டபோது இவரே என்னமா உதறினார்." டாக்டருக்கு அவ்வப்போது இப்படி விஷயத்தை எடுத்துக் கொடுப்பதில் அபார சாமர்த்தியசாலி அங்கமுத்து.

டாக்டரின் கன்சல்டிங் ரூமில் சாதாரணமாக ஐந்தாறு பேர் எப்போதும் உட்கார்ந்திருப்பார்கள். ரிடயர்ட் ஆசாமிகள். அல்லது டாக்டர் வரவழைக்கும் பத்திரிகை, பேப்பர்களை ஓசியில் படிக்க வருபவர்கள். டாக்டர் இவர்களிடம் உலக அரசியல் முதல் சினிமா நடிகை மரணம் வரை எல்லா விஷயங்களையும் பேசுவார். பேச்சு என்பது டாக்டரைப் பொறுத்தவரை ஒன் வே டிராபிக் தான்.

"... அங்கமுத்து இந்தா, நம்ம கதிரேசன் பேரனுக்கு இருமலாம். அரை புட்டி தண்ணி ஊத்தி கொடு... ஏன்யா நீ பால்லே தண்ணி ஊத்தி பணம் பண்ணுகிறே! நானும்

உன்னைப் பார்த்து தொழில் பண்றேன். பேப்பரைப் பார்த்தியா? டில்லியில் பால்காரருக்கு 5000 ரூபாய் அபராதம் போட்டாங்க... என்ன சொல்றே? ஊசி போடணும்மா? சரியாப்போச்சு! அங்கமுத்து நம்ம போர்டை கழட்டி விட வேண்டியது தான். கதிரேசன் தான் பெரிய டாக்டராகிவிட்டாரே? ஊசி போடச் சொல்றார்? கோணி ஊசி தான் போடவேண்டும்.... சரி... மருந்தை வாங்கிட்டுப் பேசாமல் போ...

"வாங்க மிஸ்டர் ராமானுஜம், உங்க பையனுக்கு அதே மிக்சர் 'ரிபீட்' பண்ணுங்க. நேத்து சாயங்காலம் டென்னிஸ் சுவாரசியப்படவில்லையே... இந்தப் பயல் தண்டபாணியை இனிமே சீட்ல சேர்க்கக் கூடாது. ராஜா, ராணி தெரியாத பயலாக இருக்கான். எட்டு பேர் முன்னூற்று நாலு ஆடுகிறோம். மேஜையில ஏழு சீட்டு. எல்லாம் டயமண்ட். இவன் எட்டாவது ஆள். என்ன கேட்கறான் தெரியுமா. 'என்ன ஜாதி இறக்கம்' என்று! 'என்ன ஜாதியா? போய்யா பொண்ஜாதி' என்று கார்ட்டை விசிறிப் போட்டேன். க்ளப் எலக்ஷன் வேறு வருகிறது... அங்கமுத்து! அந்த அம்மாகிட்டே நாலு என்ட்ரோக்வினால் மாத்திரை கொடுத்து அனுப்பு... யெஸ் ராமானுஜம், என்ன உங்க பையன் கிருதா, க்ராப் எல்லாம் தடபுடலாக வைத்திருக்கிறானே!"

"... ஆமாங்க, ஜில்பா சும்மா எம். கே. டி. பாகவதர் மாதிரி..." அங்கமுத்துவின் விசிறல்.

"இப்படியே போனால் இரண்டு பின்னல் போட்டு பூ வைத்துக் கொண்டு விடுவார்கள். யாரய்யா, அங்கே கதவண்டை நிக்கிறது... அங்கமுத்து, அந்த ஆளுக்கு நாலு அனாஸின் மாத்திரையைக் கொடுத்து அனுப்பு..."

டாக்டருக்கு ராசியான கை. வெறும் தண்ணீர் கொடுத்தாலும் வியாதிகள் தீர்ந்துவிடும். ஆகவே எப்போதும் கூட்டம். பணம் வசூலிப்பதில் கண்டிப்புக் கிடையாது. பலருக்கு அக்கவுண்ட். ஆகவே டாக்டர் ஊரின் முக்கிய புள்ளி!

# அம்புஜம்மாள்

பால் 'ஊற்றும்' ஏழெட்டுக் குடும்பத்தினருக்கு அம்புஜம்மாள், உறவினரைவிட நெருங்கினவர்.

"என்ன அம்புஜம்... நேற்று பால் ஒரே தபாலா இருந்துதே... இப்படித் தண்ணியைக் காசாக்கினால் வருஷத்துக்கு இரண்டு டில்லி எருமை வாங்கிடுவே" என்று யாராவது சொல்லிவிட்டால் போதும். அவ்வளவு தான் பிலு பிலு என்று பிடித்துக்கொண்டு விடுவாள்.

"இதோ பாரு பத்மா... நான் பார்த்துப் பொறந்தவ நீ... இன்னா பேச்சு பேசறே. உன் அம்மா கூட இந்த முப்பது வருஷத்திலே இப்படிக் கேட்டதில்லை. நேத்து பொறந்த பொண்ணு... பாலு தண்ணியா இருந்தா வுட்டுடேன்.... சைக்கிள் பால் கொண்டாந்து கொடுக்கறாங்களே வாங்கிக்கோ... பால் பவுடரையும் மைதாமாவையும் கரைச்சு 'திக்'காக ஊத்து வாங்க... என்னமோ பரம்பரையா வந்த தொழிலுன்னு தான் இதைச் செய்யறேன். எனக்கு ஆறு பிள்ளைங்க, சம்பாதிச்சுப் போடறாங்க. அவங்க கூட ஏன் மாட்டை கட்டிக்கட்டு அழுவறே அப்பிடின்னு



என்கிட்டே சொல்றாங்க.... பணம், காசுக்கு ஆசைப்பட்ட காலம் மலை.யேறிப்போச்சு... இது ஒரு பொழுது போக்கு எனக்கு. அவ்வளவுதான். என் மருமவப் பொண்ணுங்க எல்லா வேலையையும் பார்த்துக்கிடுதுங்க... எனக்கும் கிழவருக்கும் ஏதாவது வேலை வேண்டாம்?... இன்னொரு தபா தண்ணி கிண்ணின்னு பேசாதே கொயந்தே" என்பாள். பேச்சில் எப்போதும் வாஞ்சை ஒரளவு இருக்கும். உண்மையில் அம்புஜம்மாளுக்கு பால் வியாபாரம் ஒரு பொழுது போக்குதான். பிள்ளைகளின் வருவாயே போதுமானது.

"ஆச்சு... எனக்கு அறுபத்து மூணு ஆச்சு வயசு... உன் பாட்டியும் நானும் ஒன்னா 'தாச்சி' விளையாடி இருக்கோம். நல்லது கெட்டது என்றால் உங்க வூட்டில நான் இல்லாம நடக்காது. நாள், கிழமை என்றால் எனக்குத் தான் முதல் வெற்றிலைப் பாக்கு. கல்யாணம் என்றால் ஒரு வாரம் வூட்டோடு இருக்கச் சொல்லிவிடுவாங்க. 'ஒரு சாமானை ஒருத்தர் எடுத்துக்கிட்டுப் போகாதபடி நீதான் அம்புஜம் அக்கறையாப் பாத்துப்பே' என்று உன் பாட்டி சொல்லும். ஏன் சாவறப்போ கூட நான் தான் கடைசிக் கடைசியாக நாலு ஸ்பூன் பாலை அதன் வாயில ஊத்தினேன். என் கையைப் புடிச்சிக்கினே மூச்சை வுட்டுது... அதுன் கையாலே எவ்வளவோ வாங்கித் தின்னுருக்கேன்...." என்று சொல்லியபடி, இறந்து போன தன் பழைய தோழியை எண்ணி நிஜமாகவே கண்ணீர் விடுவாள்.

இப்படித்தான் அம்புஜம்மாளுக்கு ஒவ்வொரு வீட்டிலும் ஒரு உறவு, ஒட்டுதல், பந்தம் உண்டு. அதனால் தான் அவளுக்கு புத்தி தெரிந்த நாளிலிருந்து இதே வீடுகளுக்குப் பால் கொடுத்து வருகிறாள்.

பொங்கலன்று சூரியனுக்குப் படைத்து விட்டு நிறைய பழம், கரும்பு மஞ்சள் ஆகியவைகளை தன் வாடிக்கை யாளர்களுக்குக் கொண்டு போய்க் கொடுப்பாள். இந்த வகையில் நூறு, இருநூறு கூட செலவழிப்பாள்!

தொழிலால் பால்கார அம்மாள்; மனதால் செல்வச் சீமாட்டி!

# மங்களகுமாரி

"ஏய்... உன்னைத்தானே, மூனு மணிக்கு போட்டோகிராபர் பிரபு வர்றார். புடவையைப் பொட்டி போட்டு வை. லாலா கடையிலிருந்து நாலு ஜிலேபி வாங்கி வை. பிலிம் செலவுக்கென்று கவர்லே நூறு ரூபாய் நோட்டு போட்டு வை. பிரபுவுக்குக் கொடுக்கணும் அம்மா... பிரபு அண்ணன் பெரிய ஆள் அம்மா... அன்னிக்கு நடிகர் சங்க விழாவிலே பாத்தேன். ரஜினியின் தோள்மேல கைபோட்டுப் பேசிட்டிருந்தாரு."

"அடி மங்களகுமாரி... தோள் மேல கையைப் போட அவங்களுக்குச் சொல்லியா கொடுக்கணும். பாரேன், போட்டோ எடுக்கற சாக்கிலே உன்மேலே கூடத்தான் கையைப் போடுவாரு... எப்படியோ நீ பெரிய ஸ்டாராக வந்தால் சரிதான்..." இது அம்மா.



சினிமா என்ற வெல்லக்கட்டியால் ஈர்க்கப்படும் பல்லாயிரக் கணக்கான எறும்புகளில் மங்களகுமாரியும் ஒருத்தி.

இவள் பத்தாவது படித்துக் கொண்டிருக்கும்போதே இரண்டு வீட்டையும், கணிசமான தொகையையும் விட்டு அப்பா காலமாகிவிடவே, தன் தாயாருடன் சென்னைக்கு வந்து விட்டவள் மங்களகுமாரி. தமிழ்த் திரை உலகின் ராணியாகத் திகழ வேண்டும் என்பதே இவளது ஆசை. ஆகவே சொத்து பத்துகளை விற்று சென்னைக்கு வந்து சுமாரான வீட்டில் குடியேறினார்கள்.

நாட்களும், அதைவிட வேகமாகப் பணமும் ஓடினவே தவிர சினிமா சான்ஸ் கிட்டவில்லை. ஆனால் அவள் நம்பிக்கை இழக்கவில்லை. சினிமா பித்து அவள் ரத்தத்தில் ஊறியிருந்தது.

எட்டுப்பக்க கவர்ச்சிப் படங்கள், பின் அப், 'மனம் திறந்து' சொல்லும் கட்டுரைகளுக்கான படங்கள் ஆகியவற்றில் மங்களகுமாரி காட்சி அளித்திருக்கிறாள். இந்த மாதிரிப் படங்களில் நடிக்கத்தான் சான்ஸ் வந்ததே தவிர திரைப்படத்தில் வரவில்லை.

பத்திரிகை நிருபர்களிடம் நிறைய பேசுவாள்.

"எனக்கு சின்ன வயசிலிருந்தே சினிமா, டான்ஸ் என்றால் உசிருங்க. ஒரு தபா பாத்தா அப்படியே ஆடுவேனுங்க. ஸ்கூல்லே டான்ஸ் பிரைஸ் வாங்கியிருக்கேன். டிராமாவெல்லாம் ஆக்ட் பண்ணியிருக்கேன். கோவை கலா சேவா மன்றம் நாடகங்கள்ளே நடிச்சிருக்கேன். போட்டோ ஆல்பம் பாக்கறீங்களா... இத பாருங்க, கலெக்டர் பட்டம் கொடுத்தாரு, நடிப்புக் குயில்னு...

"எனக்கு நடிப்புத் திறமை நெறைய இருக்கு. ஆர்வம் இருக்கு. டைரக்டர் கம்பர் மன்னன் 'ஒரு கிராமம் கண்ணீர் விடுகிறது' படத்திலே சான்ஸ் கொடுக்கிறதா சொல்லியிருக்கார். என் ஆல்பத்தைப் பார்த்த தேவேந்திரன், 'உனக்குத் தகுந்த ரோல் வரும்போது சொல்லி அனுப்பறே'ன்னு சொல்லியிருக்காரு. விட்லாசார்யா கூட கூப்பிட்டு அனுப்பிச்சாரு. ஆனால் அதுக்குள்ளாற, தன் ரேட்டைக் குறைச்சிக்கிட்டு ஜெயமாலினி நடிக்க ரெடின்னுட்டாங்க. எனக்கென்ன குறைச்சலுங்க?

முத்தக்காட்சியில் நடிக்க மாட்டேன்னுதான் சொன்னேன்; கவர்ச்சியாக நடிக்க மாட்டேன்னு சொன்னேனா..? ரசிகர்கள் விருப்பப்படிதாங்க நடிக்கணும்..."

"இப்போ பரத நாட்டியம், குச்சிப்புடி கத்துக்கிட்டு இருக்கேன். 'பாடி' கொஞ்சம் 'பில்ட்' பண்ணிக்கோன்னு மேக்கப் முருகேஷ் சொன்னாரு! 'உதிரிப்பூக்கள்'ளே நான்தான் நடிச்சிருக்கணும். டைரக்டர் கூட வரச் சொல்லுன்னு சொன்னாராம். அதுக்குள்ளாற யாரோ வேண்டாதவங்க 'இவ கால்ஷீட் தகராறு பண்ணுவா'ன்னு வத்தி வெச்சுட்டாங்க. மன்னார்குடி வேலாயுதம் 'எல்லாம் புதுமுகங்களாப் போட்டு எடுக்கப் போறோம், நடிக்கிறியா'ன்னு கேட்டார். அவரும் புதுத் தயாரிப்பாளர். சரிங்கன்னு சொல்லி, இரண்டு மாசம் தேதி கொடுத்தேன். ஆனால் அவரு எடுக்கலை. நமக்கு உதிரிப்பூ சான்ஸும் உதறிட்டுப் போயிடுச்சு...

"பிரபு அண்ணன் வராரு. வாங்கண்ணே, போட்டோவுக்கு நான் ரெடி. டிரஸ்ஸு நீங்க சொல்றபடி.... இன்னா சாப்டறீங்க... பிரபு அண்ணன், பத்திரிகையிலே அட்டைப் படமா வர்றதுக்கு வழி பண்ணுங்க... சும்மா கட்பாடி விளம்பரப்படம் மாதிரியே எடுத்துக்கிட்டு இருந்தால் எப்படி? பிரபு அண்ணன், அந்த அம்மா... பேர் சொல்லக்கூடாது... அவங்களைப்பத்தி இத்தோட ஆறுதடவை கிசுகிசுவிலே வந்துடுத்துங்க. நம்மள பத்தி ஒண்ணுகூட வரல்லீங்க... சொல்லுங்க, வேணும்னா தூக்கமாத்திரை சாப்பிடறேன். பேப்பர்லே நியூஸ் வருமே. பிரபு அண்ணன், உங்களுக்குத்தான் அந்த 'மாங்காடு புரடக்ஷன்' கம்பெனியில் அல்லாரும் வேண்டியவங்களாச்சே. சிபாரிசு செய்யக்கூடாதா? நம்ப போட்டோ ஆல்பம் ஒண்ணு கொடுக்கறேன். அண்ணே... வயசு ஏறிகிட்டே போவுதே..."

மங்களகுமாரி மட்டுமல்ல, மங்களகுமாரிகள் யாவரும் நம் அனுதாபத்துக்கு உரியவர்கள்!

# பரணி

கணக்கு வழக்கு இல்லாத அளவுக்கு புகையிலைத் தோட்டம், எலுமிச்சம்பழத் தோப்பு, திராட்சைக்காடு என்று பணத்தைச் சாகுபடி செய்யும் தோட்டங்களை ஆந்திராவில் வைத்திருக்கும் மிகப்பெரிய செல்வந்தரின் ஒரே மகன் பரணி. சென்னையில் படித்துக் கொண்டிருக்கும் 'குழந்தை'! நூறு ரூபாய் நோட்டுக்குக் குறைந்த நோட்டைக் கையால் தொடுவதே பாவம் என்ற மனப்பான்மையை வளர்த்துக் கொள்ளும் அளவுக்கு அவனுக்கு 'பாக்கெட் மணி' பக்கெட் பக்கெட் டாக 'நாயினா' அனுப்பிக் கொண்டிருக்க, சென்னையில் ஒரு கோஷ்டியையே சேர்த்துக் கொண்டு அட்டகாசமாக இருப்பவன் பரணி.



இருபத்திரண்டு வயதில் பி.யூ.சி. பரீட்சையின் மேல் போர் தொடுத்துக் கொண்டிருக்கும் பரணியைச் சுற்றி நாலைந்து நண்பர்கள் இருந்து கொண்டே இருப்பார்கள். "டேய் பசங்களா, இன்னிக்குக் கிளாஸ் 'கட்'டுடா" என்றால் எல்லா நண்பர்களும் 'கட்'டிடுவார்கள். காரணம், அன்று பரணி சினிமா, ஓட்டல் என்று முழு தின புரோகிராம் போட்டிருப்பான்.

"டேய், பரணி, இன்னிக்கு கெமிஸ்ட்ரி பிராக்டிகல். நான் லீவு போடலைடா" என்று நண்பன் முரளி சொல்வான்.

“டேய்... சுந்தர்... ராஜா... கமலக்கண்ணா... துரை... ரவி... நாராயணசாமி... பாத்திங்களாடா, முரளி பண்ற புரளியை. கெமிஸ்ட்ரியாம்... மிஸ் பண்ண முடியாதாம். பிரமாதமான கெமிஸ்ட்ரி. பெரிய மிஸ்டரியா?... மிஸ் பண்ணாட்டா மிஸஸ் பண்ணேண்டா... அந்தப் பொண்ணு மீனாட்சிதான் உன் பின்னாலேயே சுத்தி வராளே... மேக்ஸி போட்ட அசல் உசிலைமணி!... ஏடு கொண்டலவாடா!... நம்ப முரளியைக் காப்பாத்தப்பா” என்று அட்டகாசமாகச் சொல்ல, ஜால்ராக்கள் பலமாகச் சிரிக்கும்!

“இல்லேடா பரணி...” என்று முரளி இழுப்பான். “போய் வா... நாளைக்கு பரீட்சையில் காப்பி அடிக்கணும் என்றால் யாராவது ஒருத்தருக்காவது பாடம் தெரிஞ்சிருக்கணும்... டேய்... இவனுக்காக நாமே எக்ஸ்ட்ரா சோலாபட்டுரா அடிக்கலாம். டேய் முரளி... ஸ்கார்ச்சி படம் போறோண்டா... வரலைங்கறே... போ... போ... பாவப்பட்ட ஜென்மம்... அனுபவிக்கக் கொடுத்து வைக்கலை!” என்பான்.

பளபளக்கும் பூ போட்ட ‘இம்போர்ட்டட்’ சிங்கப்பூர் ஷர்ட், அகல பட்டை பெல்ட், ஷர்ட் கலருக்குப் பொருத்தமில்லாத ‘லீ வைஸ்’ ஜீன்ஸ், உயரமான ஹீல்ஸ் வைத்த ஷூ, கழுத்தில் கனமான செயின், வலது கையில் கடிகாரம், இடது கையில் 555, லைட்டர், சட்டைப் பட்டனின் ஆதரவில் அனாயசமாகத் தொங்கிக் கொண்டிருக்கும் தங்க ஃப்ரேம் கருப்புக் கண்ணாடி, அலைபாயும் கிராப், கிருதா. அரை பர்லாங் தூரம் வரை தூக்கியடிக்கும் கோயா சென்ட் மணம். இடது ஜேபியில் பார்க்கர் பேனா (இந்தப் பேனாவால் அவன் எழுதுவது: பணம் கேட்டு அப்பாவுக்கு எழுதும் கடிதம் மட்டும்தான். ஆயிரத்திற்குக் குறைந்து எழுதத் தெரியாது இந்தப் பேனாவிற்கு!)

இவைகள் எல்லாவற்றையும் விட பரணிக்கு தனி டிரேட் மார்க் தருவது அவனது ஹோண்டா மோட்டார் சைக்கிள். அதில் இவனாகவே ஏகப்பட்ட விளக்குகள், கண்ணாடிகள், அலங்காரங்கள் என்று செய்து வைத்திருப்பான்.

“டேய் தோஸ்துங்களா... ஒரு டாக்சியைப் புடியுங்கடா...

மூணு பேரு நம்ப மோட்டார் சைக்கிளில் குந்துங்க. ஏமிடா... ஏமி... நாலு பேர் மோட்டார் சைக்கிளில் போனால் புடிச்சுடுவானா... அவன் எவன்டா அப்படிப்பட்ட போலீஸ்காரன்... இனிமேல் பொறந்துதான் வரணும் பரணியைப் புடிக்க... அவனோட ஒரு மாசம் சம்பளத்தையே 'ஊரிக பெட்டுக்கோ'ன்னு சொல்லி அமுத்தினா, ஆள் நம்ப மோட்டார் சைக்கிளைத் தொடச்சிக்கூட விடுவான்...

முதல்லே போய் ரெண்டு ஐஸ்கிரீம் வெட்டிட்டு படம் போவணும்... ஏண்டா சுந்தரு... மண்ணடியில் யாரோ ஃபாரின் கேஸட்டுங்க வெச்சிருக்கான்னு சொன்னியே... போய் பிராஞ்சுகிட்டு வரலாம்... டேய்... ஸ்டீரியோஃபோனிக் போய் குவாட்ரஃபோனிக் வந்திருக்குது. பாட்டு போட்டால் இன்னமா அலர்றது தெரியுமா?... ஆளைத் தூக்கிக்கிட்டுப் போவுது! இப்பவே சொல்லிடுங்கடா... டெஸ்ட் மாட்சுக்கு எத்தனை பேருக்கு டிக்கட் வாங்கணும். துரை கிட்டே சொன்னால் வாங்கிட்டு வருவான் போய் வர காபி செலவும், சாந்தா கேப் ரவா இட்லியும் கொடுத்தா போதும் அவனுக்கு! '...ஆமாம்... கமலக்கண்ணா... நம்ப கிளாஸ்லே புதுசா ஒரு இரட்டைப் பின்னல் வந்திருக்குதே, பேர் என்னடா? ஏண்டா, அது பாவாடை சட்டை போட்டுக்கிட்டு வருதே! நம்ப சார்பாக நாலு லாலிபாப் வாங்கிக் கொடுத்துட்டு வாடா பாப்பாவுக்கு!

"....நாராணசாமி... சைக்கிளில் ஒரு மிதி மிதிச்சு பனகல் பார்க் மூலை வெத்தலை பாக்குக் கடையிலே போய் ஆறு பீடா வாங்கிக்கிட்டு வாடா... ஜர்தா போடச் சொல்லு. பரணிக்குன்னு சொல்லு. ஸ்பெஷலாப் போட்டுக் கொடுப்பான்...எனக்கு ஒரு ஐடியா... வருகிற சம்மர் லீவில் சிங்கப்பூர் போய் வரலாம் ஊரையே சுருட்டிக்கிட்டு வரணும்... செலவுக்கு ஏண்டா கவலைப்படறீங்க... எனக்கு ஒரு முறைப்பொண்ணு இருக்குது... அதை நான் கட்டிக்கப் போறேன்னு நெனைச்சிக்கிட்டிருக்காங்க... மூச்சு விட்டால் போதும் பத்தாயிரம் கூடக் கொடுப்பாங்கடா..."

# அல்லா பக்ஷ்.

முப்பது வருஷமாக அதே 'பீட்'டில் தபால் வினியோகம் செய்து வரும் தபால்காரர் அல்லா பக்ஷ். அந்தப் பகுதி மக்களின் ஒரு பிரியமான நபர்; நண்பர். எல்லாக் குடும்பங்களின் நல்லவைக் கெட்டவைகளைத் தெரிந்து வைத்துக் கொண்டு, தேவையான (பல சமயம் தேவையற்ற) ஆலோசனைகளையும் தருவார். அவருக்கு வினியோக நேரம் என்கிற ஒழுங்கெல்லாம் கிடையாது. அவர் கொண்டு வந்து கொடுக்கிற நேரம் தான் டெலிவரி டைம் என்று நாம் வைத்துக் கொள்ள வேண்டும்.



வயதுக்கு மீறிய வயோதிகத் தனம். கவனிப்பாரற்ற தோட்டத்தில் வளரும் புல் மாதிரி வளர்ந்திருக்கும் தாடி, மீசை. காக்கி நிற யூனிபாரம். தலையில் குல்லாய். பளபளக்கும் பேட்ஜ். தோளில் பை. காதில் பென்ஸில். நடையில் ஒரு விந்தல்.

தெருக்கோடிக்கு வரும் போதே சிலர் "என்ன போஸ்ட் மேன், லெட்டர் இருக்குதா?" என்று அவரை அணுகிக் கேட்பார்கள்.

அருகில் உள்ள வீட்டுத் திண்ணையில் உட்கார்ந்தால் அரை மணிக்கு நகர மாட்டார். அங்கேயே போகிறவர்கள் வருகிறவர்களைக் கூப்பிட்டு வினியோகம் பண்ணிவிடுவார்!

"எலே... ஜிப்பிரமணி... இப்படி வா... இந்தக் கடிதாசியை உங்க வூட்டு மாடியிலே இருக்கிறவங்ககிட்ட கொடுத்துடு... போகச்சே டீக் கடைக்காரரை இங்கே வரச் சொல்லு... அட சொல்லுடான்னா... மணியார்டர் வந்திருக்குதுன்னு சொல்லு, உய்ந்து அடிச்சிக்கினு ஓடி வருவான்... இங்கே வந்தாதானே தெரியும் வக்கில் நோட்டீஸ்னு... யாரு... ஜானகி அம்மாவா... கோவிலுக்கு போயிட்டுப் போவறியா... இப்படி அந்த வாழைப் பழத்தைக் கொடுத்துட்டுப் போ... லெட்டரா... நேத்துதானே கொடுத்தேன். மருமவளுக்கு மூணு மாசம்னு சம்பத்து எழுதியிருந்ததே. இன்னிக்கு என்ன நாலு மாசம்னு கடிதாசி வருமா..."

"அடப்பாவி. எல்லா லெட்டரையம் படிச்சுட்டுத்தான் கொடுக்கறையா?.. உன் பேரில் கம்பளைண்ட் கொடுக்கணுமடா..."

"கொடேன்... போஸ்டல் சூப்ரண்ட் நான் பார்த்து வளர்ந்த புள்ளை. அப்பாயின்ட்மென்ட் ஆர்டரே நம்பதானே டெலிவரி பண்ணோம் அரை நிஜார் போட்ட புள்ளாண்டானா அந்த வூட்லே இருக்கறப்ப புடிச்சியே தெரியுமே... கம்பளைண்ட் கொடுக்கிறாங்களாமில்லை. என்ன வக்கில் ஜகன்னாதன் சார்... இப்படி வாங்க... ஏழு ரிஜிஸ்தர் லெட்டர் இருக்குது. நீங்க கட்சிக்காரன் செலவிலே நோட்டீஸ் விடறீங்க... அல்லாம் 'ரிஃப்யூஸ்ட்' போட்டு திரும்ப வரது... நான்தானே டெலிவரி பண்ண வேண்டியிருக்குது... உங்க வூட்டு மாடி ஏறி வர்றதுக்குள்ளேயே உசிர் போய் உசிர் வர்றது... எனக்குத்தான் கால், சாய்காலாச்சே. ஆமாம் சார்... உங்களை நானே கேக்கணும்னு இருந்தேன்... எனக்காக ஒரு நோட்டீஸ் கொடுக்கணும். நம்ப திம்மாவரம் நிலத்திலே வேலி போட்டிருந்தேன். பக்கத்து நிலத்துக்காரன்..."

"அல்லா பக்ஷ், நீங்க கோர்ட்டுலே வந்து பாருங்க... இப்படி நடு ரோடுலே, அதுவும் நீங்க ரேட்டி பார்த்துக் கொண்டிருக்கறப்போ நோட்டீஸ் விவகாரம் எல்லாம் எதுக்கு?"

வக்கில் போனதும், "அல்லா பக்ஷ் பீஸ் கொடுக்கமாட்டானோன்னு நழுவிப் போவறார் வக்கீல்... யோவ்... யோவ்... சைக்கிள்ளே போற சபாபதி... இப்படி வா... இந்த பார்சலை கோடியிலே இருக்கிற புக்ஷாப்லே இறக்கிட்டுப்போ... நான் அப்பாலே போய் கையெழுத்து வாங்கிக்கிடறேன்... சைக்கிள்தானே தூக்கிப்போவுது. கெடந்துஅளுவறயே... இல்லாக்காட்டி நான்தான் சுமக்கணும்" என்று கூறி நாலு கனமான பார்சலை அனுப்பி வைப்பார்.

"யாரு அத்தையம்மாவா... ஒரே வெய்யில்... ஜில்லுன்னு தூத்தம் கொடுங்கோ... ஆத்திலே என்ன விசேஷம்... அமாவாசை கூட இல்லையே... ஆமாம், காஞ்சிவரம் போய் அத்திவரதரை சேவிச்சுட்டு வந்தேளா? திவ்யமாய்ப் பெருமாளை சேவிக்காமல் தளிகை உள்ளிலேயே இருக்கறீங்களே?" சுத்தமாகப் பிராமண பரிபாஷையில் அல்லா பக்ஷ் பேசுவார்.

"அல்லா பக்ஷ்... ஒனக்கு என்னமாடா இவ்வளவு நன்னா எங்க பாஷை வந்துடுத்து. இரு, மோர் கொடுக்கறேன்" என்பாள் ஒருவிதப் பரிவுடன்.

சிலர் வீட்டில் கவரைக் கொடுத்துவிட்டு அங்கே நின்று கொண்டிருப்பார். கவரைப் பிரித்து அவர்கள் கடிதத்தைப் படித்த பிறகு, 'என்ன சேதி' என்று கேட்டறிந்து கொண்டுதான் போவார். "எப்போ வருது பார்த்தசாரதி அமெரிக்காவிலிருந்து? ஆச்சே, போய் மூணு வருஷம் ஆவலை?" என்பார்.

தீபாவளி, பொங்கல் என்றால் அல்லா பக்ஷ் யார் வீட்டிலும் போய் இனாம் என்று கேட்க மாட்டார். அவர்களாகவே ஐந்து, பத்து என்று கொடுத்துவிடுவார்கள். இல்லாவிட்டால் அவர்களுக்குப் பண்டிகை பூர்த்தியான திருப்தியே இருக்காது!

# ராஜாமணி

ராஜாமணிக்குத் தெரியாத விஷயங்கள் எதுவும் என்சைக்ளோபீடியா பிரிட்டானிகாவிலோ, கலைக்களஞ்சியங்களிலோ, ரீடர்ஸ் டைஜஸ்ட் பத்திரிகையிலோ இது வரை அச்சாகவில்லை. உண்மையில் உலகிலுள்ள எல்லா விஷயங் களிலும் அவருக்கு அவ்வளவு தேர்ச்சியா என்று வியப்படையாதீர்கள். ராஜாமணி பேச ஆரம்பித்தால் அப்படித்தான் ஒரு பிரமை உங்களுக்கு உண்டாகும்! இலக்கியம், அரசியல், சினிமா, பக்தி, ஜோசியம், பொருளாதாரம், கிசுகிசு விஞ்ஞானம், மருத்துவம் என்று எந்தத் துறையிலும் அவர் புகுந்து விளையாடுவார்.



முப்பது வயது. நிறைய படித்துக் கொண்டிருப்பவர். ஆதலால் சோடாபுட்டி கண்ணாடி! மழமழ வென்று வாரிவிடப் பட்ட கிராப்பு. மழமழ வென்று ஷேவ் செய்யப் பட்ட முகம். நல்ல சிகப்பு. பளிச் சென்ற வெள்ளை பாலிஸ்டர் ஸ்லாக், சரிகை வேஷ்டி, கையில் ஒரு புத்தகம், படித்த இடத்திற்கு அடையாளமாக அதன் நடுவே ஒரு விரலை விட்டுப் பிடித்துக்கொண்டிருக்கும் பாங்கு இவை ராஜாமணியை ஓரளவு விவரிக்கும்.

ஜப்பான் கம்பெனி ஒன்றில் பிரதிநிதி. குறைந்த வேலை. நிறைந்த சம்பளம். கல்யாண மார்க்கெட்டில் இருப்பவர்.

அதோ ஹிக்கின்பாதம்ஸ் புத்தகக் கடையிலிருந்து வெளியே வருகிறார். வாருங்கள் அவரைச் சந்திக்கலாம்.

"ஹலோ ராஜாமணியா ... .என்ன நிறைய புத்தகம் வாங்கியிருக்கிறீங்க..."

"நிறைய இல்லை. நாலு புஸ்தகம் தான். ஜென் புத்திஸம், ஹோரரி அஸ்ட்ராலஜி, தொல்காப்பிய விளக்கம். அப்புறம் திருவரங்கன் உலா நாவல் ..."

"ஜோஸ்யத்தில் எப்போதிலிருந்து இன்ட்ரஸ்ட்? ..."

"சும்மா படிக்க ஆரம்பிச்சேன். பிடித்துக் கொண்டுவிட்டது. வராஹ மிஹிராவின் லைஃப் ஹிஸ்டரி படிச்சு பார்க்கணும் ... ஹூம் ... ஜோதிடம் பெரிய ஸயன்ஸ். துரதிர்ஷ்டவசமாக மரத்தடியில் அவனவன் உட்கார்ந்து ஐந்து பைசாவுக்கும் பத்துபைசாவுக்கும் லாட்டரி பரிசு அடிக்கும், வீடு வாங்குவே, நீ நினைக்கிற பொண்ணை கல்யாணம் பண்ணிக்குவே, கோர்ட் கேஸ் ஜெயமாகும்னு சொல்லிடறான். அதனால் இந்த சயன்ஸை பேத்தல் என்று ரொம்ப பேர் சொல்லறாங்க ... மேல் நாட்டிலே நம்ம பொக்கிஷங்களை எடுத்துக்கொண்டு போய் சிரத்தையுடன் படித்து ஆராய்ச்சி செய்கிறாங்க. அந்த கலையின் ரியல் வேல்யூ அவங்களுக்குத் தெரியும் ...

"காசியிலிருக்கும் ஒரு இன்ஸ்டிட்யூட் 'வேதிக மேதமேடிக்ஸ்' என்ற பழைய கால புஸ்தகத்தை ஆராய்ச்சிக் குறிப்புகளுடன் போட்டிருக்கிறது. ரொம்ப அபூர்வமான புஸ்தகம். எத்தனையோ கணக்குகளை கம்ப்யூட்டர் மாதிரி சுலபமாகப் போடுவதற்கு சூத்திரங்கள் இருக்குது...

"கமலஹாஸன், ரஜினிகாந்த் இனி ஒண்ணா நடிப்பாங்களா. மாட்டாங்களா என்பது போன்ற விஷயங்களில் ரொம்பப் பேர் அதிக அக்கறை செலுத்தறாங்க. இது தப்பு என்று சொல்லவில்லை. நான்

கூட 'இளமை ஊஞ்சலாடுகிறது' படத்தை ஆறு தடவை பார்த்தேன். ஆனால் சினிமாவையும் தாண்டியும் உலகம் இருக்கிறது என்று ரொம்ப பேருக்குத் தெரியலை..."

"சினிமா ரொம்பப் பேரை கிரேஸியாக்கிட்டது. சினிமாக்காரர்களைத் தான் குற்றம் சொல்லணும்."

"அதெப்படி. அவங்க தொழிலை அவங்க செய்றாங்க. உன்னைக் கெட்டுப் போகச் சொல்றாங்களா, என்ன?... அதிருக்கட்டும், பெரிய கம்பெனியிலே திடீர் என்று லேபர் டிரபிள் என்கிறார்களே, என்ன காரணம் தெரியுமா? அதுதான் அவங்க தொழில் ரகசியம். செயற்கையா பற்றாக்குறை ஏற்படுத்துவதற்காக இவங்களே யூனியன் லீடருக்குப் பணம் கொடுத்து வேலை நிறுத்தத்தை ஆர்கனைஸ் பண்றாங்க. இதுக்கு என்ன சொல்றீங்க?.. பெரிய முதலாளிகளை நாம் கிரிடசைஸ் பண்ண மாட்டோம். நமக்குள்ளேயே ஒரு பயம்...

"பாருங்க, ரிக்ஷாவில் போகிறான். பேசின கூலி முக்கால் ரூபாய். ஒரு ரூபாய் கொடுத்துவிட்டு மீதி கால் ரூபாயைக் கேட்டு வாங்கறான். அதுவே அவன் டாக்சியில் போகட்டும். மீட்டரில் ஒன்பது ரூபாய் ஆகிறது. பத்து ரூபாயைக் கொடுத்துவிட்டு 'வெச்சுக்கோ' என்கிறான். மனுஷன் இழுக்கிறான். அவனுக்கு நாலணா கொடுக்க அழறான்...

"இதைத்தான் ஆண்ட்ரூ லெஸ்லி தாம்ஸன் தன் புஸ்தகத்தில் பிரமாதமா அனலைஸ் பண்ணி எழுதியிருக்கிறார்..."

"சரி வரேன்பா. தலைவலியாக இருக்கு. ஆஸ்பரின் மாத்திரை வாங்கணும்..."

"அதுதான் தப்பு. சுக்கு இருக்கிறதே, அதை பாலில் வைத்துத் தேய்த்து....."

*ராஜாமணியுடன் பேசிக்கொண்டிருப்பதே ஒரு அனுபவம்!*

# தாடித் தாத்தா

மூன்றே தெருக்கள் கொண்ட கிராமத்தின் நடுத்தெருவில், கூரை வேய்ந்த வீட்டின், மழமழவென்று மெழுகப்பட்ட திண்ணையில் உட்கார்ந்திருப்பவர் தான் தாடித் தாத்தா. இவர் கிராமத்தின் உயிர் நாடி. ஒரு காலத்தில் ப்ரைமரீ ஸ்கூல் வாத்தியாராக இருந்து ஓய்வு பெற்றவர். ஆதலால் 'கல்விமான்'!

ஊரின் தனிநபர் பஞ்சாயத்து (ஒன் மேன் ட்ரிப்யூனல்). நாடி ஜோஸ்யர், நாட்டு வைத்தியர், அரசியல் அறிஞர், பகுதி நேர போஸ்ட்மாஸ்டர், தெருக்கூத்து வாத்தியார் எல்லாம் இவரே.

ஊரில் இவருக்குத் தெரியாமல் அல்லது இவரது ஆலோசனை இன்றி ஒரு காரியமும் நடக்காது.



"யாரு ... பச்சையா போவறது. இப்படி வா ... இந்த தபால் பையைக் கட்டிப் போட்டு விட்டுப் போ. ரன்னர் வருவான். ஆமாம்... ராத்திரி இன்னா களத்து மேட்டிலே தகராறு. மறுபடியும் மருதாசலம் தண்ணி போட்டு விட்டு வந்துட்டானா? எத்தினி தபா சொல்லியிருக்கேன்! அவனுக்குப் புரிஞ்சாதானே. நம்ம வைத்திய சாஸ்திரங்கள்ளே சுத்தமாகப் போட்டிருக்குது... சேத்திரமது துமியளவும் தவிர்த்திடு. நேத்திரமது நேய மாகும். சாத்திரம் கூறும் சத்தியமதை பாத்திரமே நீ அறிவாய், பாத்திரு, புன்னைவன நாயகனே" என்று கல்லுளி சித்தர் பாடலே பாடியிருக்காரு. இதெல்லாம் யாரு படிக்கிறாங்க. 'சின்னிம்மா' பாட்டு

பாடறாங்க, பட்டணம் தான் 'போவல பொம்பளை'ன்னு ... ஹூம் யாரைச்சொல்லியும் பயனில்ல குரு ஓட்டம் போய் சனி வூட்டை வுட்டு நகந்தாத்தான் வெசாழ தசை வருது. அது இருக்குதே இன்னும் இரண்டு மண்டலத்துக்கு மேலே ...."

தாடித் தாத்தாவுக்கு, தாத்தாவாகும் முன்பு என்ன பெயர் என்பது யாருக்கும் தெரியாது. பலருக்கு நினைவு தெரிந்த நாள் முதல், கற்றாழை நார் மாதிரி பளபளக்கும் நெளிந்து நீண்ட ஓடும் தாடி. வயது ஏறியதால் உடலில் ஒரு மினுமினுப்பு. வலது கையில் தாயத்து. சிவப்பு துண்டு, வேஷ்டி... இடுப்பில் போன நூற்றாண்டைச் சேர்ந்த பட்டை பெல்ட் அவரது ஒட்டிய வயிற்றை மேலும் சின்னதாக்கியது. நெற்றியில் இருந்த பெரிய குங்குமப் பொட்டு அவருக்கு மதிப்பைத் தந்தது. தாடித்தாத்தா போஸ்ட்மாஸ்டராக இருப்பதுவும் பொருத்தம். தகவல்கள் பல அவரது திண்ணையில் பரிமாறப்படும். ஜோதிடம் தெரிந்தவர் என்று அவர் கூறிக்கொள்வதால்,"தாத்தா, புள்ளைக்கு மொட்டை அடிக்கனும். நாள் பார்த்துச் சொல்லு", "பொண்ணு பெரிசாச்சு, நல்ல நாளான்னு பாரு", "மாரியம்மா விழாவை என்னிக்கு வெச்சுக்கலாம்?" என்பது போன்று பலர் கேட்பார்கள்.

"அடுத்த மாசம் விழா, தெருக்கூத்து எதுவும் வெச்சுக்க முடியாது. போஸ்டல் இன்ஸ்பெக்டர் வராரு... வூட்டுக் கூறையை மாத்தனும். திண்ணையை சுத்தமாக மொழுகி வைக்கனும். டவுனுக்குப் போகச்சே ராமசாமியை காபி பில்லை வாங்கியாரச் சொல்லனும். இன்ஸ்பெக்டருக்கு காபி கொடுக்கனும்...முருகேசா! உன் வூட்டுலேருந்து நல்ல எளநீயாகக் கொண்டு வந்து வை. என்ன பார்க்கறே? இன்ஸ்பெக்டர் கண்டிப்பானவர். அப்பாலே நம்ம ஊர் தபாலாபீஸை மூடிடப் போறாரு..யாருடா அங்கே பண்ணையார் வூட்டு புள்ளைங்களா? குந்துங்க .சிலேட்டுலே எழுதுங்க. அணில், ஆடு, இலை ... எழுத்து சுத்தமாக இருக்கனும்." தாடித்தாத்தா எப்போதும் இயங்கியபடியே இருப்பார். அந்தக் கிராமமும் அவரைச் சுற்றி இயங்கிக் கொண்டிருக்கும்!

# கோபி

புல்லாங்குழல் வித்வான் கோபாலன் என்னும் கோபிக்கு பெயர் பொருத்தம் அபாரம்! மனுஷனுக்கு எப்போது எதற்குத் தான் கோபம் வரும் என்பது தெரியாது. இவர் கோபமெல்லாம் தன் மனைவி, மக்களிடம் மட்டும் தான் என்பதும்கூட! வீட்டை விட்டு வெளியே வந்தால் பரம சாந்த சொரூபி. மேடையில் உட்கார்ந்தால் இசை மன்னன் தான்!



கோபம் மட்டும் அவருடைய குறைபாடு அல்ல.தன் மனைவி, குழந்தை குட்டிகளின் நலனைப் புறக்கணிக்கும் அளவுக்குசொந்த சௌகரியம், சுகம் ஆகியவை களுக்கு மிக மிக முக்கியத்துவம் அளிப்பார்.

"ஊரெல்லாம் என்ன நல்ல பேர் இருந்து என்ன பிரயோஜனம்? வீட்டில் காலை வைத்தால் நரசிம்ம மூர்த்தி தான். 'தோடியில் ஒரு கோடி காட்டும் போதே ஓடிப் போய் பாராட்டலாம்.' என்று சுப்புடு எழுதுகிறார். நீங்கள் உச்சி குளிர்ந்து போகிறீர்கள். இந்த தடவை அவரை நானே பார்த்து சொல்கிறேன், உங்கள் குணத்தைப் பற்றி அதையும் தான் அவர் பத்திரிகையில் எழுதட்டுமே" என்பாள் மனைவி.

"போய் சொல்லேண்டி பரதேவதை. இன்னும் குடிகாரன், ஸ்திரீ லோலன், கடன்காரன், அப்பனைக் கொன்றவன், அண்ணன் வீட்டில் திருடியவன், குழந்தையின் கழுத்தை முறிக்கிறவன், கள்ளச் சாராயம் காச்சறவன் என்றெல்லாம் போய்ச் சொல்லு— மூனு மணி நேரம் கச்சேரி பண்ணிவிட்டு வீட்டுக்கு வந்தால் ஒரு கப் பால், காபி என்று ஒரு மண்ணும்

கிடையாது..... மூதேவியை என் தலையில் கட்டிவிட்டான் உன் அப்பன். நான் சம்பாதிச்சு போடறேன். நல்லா சாப்பிட்டு விட்டு என்னை சபிக்கிறே..... இந்த வீட்டிலே சோறும் வேண்டாம்; தண்ணியும் வேண்டாம். நான் போகிறேன்......'' என்று கத்திவிட்டு செருப்பை மாட்டிக்கொண்டு புயல் வேகமாக வெளியே போவார்.

"எங்கே கிளம்பிப் போறீங்க", என்று மனைவி கேட்டால், "சுடுகாட்டுக்கு! சந்தோஷம் தானே?" என்று கத்துவார்.

''ராயர் ஓட்டலுக்குப் போகணும்னா போய் சாப்பிட்டுவிட்டு வாங்களேன். என் மேல் கோபித்துக்கொண்டு தான் போகவேண்டும் என்று ஒரு சட்டமும் இல்லை" என்பாள் மனைவி. அதென்ன கோபத்திற்கும் ராயர் ஓட்டலுக்கும் சம்பந்தம்?

கோபிக்கு கோபம் வந்தால் நேரே ராயர் ஓட்டலுக்குச் சென்று எக்ஸ்ட்ரா அப்பளம், இரண்டு கப் தயிர் என்று போட்டுக்கொண்டு ஒரு பிடி பிடித்துவிட்டு வருவார்! கோபம் என்றால் டபுள் தீனி தான் கோபிக்கு.

ஆரம்பகாலங்களில் அவர் மனைவி சாப்பிடாமல் காத்துக் கொண்டிருப்பாள் கோபமாகப் போன கணவன் வந்து சாப்பிட்ட பிறகு தான் சாப்பிடலாம் என்று. இவரோ நன்றாகச் சாப்பிட்டுவிட்டு வெற்றிலையைக் குதப்பிக்கொண்டு வருவார். ஆகவே அவரது மனைவி இப்போதெல்லாம் "சாயங்காலம் இட்லி சாப்பிட்டது எங்களுக்குப் பசிக்கவில்லை.. நீங்கள் கோபித்துக் கொள்ளுங்கள். அதன் பிறகு நீங்கள் வழக்கமாகப் போகும் இடத்துக்குப் போய், வெட்டி விட்டு வாருங்கள்," என்பாள். இதற்கும் அவர் கத்துவார். அவளுக்கு மரத்துப் போய் விட்டதால் கவலைப் படமாட்டாள்.

வீட்டிற்குள் அழுக்கும் கிழிசலுமாகத்தான் இருக்கும். சம்பாதிப்பதால் தனக்குத்தான் எல்லா சௌகரியங்களும் வசதிகளும் இருக்கவேண்டும் என்று கருதுகிறவர் கோபி. இவருடைய சட்டை, துணிகள் லாண்டிரியில் போட்டு சலவையாகி வரும். இவர் படுக்கை பெட்ஷீட் எல்லாம்

புதுசாக இருக்கும். அதே சமயம் மனைவி, குழந்தைகள் கிழிந்த பாயில் அழுக்குத் தலையணைகளை வைத்துப் படுப்பார்கள். டிரஸ்ஸிலும் ஒட்டும் தையலும் இருக்கும். வீட்டில் இரண்டு வாழைப்பழம் இருந்தால் இவருக்கு முழுசாக ஒன்றும், மற்றதை மற்றவர்கள் சாம்பிள் மாதிரி கொஞ்சம் கொஞ்சம் சாப்பிடுவார்கள்!

பளபளவென்ற மஞ்சள் சில்க் முழுக்கை சட்டை. வெள்ளை வேட்டி. கையில் ஒரு மோதிரம். கழுத்தில் டாலர் மாட்டிய தங்கச் சங்கிலி. படு சுருட்டைத் தலை மயிர். நெற்றியில் குங்குமப் பொட்டு. கோபம் வருவதற்கு வசதியான கூர்மையான மூக்கு. இரு புருவங்களுக்கிடையே ஒரு சுருக்கம்! இதுதான் கோபி.

யாராவது நண்பர், "என்ன கோபி, பத்து ரூபாய் இருக்குமா?" என்று கேட்டால் உடனே ஜேபியிலிருந்து எடுத்துக் கொடுத்து விடுவார். அதுவே வீட்டில் மனைவி கேட்டால் கத்துவார். "நான் என்ன பணம் காய்ச்சி மரமா? மனுஷன் வீட்டிற்குள் நுழைந்ததும் பணம் பணம் என்று பிய்ச்சல் பிடுங்கல்தானா?... ஏதாவது லட்சாதிபதிக்கு உன்னைக் கலியாணம் பண்ணி வைக்காமல் என் தலையில் கட்டினான் உங்கப்பன்... உனக்கு சம்பாதித்துப் போடுவதற்குள் என் தாவு தீர்ந்து விடுகிறது... சரி, சரி. பசியாக இருக்கிறது. உருளைக் கிழங்கு பஜ்ஜி போடு." என்பார்.

"கடலை மாவு, உருளைக் கிழங்கு, எண்ணை மூன்றும் வாங்கி வந்தால்தான் முடியும்."

" கிரோஸின் இருக்குதா? அதை என் மேலே கொட்டி வத்திப் பெட்டியைக் கிழிச்சு வை... எப்போ பார்த்தாலும் இல்லை இல்லை பாட்டுதானா? எவ்வளவு வாங்கிப் போட்டாலும் வீட்டில் உட்கார்ந்து தின்னுத் தீர்த்துடுங்கோ.... சம்பாதிக்கறவனுக்குக் காலி சட்டிதான்... கர்மம்... கர்மம். எங்கேயாவது ஒழிஞ்சி போறேன். எனக்குத் தலை முழுகிடு..." என்று கத்திவிட்டு விடுவிடுவென்று வீட்டை விட்டு வெளியே போவார். எங்கு? நேரே ராயர் ஒட்டலுக்குத்தான்!

# நாணா

சைலன்சர் இருந்தும், சைலன்சர் இல்லாத மோட்டார் சைக்கிளைவிட அதிகமாக படபட சப்தம் போடும் மூன்றரை ஹார்ஸ் பவர் மிலிடிரி மோட்டார் சைக்கிளில் அட்டகாசமாக, அண்ணாமலை மன்றத்தின் ஸ்டேஜின் வாசல் கதவு வரை வந்து வண்டியை நிறுத்துபவன்தான் நாராயணசாமி என்னும் நாணா.



நல்ல உயரம். நல்ல அகலம். ஆஜானுபாஹுவான ஆள். பூப் போட்ட ஸ்லாக், மேல் பட்டன் திறந்திருக்கும், கழுத்தில் தங்கச் செயின், இடது கையில் டிஜிடல் கெடியாரம், கழுத்தில் கர்ச்சிப் லாவகமாகச் சுற்றப் பட்டிருக்கும். இடது கையில் சாவிக்கொத்து.

நாணா இருக்குமிடத்தில் அட்டகாசமான சிரிப்பு இருக்கும். ஊர் வம்பு இருக்கும். சென்னையிலுள்ள

அமெச்சூர் நாடக நடிகர்களைப் பற்றியும் குரூப்களைப் பற்றியும், அரட்டையும் கீழ்வெட்டும் இருக்கும். நகர சபாக்களைப் பற்றி நுனி நாக்கு விமர்சனம் இருக்கும்.

நாற்பதைத் தாண்டிய நாணா ஒரு அமெச்சூர் நாடகக்குழுவின் சர்வாதிகாரி. இருந்தும் எல்லாரும் அவனை நாணா, நீ, வா, என்று சர்வ உரிமையுடன் பேசுவார்கள். அவர்களுக்குத் தெரியும், நாணாவிடம் தாராளமாக உரிமை எடுத்துக் கொள்ளலாம் என்று. சில சமயம் கோபம் வந்து நாணா கத்த ஆரம்பித்தால் எல்லோரும் கப்சிப் தான்.

நாணா, நாடகத்தில் நடிப்பதை நிறுத்தி பல வருஷங்களாகின்றன. இருந்தும் நாடகத்தின் மேல் தீராத மோகம்.

"என்னடா, பசங்களா.... மணி ஐந்தரை ஆச்சு. சரியா ஆறாவது மணிக்கு டிராமாவிற்குப் பெல் அடித்துவிடுவேன்... எவனாவது ரெடியாகவில்லை என்றால் அவன் இனிமேல் நம்ம குரூப் பக்கமே தலைவைத்துப் படுக்க வேண்டாம்.... யாரு தர்மலிங்கமா? மேக்கப் போட நீ வந்துட்டியா இன்னிக்கி... உங்கப்பா எங்கே? மனோரமா டிராமாவிற்குப் போய்ட்டாரா? அஞ்சு ரூபாய் அவங்க ஜாஸ்தி கொடுக்கிறாங்களா... இவர் ஓடிப் போய்ட்டாரு... சரி.... சரி.... பின்னால் பேசிக்கிறேன். நீ வேலையைக் கவனி.

"ஆமாம், ஏண்டா சேச்சா... மீசையை சரியா ஒட்டவெச்சுக்கோ... கலைவாணர் அரங்கத்திலே ஆன மாதிரி ஆகப்போகுது... ஏம்மா சொர்ணா, ஏழு கம்பெனி நாடகத்துலே நீ நடிக்கிறது தப்பில்லை. உன் வண்டியும் ஓடணும். நான் கொடுக்கற ஸாடே ஸாத் ரூபாயில் உன் வண்டி ஓடுமா... அதுக்காக 'துரியோதனன்' நாடக டயலாக்கை எங்க காமெடி நாடகத்தில் போட்டுக் குழப்பாதே... ஏற்கனவே கிச்சு குரூப்காரங்க நம்பளைக் கவிழ்க்கப் பார்த்திகிட்டு இருக்காங்க. சரி சரி போ... மையை கண்ணிலே ஏகமா வாரி பூசிக்காதே. நாம்ப, எக்ஸார்ஸிஸ்ட் டிராமா போடலே...

"ஏம்பா ரகு... வர்ற டிராமாவிலிருந்து ப்ராம்ப்டிங்க்

கிடையாது. டயலாக்கை நெட்டுரு போடாமல் கதை பண்ண முடியாது... தெரிஞ்சுக்கோ!"

"ஏண்டா நாணா, ராமமூர்த்தி நேத்து புது டிராமா போட்டான் பார்த்தியா?"

"பார்த்தேன்... ரொம்ப ரொம்ப பாலிஷ் பண்ணணும்... கேளு கதையை. நேற்று டிராமா பார்க்க போனேன்... அது ஒரு பாடாவதி சபா. 'சார் டிக்கட்டு'ன்னு கேக்கறான், கேட்டிலிருந்த பொடிப்பயல்! என்னைப் பார்த்து இது வரை எந்த சபாவிலும் டிக்கட் கேட்டதில்லை. நாணாவை அவனுக்குத் தெரியாது... 'யாருடாப்பா கொழந்தை. 'உங்க செக்ரடிரியை கூப்பிடுப்பா'ன்னேன்... அப்போ என்ன ஆச்சு, சோ வந்து இறங்கறான் காரில்...'யாரு நாணா அண்ணாவா? நம்ப டிராமாவிற்கெல்லாம் நீங்க வர்றதேயில்லையே... நாளைக்கு என் டிராமா இருக்கு, உனக்கு கார் அனுப்பறேன் அப்பிடி'ன்னான். பார்த்தான், கேட்காரப் பொடியன். அசந்து போய்ட்டான்...

"அதிருக்கட்டும், ஒரு சமாசாரம் சொல்லணுமே இந்த டில்லி கணேசன் இருக்கானே அவன் வந்து, 'அண்ணா ட்ரூப் ஆரம்பிக்கலாம்னு இருக்கேன்' அப்பிடின்னு அட்வைஸ் கேட்டான். 'ஏண்டா வீண் தொல்லை. டயம் இருக்கிறபோது என் குருப்பிலே ஆக்ட் பண்ணுடா'ன்னேன். நம்ப புது டிராமா 'உயரப் பறந்த ஊர்க்குருவி'லே அவனைப் போட்டுக்கலாம். நல்ல பயல். கொஞ்சம் நான் ட்ரெய்னிங் கொடுத்தா ஷேப் ஆயிடுவான்.

மணி ஆச்சுடா... என் வாயைப் பார்த்துண்டு இருக்காதீங்க, ரெடியாயிடுங்க... ஏய், தொரை... அரையே அரை கப் காபி கொடு... மத்தியானம் பூரா ராகவனுடன் ஸ்க்ரிப்ட் டிஸ்கஷன். டயலாக்கா எழுதியிருக்கான், வார்த்தைக்கு வார்த்தை நான் சரி பண்ண வேண்டியிருந்தது.. ஒரே தலைவலி...

பசங்களா, முதல் விசில் கொடுத்துடறேன்..."

உலகம் நாடகமேடையாக இருக்கலாம் நாணாவிற்கு வாழ்க்கையே நாடகமேடை!

# பூபதி

குறுகலான மார்க்கெட் வீதியின் ஆரம்பத்தில் உள்ள பழையகால கடையில், சுற்றும் பல வித டின் டப்பாக்கள் சூழ, நடுநாயகமாகச் சின்ன ஸ்டுலில் சம்மணமாக உட்கார்ந்து கொண்டு, ஒரு கையால் உத்திரத்திலிருந்து தொங்கும் கயிற்றைப் பற்றியபடியே மற்றொரு கையால் சாமான்களை எடுத்துக் கொடுத்து, பணத்தை வாங்கிப் பக்கத்தில் உள்ள கல்லாப் பெட்டியில் பணத்தைப் போடுபவர் பூபதி. ஊரின் ஒரே நாட்டு மருந்து கடையின் அதிபர்.



கடை பரம்பரை சொத்து. மருந்து சாமான்கள் வைக்கப்பட்டிருக்கும் டின்களின் மேல் உள்ள துருவே, கடையின் வயது ஐம்பதுக்கு மேல் என்பதை நிரூபிக்கும். அந்த டப்பாக்களின் மேல் கோணல் மாணலாக வசம்பு, திப்பிலி, கண்டங்கத்திரி, இந்துப்பு, கிச்சிலிக்கிழங்கு, குங்கிலியம், ஏலரிசி என்று பல நாட்டுமருந்துப் பெயர்கள். கடைப் 'பையனும்' ரொம்ப புராதன ஆசாமிதான்.

பளிச்சென்ற வெள்ளை வேட்டி ஸ்லாக், கழுத்தில் தங்கப் பூண்போட்ட ஒற்றை ருத்திராட்சம், இடது கையில் தங்கச் செயின் போட்ட கோல்ட் வாட்ச், விரலில் இரண்டு மூன்று மோதிரங்கள், உட்கார்ந்தே வியாபாரம் செய்வதால், சற்றுப்

பருமனடைந்த உடல், உப்பி இருக்கும் கன்னம், புல்தரை போன்ற மீசை, சதா பேசிக்கொண்டிருக்கும் வாய் -இவைதான் பூபதி.

தமிழ்ப் பேப்பரைப் படித்தபடியே கமெண்ட் அடிப்பார். தெருவில் போகிறவர்களை இவராகக் கூப்பிட்டு ஏதாவது உள்ளூர் அரசியல் வம்பு பேசுவார். தனது மருந்து மூலிகைகளின் மேல் அவருக்கு அபார நம்பிக்கை. ஆகவே எந்த வம்புப் பேச்சுடனும் தன்னுடைய நாட்டு மருந்துகளுக்கு விளம்பரமும் தருவார்.

"போங்க, அண்ணாச்சி, போங்க... கையில மருந்துக் குப்பியை எடுத்துக்கிட்டு தர்மாஸ்பத்திரி க்யூலே போய் நில்லுங்க. உம், என்னவோ இந்த இங்கிலீஸ் மருந்து மேலே மோகம்.... எங்க நாயினா ஒரு தபாகூட இங்கிலீஸ் மருந்தை சாப்பிட்டதில்லை. தொண்ணூறு வயசாச்சு... வூட்ல போய்ப் பாருங்க.... இன்னமா இருக்காருன்னு பாருங்க.... வைரம் அசல் வைரம். அத்த வுடு. உனக்கு இன்னா உடம்பு? காலில் பித்த வெடியா? ... அதுக்கு மதார்சிங்கு களிம்பு போடு. மூணே நாள். இருக்க இடம் தெரியாம பூடும். போங்க போங்க ஓமியோபதி, அலோபதி எல்லாம் பாத்துட்டு கடைசியிலே நம்ப கிட்டே தான் அல்லாரும் வர்றாங்க... சேட் வர்றார்...முனிசிபாலிடி எலெக்ஷன்லே நிக்கப் போறியா... உனக்கு ஏம்பா வம்பு. உன் கடையை நல்லா கவனிச்சியானா போதும்... ஆமாம், நேத்து சினிமா கொட்டாவுலே இன்னா தகராறு... நீ தான் படம் பாக்கிறயோ இல்லியோ தெனைக்கும் அங்கே போவியே, போறவங்க வர்றவங்களை பாக்க...

"வாங்க முதலாளி... இன்னிக்கி என்ன ஈரங்கியா? போ, உன் கரும்பு வித்த பணமெல்லாம் அந்த வக்கீலுக்குத்தான் போகுது.... ஒரு வேடிக்கைப் பாத்தியா, அவர் பேரு சக்கரை... நீ கரும்பு போடறே; அவரு அறுவடை செய்யராரு. நல்ல முந்திரிப் பருப்பு வந்திருக்கு. வாங்கிக்கிட்டு போ...

"டேய் சின்ன பையா, அந்த கோடி டப்பாவிலே நீர்முள்ளி விதை இருக்கு. இந்தப் புள்ளாண்டான் கையிலே எடுத்துக் கொடு... நாலணா குடு தம்பி... பத்து பைசாவுக்கு மயில்

துத்தமா? எதுக்கு? பரீட்சை கிரீட்சை எளுதி பைல் ஆயிட்டியோ? மயில் துத்தம் வெஷம்பா... பசங்க கிட்ட கொடுக்கமாட்டேன்... உங்கப்பாரு வாங்கியாரச் சொன்னாரா? இன்னாத்துக்கு? அச்சாபீஸ் பைண்டரா? கூழ்லே போடப்போறாரா? சின்ன பையா, அந்த புட்டியிலே இருக்க நீல மருந்தை ஒரு ரூபாய் எடை கட்டிக்கொடு.. ஆமாம் தம்பி உங்கப்பா வஜ்ரம் மட்டும் மெட்ராஸிலேர்ந்து வாங்கியாந்துடுவாரா? நம்ப கடைலே வாங்கினா இன்னா?

"சின்ன பையா! அந்த ஸ்டூலை எடுத்துப் போடு. தலைவர் வராரு .. வாங்க தலைவரே, இன்னா இந்த பக்கம். அரசியல் நெலவரம் எப்படி இருக்கிறது? மேட்டுத் தெருவுக்கு தார் போட்டதிலே ஏதோ ஊழல் கிழல் அப்பிடின்னு நேத்து மீட்டிங்க்லே பேசினாங்களாமே... அல்லாம் நீங்க வச்ச வத்தியாகத்தான் இருக்கும். கவுன்ஸிலர் கனகசபையை என்னமோ லேகப்பட்ட ஆளுன்னு நெனச்சுக்கிட்டாங்க.... அப்புறம் ஒரு விஷயம், கனகசபை அண்ணே. நம்ப வூட்டு வரியை அநியாயமா ஏத்திப்புட்டார் முனிசிபல் கமிஷனர். போய்ப் பாத்தேன். ரொம்ப இங்கிலீஸ் பேசறாரு ... நீ பாத்து செஞ்சாதான் உண்டு. டேய் சின்ன பையா... ஐதராபாத் திராட்சை வந்ததே, ஒரு கிலோ கட்டு... ஐயோ தலைவரே... நீங்க ஒண்ணு... சும்மா வெச்சுக்குங்க. நமக்குள்ள காசு பணம் எதுக்கு? சாம்பிள் வந்த சரக்கு தான்....

"அதோ போறாரே மைனரு... தலைவரே, புதுப் பணம் இன்னா பண்ணுது பாத்தீங்களா? இன்னாஅல்டாப்பு! இன்னா கித்தாப்பு! ... சிங்கப்பூர் பணம்! உம், நீயும் நானும் இருக்கிறோமே, இன்னா பிரியோசனம்... நம்ப புள்ளைக்கு சின்னதா ஒரு வூடு கட்ட ஆரம்பிச்சேன். லட்சத்துக்கு மேலே போய்ட்டுது. நமக்கு மூச்சு தெணர்றது... மைனர் என்னடான்னா கார் வாங்கப் போறாராம்... சின்ன பையா, பேச்சைப் பாத்துக்கினு இருக்கியே வைத்தியர் லிஸ்ட் சாமானைக் கட்டினாயா?...கோரோசனம் வராகனெடை.... அப்புறம், கஸ்தூரி மஞ்சள்... "

ஆரியக் கூத்தாடினாலும் காரியத்தில் கண் வைத்திருப்பவர் பூபதி!

# கிச்சு

கவலை இல்லாத மனிதன் என்ற பட்டத்தை யாருக்காவது கொடுக்கலாம் என்றால் அதை கிச்சுவிற்குத்தான் கொடுக்க வேண்டும்.



நுங்கம்பாக்கத்தில் மாடி அறை வாசம். பீச் ஸ்டேஷனுக்கு அருகில் ஆபீஸ்.

ஆபீஸுக்கு அவன் வந்தால் உண்டு, வரா விட்டால் கேட்க ஆள் கிடையாது.

அவன் முதல் நாள் ஆபீஸில் சேர்ந்த போதே ஹெட்க்ளார்க்கிடம் பேசியதைப் பார்க்கலாம். "சார், உங்களுக்கு முப்பது வருஷம் சர்வீஸ் ஆகியிருக்கும், உங்க சர்வீஸ் அளவு கூட ஆகவில்லை என் வயசு, இருந்தாலும் சொல்லுகிறேன் சர்க்கார் வேலையிலே உண்மையா உழைச்சு லாபமில்லை. நான் திருச்சியிலே வேலையிலே இருந்தேன். அங்கு சூப்பர் வைசர்ன்னு ஒருத்தன் ரொம்ப பிழிஞ்சு எடுப்பான் ஆளுங்களை. எங்கிட்டே அதிகம் வெச்சுக்கமாட்டான். நான் தான் அவனுக்கு நூறு இருநூறு என்று எமர்ஜன்ஸி லோன் கொடுப்பேனே. எனக்கு என்ன சார், ஒருத்தரும் கிடையாது! கும்பகோணத்திலே வளர்ப்பு எடுத்த பாட்டி பானை நிறைய

பணத்தை வைத்துக் கொண்டிருக்கிறாள். மண்டையைப் போட்டால் எல்லாம் எனக்குத் தான். என் சம்பளம், ரூம் வாடகை, ஓட்டல் லாண்ட்ரி, சினிமா, இதுக்குத்தான்.

"என்னமோ சொல்ல வந்தேனே அந்த சூப்ரவைசர் ஒரு நாள் எங்கிட்டேயே வாலாட்டினான்.

'ஏன் இரண்டு மணி லேட்டுன்னு கேட்டான். நான் சாதாரணமாக ஒரு மணி லேட்டாக வருவேன் அதை அவன் கண்டுக்கவே மாட்டான். அன்னிக்கு பாருங்க என்னமோ படுக்கையை விட்டு எழுந்திருக்கும் போதே மணி பத்தாயிடுச்சு. எனக்கே மூட் சரியாக இல்லாதபோது அவன் இப்படி கேட்டதும் சட்டென்று கோபம் வந்துவிட்டது. 'சீ போடா சோமாரிக் கழுதை' என்று சொல்லி ஃபைலைத் தூக்கி அவன் மூஞ்சியிலேயே விட்டெறிந்து விட்டு ஆபீஸைவிட்டு வெளியே வந்தேன். அப்புறம் அந்த பக்கமே போகவில்லை. அவனுக்குக் கொடுத்த முன்னூறு ரூபாயையும் கூட கேட்கவில்லை."

இப்படி சொல்லிக்கொண்டே சிலசமயம் ஜேபியிலிருந்து கர்சீஃபை எடுப்பான். அத்துடன், கசங்கியும் மடிந்தும் பல பத்து ரூபாய் நோட்டுகளும் ஒன்றிரண்டு நூறு ரூபாய் நோட்டுகளும் வெளிவரும். பணத்தை அப்படியே சுருட்டி தன் ஜிப்பா பையில் திணித்து விட்டு, குரலை இறக்கியபடி, "ஹெட்க்ளார்க் சார்! ஏதாவது அவசரம் என்றால் என்னைக் கேளுங்கள், கூச்சம் கீச்சம் வேண்டாம், இருந்தால் கொடுக்கிறேன், இல்லாவிட்டால் 'சாரி சார்' என்கிறேன்." என்பான்!

ஆஜானுபாஹுவான உருவம் அமெரிக்கன் கிராப்பு. தடித்த மூக்குக்கண்ணாடி நீண்ட கதர் ஜிப்பா, வேட்டி. கனத்த செருப்பு. இது தான் கிச்சு!

கிச்சுவிற்கு பிடிக்காதது, வேலை செய்வது. பேனா பென்சில் ஏதுவும் அவனிடம் இருக்காது.

"கிருஷ்ணசாமி! இரண்டு லெட்டருக்கு பதில் போகலையே அப்பா" என்று ஹெட்க்ளார்க் நிதானமாக

கேட்பார் (அவர் தான் கைமாத்து வாங்கி இருக்கிராறே, எப்படி அதட்டுவார்?)

"பதில் தானே சார். போகும். கப்பலா முழுகி விடும் டிலே ஆனால்? "

"இந்தமாதிரி சொன்னால் நான் மேனேஜருக்கு ரிபோர்ட் பண்ணி விடுவேன்."

"ஐடியா சார், நீங்க இப்படி நாலுலே ஒண்ணுலே ரிபோர்ட் பண்ணவில்லை என்றால் நீங்க சரியாக சூப்பர்விஷன் செய்யலேன்னு மேனேஜர் நினைத்துக் கொள்வார்."

"அதெல்லாம் எனக்குத் தெரியாது. முதல்லை நீ போய் மேனேஜரைப் பார்த்து விட்டு வா, " என்பார். மேனேஜரின் தனி அறைக்குள் செல்வது போல் போக்கு காட்டிவிட்டு கான்டீனுக்குப்போய்விடுவான். சிறிது நேரம் கழித்து திரும்பி வந்து "என்ன சார், நீங்கள் ஏதாவது மேனேஜரிடம் சொல்லுகிறீர்கள் அவர் காய்ச்சிட்டார் என்னை. நல்லகாலம், அந்த ஆடிட் அப்ஜெக்ஷன் ஃபைலைப் பற்றி கேட்கவில்லை" என்பான்.

ஹெட்க்ளார்க் நம்பி விடுவார். அதே சமயம் ஆடிட் ஃபைலைப் பற்றி கிச்சு குறிப்பிட்டதைக் கேட்டு அவருக்கு கலவரம் ஏற்படும். ஹெட்க்ளார்க் தவறாக ஒரு பில்லை அனுமதித்து எட்டாயிரம் ரூபாய் செலவு செய்ய உத்திரவு இட்டதில் ஏதோ தவறு இருப்பதாக ஆடிட் எழுதி இருந்தது. இது யாருக்கும் தெரியாது என்று அவர் நினைத்திருந்தார் அதனால் ஆடிட் என்று கிச்சு சொன்னதுமே வயிற்றில் புளியைக் கரைக்கும்.

"சார், இன்னிக்கி மத்தியானம் மூன்று மணிக்கு வீட்டுக்குப் போகிறேன்" என்பான் கிச்சு.

"செய்யப்பா என்பார்", ஹெட்க்ளார்க் இனி அவன் வழியில் போகக்கூடாது என்று தீர்மானித்துக் கொள்வார்.

பஸ் ஸ்டாப்பில் மேனேஜரோ ஹெட்க்ளார்க்கோ நின்று

கொண்டிருப்பார் குடும்பத்தோடு. கிச்சு சட்டென்று ஒரு டாக்சியைப் பிடித்துக்கொண்டு தற்செயலாக அந்தப் பக்கம் வந்தது போல் போவான் சட்டென்று டாக்சியை நிறுத்தச் சொல்லி, “சார், ஏறிக் கொள்ளுங்கள்” என்பான்.

“நீ எங்கே போகிறாயோ, நாங்க கெல்லிஸ் போகணும்.”

“நானும் அந்த பக்கம் தான், ஏறுங்க சார்”.

“ஒரு இன்கம்டேக்ஸ் ஆபீசர் பயல் ‘டேய் கிச்சு, ஒரு ஆயிரம் ரூபாய் வேண்டும்டா’ என்று சொல்லி வாங்கிக்கொண்டு போனான், அதைத் திருப்பி வாங்கிக் கொண்டு வரப் போகிறேன். டாக்சிக்கு ஐம்பது ரூபாய் வீண்செலவு. எவன் சார் இந்த பஸ்ஸுக்கு காத்து நிற்பான்!”

இப்படி லிஃப்ட் கொடுப்பதுடன் சும்மா இருக்கமாட்டான். வழியில் புரசவாக்கம் பழக்கடை ஓரமாக வண்டியை நிறுத்தி ஆப்பிள், திராட்சை என்று வாங்கி மேனேஜரின் குழந்தையிடம் கொடுப்பான்.

டாக்சியிலிருந்து அவர்களை இறக்கி விடும்போது, “சார் நாளைக்கு நான் ஆபீஸுக்கு வரமுடியாது, காசுவல் லீவும் தீர்ந்து விட்டது ” என்பான்.

“அதற்கென்னப்பா, பாத்துக்கலாம்” என்பார் ஓசி லிஃப்ட் காரர்.

மறுநாள் மட்டுமல்ல அதற்கு அடுத்த இரண்டு நாளும் ஆபீஸ் பக்கமே தலை காட்டமாட்டான் எங்கேயாவது பாயின்ட்டுக்கு எட்டணா ரம்மி ஆடிக்கொண்டிருப்பான். நஷ்டமானால் மேலும் இரண்டு நாள் ஆபீஸுக்கு கோவிந்தா. சில சமயம் அதிக நஷ்டம் ஆகிவிடும். யாருக்கு லாபமோ அவரிடமிருந்து கைமாற்று வாங்கிக் கொள்வான். அதன் பிறகு ஆறுமாதம் அந்த கிளப் பக்கமே போகமாட்டான்.

கிச்சுவின் கையில் பணமிருந்தால் அவன் கர்ணன்தான். பணமில்லாவிட்டால் கடன் வாங்கியாவது கர்ணனாக இருப்பான்!

# பையாகுட்டி

காஞ்சீபுரம் பாசஞ்சர், காட்டாங்கொளத்தூர் ஸ்டேஷனிலிருந்து புறப்படும் சமயம், திறந்த கோட்டுப் பறக்க, வேட்டியை டப்பா கட்டு கட்டியபடி ஓடி வந்து தொத்திக் கொள்ளும் ஆசாமி தான் திருவாளர் பையாகுட்டி. பெயருக்கு ஏற்றார்ப் போல் சிறிய கச்சலான ஆசாமி தான் பையாகுட்டி. ஒருகையில் எல். ஜி. பெருங்காயப் பை, மற்றொரு கையில் குடை, ரிடையரான பிறகு ஒரு தனியார் கம்பெனியில் 'மாடு' போல் உழைக்கும் ஜீவன்.

அந்த வண்டியில் பையாகுட்டி ஏறியதும் கலகலப்பு ஏற்படும். "வாய்யா பையாகுட்டி.... அக்சப்டென்ஸ் என்ன?" என்று யாராவது கேட்பார்கள்.

ஆம், பையாகுட்டியின் வாழ்க்கையில் ரேஸ், ரம்மி,



குறுக்கெழுத்துப் போட்டி, ஐரிஷ் ஸ்வீப் ஸ்டேக்ஸ், நியூயார்க் காட்டன் ஆகிய இவைகள் தான் முக்கிய பங்கு பெற்றிருந்தன!

வாய் ஓயாமல் பேசுவார் பையாகுட்டி. "ஏண்டா ராமு, ராத்திரி உன்னை, த்ரீ மெயிலில் காணோம்? ஒரு கை குறைஞ்சுதுன்னு ஒரு பாசஞ்ஜரைப் போட்டுக் கொண்டோம். பாவிக்கு என்னமா ஆடித்துத் தெரியுமா கை! எல்லாரையும் துரத்தித் துரத்தி அடிச்சான். இத்தனைக்கும் 'பிரும்மச்சாரி'யும் 'பத்து'வும் எவ்வளவு திருட்டு ஆட்டம் ஆட முடியுமோ அவ்வளவு ஆடினார்கள். பெரிய கல்லுளிமங்கனப்பா அவன். எல்லாரையும் சுருட்டி பைக்குள்ளே போட்டுக் கொண்டான். அதிருக்கட்டும், அடே 'மொக்கை' முருகேசா! பேப்பரைப் பாத்தியா? பெங்களூரிலே 'ஜான்ஸி ராணி'க்கு என்ன ஆச்சு பாத்தியா? புல் மேய போய் விட்டதுடா புல்லு! அது நாசமா போக! ராமன், பெங்களூர் போனான். அதன் தலையிலே ஐம்பது கட்டச்சொன்னேன். பணம் கோவிந்தா! ப்ளேஸில் கூட வரவில்லைடா. சரியான குன்ரோல் குதிரைடா அது. நீ சொன்னியேன்னு நான் கட்டினேன்.... இவன் வந்தானா இன்னிக்கி? அவன் தாண்டா நம்ப சம்பத்து! 'வீக்லி இருந்தா வாங்கு. என்னாச்சுன்னு பாக்கணும். தீபாவளி பம்பர் போட்டானே? பம்பரா, ஐம்பரா என்று பார்க்கலாம். அறுபது கூப்பன் போட்டிருக்கிறேன்."

"பையாகுட்டி! வந்ததும் முதலில் 'பகவத் கீதையை' எடுத்துப் போட்டுவிட்டு நீ அறுப்பதை அறுத்துக் கொண்டிரு. உட்காருங்கடா, சரியாக. டவலைப் போடு. பையாகுட்டி! என்ன அஞ்சு பைசாவா, பத்துப் பைசாவா?"

"என் பொண்டாட்டி, ஏதோ எவர்சில்வர் பாத்திரம் வேண்டும் என்று இருபத்தைந்து ரூபாய் கொடுத்திருக்கா. போடுங்கடா பத்து பைசாவே, ஆடலாம். யாருடா இவன், சிட்டைக் குலுக்கற அழகைப் பாரு! கத்துக்குட்டிங்கள்ளாம் வந்து விடறதுங்க. யார் யார் எனக்கு நேற்று பாக்கி? ராமு இரண்டு ரூபாய், 'பிரும்மச்சாரி' இன்னிக்கி வரலை, ஏழு ரூபாய் பாக்கி வச்சுட்டான். ஒரு வாரம் வரமாட்டான்,

நான் மறந்துடுவேன்னு நினைச்சுக்கிட்டு. அப்புறம் 'மானேஜர்' நாலு ரூபாய் பாக்கி. கேளுங்கடா ஒரு விஷயம், நம்ப மானேஜர் இருக்கானே, பெரிய கம்பெனிக்கு மானேஜர் என்று நான் நினைத்துக் கொண்டு நேற்று இவன் கம்பெனிக்குப் போயிருந்தேன். பாடாவதி ஆபீஸ்டா! நம்ம காட்டாங் கொளத்தூர் ஸ்டேஷன் மாஸ்டரே பரவாயில்லை, கூப்பிட்டக் குரலுக்கு ஒரு ஸ்வீப்பராவது இருக்கிறான். மானேஜர் ஆபீஸ்லே இவன் தான்டா ஏக சக்ரவர்த்தி. இந்த அழகில் இவன் ஏதோ புடவையைக் கிழித்து 'டை'யாகக் கட்டிக்கொண்டு ஜம்பமாகப் பேசுகிறான்!... போட்டாச்சா! ஜோக்கரைத் திருப்பேன்... என்ன ஆடுதன் ஏழா? பாழா போச்சு. ஜோக்கர் வெட்டினவன் சுந்தரமா? தம்பி, உன் விரல் அளவைக் கொடு, மோதிரம் பண்ணிப் போடறேன். ஜோக்கரா வெட்டினே? என் கழுத்தை வெட்டினே!..."

பையாகுட்டி இப்படி எல்லாரையும் பிய்த்து உதறுவதைப் பற்றி யாரும் லட்சியம் செய்யமாட்டார்கள். அவரையும் நன்றாக 'கோட்டா' செய்வார்கள். எல்லோருக்கும் அவர் 'பையா குட்டி' தான்!

அந்த ரயிலில் பல வருடங்களாகப் போய்க் கொண்டிருப்பவர். ஆகவே இஞ்ஜின் ட்ரைவர்கள், டி. டி. ஆர்கள், 'கார்டுகள்' எல்லாரும் அவருக்குப் பழக்க மானவர்கள். சமயத்தில் யாராவது சீசன் டிக்கட்டு கொண்டு வர மறந்து போய் டிக்கட் எக்ஸாமினரிடம் அகப்பட்டுக் கொள்வார்கள். அப்போது பையாகுட்டியின் உதவியை அவர்கள் நாடுவார்கள்.

"ராஜகோபால்... இவன் நம்ப பையன் தான். புது கல்யாணம், அதனாலே விடிகாலை ரொம்ப நேரம் தூங்கிப் போய்ட்டாரு மாப்பிள்ளை! அவசர அவசரமாய் வரும்போது சீசன் டிக்கட் மறந்துட்டாரு... போகட்டும் உடுப்பா." என்பார்.

"யாருடா இன்னிக்கு டிரைவர்? வேலாயுதமாக இருக்கும், வண்டி இப்பவே லேட். இன்னும் 'கிராஸிங்' போட்டால், 'பீச் போவதற்குள் விடிந்துவிடும். போய் சொல்லி விட்டு

வா: 'பையாகுட்டி சொன்னார், நல்லா வாலை முறுக்கி வண்டியை ஓட்டச் சொல் என்று' என்பார்! பீச் ஸ்டேஷனுக்குப் போனதும். "என்ன வேலு, சொன்னபடி ஒரு 'தம்' பிடிச்சு கொண்டாந்துட்டியே... வெரி குட்... உன் பொண் கல்யாணத்துக்கு தேதி நிச்சயம் பண்ணிட்டியா? யாரு இது, புது ஃபயர்மென்?" என்று விசாரிப்பார் பையாகுட்டி.

ஆபீஸிலும் பையாகுட்டி பெரும்பாலான நேரத்தை குறுக்கெழுத்துப் போட்டி பாரங்களைப் பூர்த்தி செய்வதில் கழிப்பார். என்றோ ஒரு நாள் ஒரு லட்ச ரூபாய் பரிசு கிடைக்கும் என்று நம்பிக்கையில் அவர் இத்தகைய போட்டிகளிலும், பந்தயங்களிலும், லாட்டிரி டிக்கட்டு களிலும் செலவழித்த தொகையே கணிசமானது.

"எனக்கென்னடா குழந்தையா, குட்டியா? வந்தால் சரி, வராவிட்டால் போகட்டும்," என்று அடிக்கடி, மிகவும் அலட்சியமாகக் கூறுவார் பையாகுட்டி!

# வேம்பு

தெருவை ஒட்டியிருக்கும் அந்தக் கார்ஷெட்டில் நாலு டேபிளைப் போட்டுச் சுடச்சுட இட்லி, தோசையையும் சுவையான காபியையும் சப்ளை செய்பவர்தான் அந்த அம்பாள் கஃபேயின் முதலாளி கம் சர்வரான திருவாளர் வேம்பு.

நல்ல சிவப்பு. சுத்தமாக ஷேவ் செய்யப்பட்ட கன்னம். அழகான குடுமி. ("தேவன் எழுதிய 'மிஸ்டர் வேதாந்தம்' கதை படிச்சிருக்கேளா? கோபுலு சார் என்னை பார்த்துத்தான் வேதாந்தத்தைப் படம் போட்டிருப்பாரோன்னு தோணறது!") ஜொலிக்கும் கடுக்கன். தும்பைப் பூவைப் பழிக்கும் வெள்ளை அரைக்கை சட்டை; மடித்துக் கட்டப்பட்ட வேட்டி. இதுதான் வேம்பு.



சுத்தம் என்பதுதான் அவர் ஓட்டலின் முதல் சிறப்பு. சின்ன காரேஜ் பளிச்சென்று வெள்ளை அடிக்கப்பட்ட சுவர்கள் இரண்டு டியூப்லைட். ஸ்டீல் மேஜை நாற்காலிகள். காரேஜின் பின்பக்கம் உள்ள சமையல் அறைக்குச் செல்லும் வழியை மறைக்கும். அழுக்குப் படியாத கர்ட்டன் எல்லாம் அவர் சுத்தத்திற்கும் தரும் முக்கியத்துவத்தை எடுத்துக் காட்டும். "நம்ப ஓட்டலில் சாமி படம், அது, இது எதுவும் கிடையாது. ஏன்னா, இங்கிலீஷ்லே சொல்லுவா, க்ளென்லினெஸ் ஈஸ் காட்லினெஸ்" என்று. அதனாலே நம்ம கேஃபைச் சுத்தமாக வெச்சுண்டு இருக்கேன். தெய்வம் இங்கேயே

இருக்கும். படம் எதுக்கு பூமாலை, ஊதுவத்தி எதுக்கு? சார். மெடிகல் ரெப்ரசென்டேடிவ் மாதிரி இருக்கு. ஊரில் எவ்வளவு நாள் கேம்ப்? நம்ப கஃபேயில் காலை ஆறு மணியிலிருந்து எட்டரை வரை டிபன் கிடைக்கும். திரும்பவும் சாயங்காலம் ஃபோர் டு ஸிக்ஸ். அண்ணா, இன்னும் ஒரு தோசை போடச் சொல்லட்டுமா? ஜகதா, வக்கீல் சாருக்கு நிறைய எண்ணெய் விடாமல் ஒரு தோசை.." என்பார்.

ஜகதா அவர் மனைவி. கணவன் மனைவி மட்டும். மேஜை துடைக்க, கழுவ ஓர் ஆள். அவ்வளவுதான் அம்பாள் கஃபேயின் ஸ்டாஃப். வேம்பு நிறையக் கொள்கைகள் உள்ளவர். தேசியவாதி. பக்திமான். கலாரசிகர்.

"அம்பாள் எங்களுக்கு எவ்வளவோ அனுக்கிரகம் பண்ணிண்டிருக்காள். ஒரு குழந்தையை மட்டும் கொடுக்கலை. அந்தக் கவலையும் இப்போ ஆறிப்போயிடுத்து இப்படிப் பல தம்பதிகள் இருக்கிறதும் தேச நலனுக்குத்தான். எல்லாம் அவள் அருள்" என்பார்.

காலை எட்டரை மணி ஆகிவிட்டால். கடையை மூடிவிடுவார். அதற்கு மேல் ஒரு நிமிஷம் கூட வியாபாரம் செய்ய மாட்டார். அதேபோல் மாலையும் ஆறுமணிக்குக் கடையை மூடிவிடுவார். ஆறரை மணிக்கு கோர்ட் ஆஞ்சநேயர் கோவிலில் இவரைக் கட்டாயம் பார்க்கலாம். அல்லது ஊரில் நடக்கும் இசைக் கச்சேரியில் முதல் வரிசை ஸீட்டில் பார்க்கலாம். "ருசி இட்லி, தோசையில் மட்டும் இல்லை; வாழ்க்கையிலும் இருக்கு. அதையும் ருசிக்கணும். இரண்டு மணிநேரம் காதாரப் பாட்டுக் கச்சேரி கேட்டால் எவ்வளவு ஆத்ம திருப்தி ஏற்படுகிறது. பணம் சம்பாதிக்கிறவன் எல்லாரும் வாழ்க்கையை ருசித்துப் பார்ப்பதில்லை. அவனுக்கு நேரம் இல்லை. இருந்தால். அந்த டயத்தையும் பணம் சம்பாதிப்பதில்தான் செலவழிப்பான்" என்பார்!

அம்பாள் கஃபேயில் கடன் உண்டு. அவரவர்களே நோட்டுப் புத்தகத்தில் எழுதிவிட்டுப் போக வேண்டும். பாக்கியை வசூலிப்பதில் வேம்பு அசகாய சூரர். பேசியே

கறந்துவிடுவார். "ராமலிங்கம் சார்... வாங்கோ... 'முனிசிபல் வரி வசூலிக்கிற மாசமில்லியோ... அதுதான் பிஸி போல இருக்கு... ஒரு வாரமா ஆளையே காணோம்... நான் கூட ஜகதாகிட்டே சொன்னேன். நம்ப கேஃப் பாக்கி வசூலிக்க ஆள் வைக்க தேவையில்லைன்னு. அவாள் அவாள் தானாகக் கொடுக்கறா.. உங்க பாக்கியைப் பற்றி மறைமுகமாகச் சொல்றேன்னு நினைக்கக்காதீங்க, பிசாத்து இருபத்தியொரு ரூபாய் முப்பது காசு கொடுக்காமல் இருக்கப்போறீங்களா?... வாங்க டிரில் மாஸ்டர் சார், உங்களை மாதிரி நாலு பேர் நம்ம ஒட்டலில் சாப்பிட்டால் அதுவே பெரிய பப்ளிசிட்டி... பயில்வான்கள் சாப்பிடும் கேஃப் என்றால் மதிப்பில்லையா? பார்க்கப்போனால், உங்கள் மாதிரி கஸ்டமர்களிடம் பாக்கியே வசூல் பண்ணக்கூடாது. அடேடே... எதுக்கு பர்ஸை எடுக்கறீங்க... பாக்கியா? ஜாஸ்தியில்லை, இருபத்திரண்டு ரூபாய்தான். போன மாசம் ஒரு மூன்று ரூபாய் பத்து காசு நின்னுடுத்து... அவசரம் இல்லை. நிதானமாகக் கொடுங்கள்...'

'தண்ணீர்ப் பந்தல் போன்ற ஒட்டலை நடத்தினாலும் வேம்புவிற்கும் அவர் மனைவி ஜகதாம்பாளுக்கும் ஊரில் நல்ல மதிப்பு உண்டு. ஊரில் எந்த நன்கொடைப் பட்டியலிலும் வேம்புவின் பெயர் இல்லாமல் இருக்காது. எந்தக் கலியாணத்திலும் 'வேம்பு மாமி'யின் நலங்கு பாட்டு இல்லாமல் இருக்காது!

# கனகாம்பரம்

திருவாளர் கனகாம்பரம் அவர்களைச் சுருக்கமாக வர்ணிக்க வேண்டுமானால் 'இலக்கியக் காதலன்' என்று சொல்லலாம். நிறைய இலக்கியங்களைப் படிப்பதுடன் எழுத்தாளர்களுடன் கடிதப் போக்குவரத்தும் வைத்துக் கொண்டால் நல்ல எழுத்தாளனாக உருவாகலாம் என்பது அவரது எண்ணம். இது மட்டும் அல்ல; கல்கத்தா வரும் எழுத்தாளர்களுக்குப் பல விதங்களில் உதவி செய்வார். ஹெளரா ஸ்டேஷனில் வரவேற்பார். அவர்களுக்கு ஊரைச் சுற்றிக் காட்டுவார். பாலிகஞ்ச் சௌத் இந்தியா கிளப்பில் பொங்கல், வடை சாப்பிடச் செய்வார். அவர்கள் கேட்கும் பொருள்களை – இரண்டு அலுமினிய வாணலி, நான்கு ரஸகுல்லா டின்கள், இரண்டு பெங்கால் காட்டன் புடவை – வாங்கித் தருவார்.



இப்படி எல்லாம் உதவி செய்து அவர்களை நன்றிக் கடன்படச் செய்துவிடுவார். அவர்களும் நன்றிக் கடனைத் தீர்க்க கனகாம்பரத்தின் ஆராய்ச்சிக் கட்டுரையை ஒரு துணுக்கு அளவுக்குச் சுருக்கித் தங்கள் பத்திரிகையில் வெளியிடுவார்கள்! கனகாம்பரம் டல்ஹெளசியில் ஒரு அச்சகத்தில் புரூஃப்ரீடர். (இதுவும் எழுத்துத்துறை சம்பந்தப்பட்டது என்று அதில் பணிபுரிகிறாரோ!) வரும் சம்பளம் ரூம் வாடகை, மெஸ் செலவு, பத்திரிகைகள். புத்தகங்கள் வாங்கும் செலவு என்று சரியாகிவிடும். கேள்விப்படாத பத்திரிகைகள் எல்லாம் வாங்கிப் படிப்பார். இலக்கிய இதழ் என்று அட்டையில் அச்சடித்து இருந்தால் போதும், அந்தப் பத்திரிகையின்

வாசகராகி விடுவார். அந்த இலக்கியப் பத்திரிகைகளில் வரும் அர்த்தமற்ற வாக்கியங்களைப் படித்து ரசிப்பார். ("இந்த உத்வேகத்தின் எழுச்சியின் பரிணாம ஆழத்தில் உள்ள யதார்த்த வேகத்தில் தளை மீறிய பிரதபலிப்பாக எழும் பாசிடிவிஸமே இடை நிலவரத்தின் கருத்தாகும்!") கனகாம்பரத்தின் கையில் எப்போதும் ஒரு புத்தகம் இருக்கும். அது மில்டனின் 'பாரடைஸ் லாஸ்'டாக இருக்கலாம் அல்லது மறைமலை அடிகள் வரலாறாக இருக்கலாம்.

கல்கத்தாவில் நடைபெறும் எந்த இலக்கியக் கூட்டத்திலும் முதல் வரிசையில் பழுப்பேறிய ஜிப்பா வேட்டியுமாக, ஜில்பா தலைமுடியுடன், சோடாபுட்டி கண்ணாடியுமாக உட்கார்ந்திருக்கும் நபர் நிச்சயம் கனகாம்பரமாகத்தான் இருக்க முடியும். பத்திரிகை ஜோக்குகளில் எழுத்தாளரை ஜிப்பா, ஜில்பா ஆசாமியாக யாரோ ஒரு ஆர்ட்டிஸ்ட் போட்டாலும் போட்டார்கள்; கனகாம்பரம் அதன்படியே தன்னை மாற்றிக்கொண்டு எழுத்தாளராகி விட்டார்!

ஹௌரா தமிழர் மன்றம், பாரதி தமிழ்ச் சங்கம், கல்கத்தா வள்ளுவர் மன்றம் போன்ற சங்கங்களில் நடக்கும் இலக்கிய சர்ச்சைகளுக்கும், இலக்கியச் சிந்தனைகளுக்கும் கனகாம்பரம் தவறாமல் போவார். இந்த மாதிரி கூட்டங்களுக்கு அதிகம் பேர் வராவிட்டாலும் பேசுபவர்கள் சிரமப்பட்டுத் தயாரித்துக் கொண்டு வரும் உரைகளை ஆர்வமுடன் படிப்பார்கள் பலருக்குக் கொட்டாவி வரும், ஆனால் திரு கனகாம்பரம் ஆர்வமாக குறிப்புகள் எடுத்துக்கொண்டு இருப்பார். இவரும் பல சமயம் கருத்துரைகளை ஆற்றியுள்ளார். "ஈசாப் கதைகளிலிருந்து புதுமைப்பித்தன் கதைகள் வரை", "ஹோமர், டான்டே, எழுத்தாளர் ஏகாம்பரம் ஒரு ஒப்பு நோக்கு" – இப்படிப் பல தலைப்புகளில் நீண்ட கட்டுரைகளை அவர் படித்திருக்கிறார்.

"சார், நேற்று மீட்டிங்கிற்கு வரவில்லையே? அற்புதமான கருத்துரை என்று எல்லாரும் பாராட்டினார்கள் என்னுடைய சொற்பொழிவை! பரவாயில்லை, என் உரை இதோ இருக்கிறது; படித்துவிட்டுக் கொடுங்கள். ஒரு புதுக்

கோணத்திலிருந்து எழுதியிருக்கிறேன். திரு. வி. க. மாதிரி நடை அமைந்திருக்கிறது என்று கூடச் சிலர் சொன்னார்கள். எனக்கென்னவோ இது உவே. சாமிநாதய்யர் நடை, ஆராய்ச்சி முறை மாதிரி தோன்றுகிறது. இந்தாருங்கள், நாளைக்கு வீட்டிற்கு வந்து வாங்கிக் கொள்கிறேன்" என்று டிராமில் அகப்படும் ஆசாமியிடம் கட்டுரையைக் கட்டிவிடுவார்! அடுத்த நாள் அவர் வீட்டிற்கு போய் தன் கட்டுரையைப் பற்றி விளக்கமும் வியாசனமும் தருவார்.

"கனகாம்பரம், நம்ப பத்திரிகைக்கு ஏதாவது எழுதி அனுப்புங்களேன்" என்று கல்கத்தாவிற்கு விஜயம் செய்ய ஆசிரியர், ரயில் கிளம்பும் சமயத்தில் சொல்வார், கனகாம்பரம் செய்த உதவிகளுக்கு நன்றி தெரிவித்துவிட்டு. ஆசிரியர் சென்னை வந்தடையுமுன்பு அவர் பெயருக்கு ஒரு கட்டுரையைத் தபாலில் அனுப்பி விடுவார் கனகாம்பரம். இரண்டு நாள் கழித்து ஆசிரியருக்கு ஒரு கடிதம் எழுதுவார்." ஏழாம் பக்கத்திற்குப் பதிலாக இத்துடன் அனுப்பியிருக்கும் மேட்டரைச் சேர்த்துக்கொள்ளவும். 14'ம் பக்கத்தில் 'புதிய தத்துவமாக உருவாகிறது' என்பதை நீக்கி விடுங்கள். அடுத்த இதழில் கனகாம்பரத்தின் ஆராய்ச்சிக் கட்டுரை வெளியாகிறது என்று அறிவிப்பைப் போடுங்கள்'' என்றெல்லாம் எழுதுவார். கூடவே தன் புகைப்படத்தையும் அனுப்புவார். தாட்சண்யத்திற்காக கட்டுரை சுருக்கப்பட்டு, மாந்தரீக மோதிர விளம்பரங்களுக்கு இடையே கட்டுரை பிரசுரிக்கப்படும். பல சமயம் திருப்பி அனுப்பப்படும்.

"இவர் போடாவிட்டால் பரவாயில்லை. அப்படியே 'சிந்தனைச் சுடர்' பத்திரிகைக்கு அனுப்பிவிடுகிறேன், அவர்கள் போடாவிட்டால் 'அறிவுப் பொறி' அல்லது 'இலக்கியப் பெட்டகம்' இருக்கவே இருக்கிறது." என்பார்.

ஒரு கட்டுரை எழுதிவிட்டார் என்றால் அது ஏதாவது ஒரு பத்திரிகையில் வெளியானால் ஒழிய அடுத்த கட்டுரை எழுத ஆரம்பிக்கமாட்டார். ஆகவே பல சமயங்களில் கட்டுரைகளுக் கிடைய இடைவெளி இரண்டு, மூன்று வருடங்கள் கூட ஆகிவிடும். அடிக்கடியா கல்கத்தாவிற்குத் தமிழ்ப்பத்திரிகை ஆசிரியர்கள் வருகிறார்கள்!

# ராவ்பகதூர் ராமேசம்



பளபளவென்று வழுக்கை. பின்புறம் சீப்பை வளைத்து ஒட்ட வைத்தாற் போல் (நரைத்த) முடி நல்ல சிவப்பு. கணுக்காலுக்கு மேல் நிற்கும் பட்டை ஜரிகை வேஷ்டி, தும்பைப் பூப்போன்ற மல்ஜிப்பா. விசிறி மடிப்பு அங்கவஸ்திரம், வெள்ளிப்பூண் கைத்தடி. இதுதான் ராவ்பகதூர் ராமேசம். மணி என்ன ஆகிறது? நாலரையா? அப்படி யானால், ராமேசம் பீச்சிற்குக் கிளம்ப நேரமாகி விட்டது! "டிரைவர், ஐயாவிற்கு நேரமாகிறதே. வண்டி எடுக்கவில்லை?" என்று திருமதி ராமேசம் கேட்பாள்.

வண்டி வந்ததும் ராமேசம் ஏறி உட்கார, சமையல்காரர் ஒரு ஃப்ளாஸ்க் தண்ணீரைக் கொண்டுவந்து காரில் வைப்பார். சரியாக ஏழு மணிக்கு ராமேசம் திரும்பி வந்துவிடுவார். பீச்சில் ஒரே இடத்தில் அவரது ஒரே நண்பரான மாத்ருபூதத்துடன் கடந்த 16 வருஷங்களாக உட்கார்ந்து, உலக விஷயங்களை அலசிவிட்டு வருவார். தினமும் என்னதான் பேசுவார்கள்?

இதோ ஒரு சாம்பிள்; "மாத்ருபூதம், இந்த தாட்சரின் கவர்மெண்டில் ஹீத்தைப் போடாதது தப்பு, லங்காஷைர் பகுதிகளில் ஹீத்திற்கு சப்போர்ட் இருக்குது. நார்த்ஹாம்ப்டன், ஏவன்மௌத் பக்கத்தில் இவளுக்கு சாலிட்டாக இருக்குது சப்போர்ட். இதைப் பார்த்தால் நைன்டீன் தர்ட்டியில் பொப்பிலி ராஜா செய்ததைப் பாராட்டணும்...

"கம்பூச்சியா விவகாரம் சின்ன பூச்சியாக இருந்து இப்போ வளர்ந்துட்டுது.. என்னைக் கேட்டால்

காம்ப்ளிகேஷன்ஸ் ஜாஸ்தியாகத் தான் போகும். வீணாக நம் மண்டையை உடைச்சிண்டு என்ன லாபம்?...பாரேன், இந்த பாலமுரளியும் பாலசந்தரும் பாலகர்கள் மாதிரி சண்டை போட்டார்களே, என்ன ஆச்சு... கடைசியிலே அகாடமி காரர்கள் கவர்மென்ட் அறிக்கை மாதிரி ஒரு ரிப்போர்ட் கொடுத்துட்டாங்க. நேற்று ரேடியோவிலே டைகர் கச்சேரியைக் கேட்டியா? என் டாட்டர்-இன்-லாவிடம் டேப் பண்ணச் சொன்னேன். டைகருக்கு அப்புறம் தோடி பாட, ஆளைத் தேடி கண்டுபிடிக்கணும்—அதிருக்கட்டும், பூதம், போலீஸ்மென் ஸ்டிரைக்கைப் பாத்தியா.... சி.ஆர். இந்த விஷயத்தை அந்தக் காலத்தில் எப்படி ஹாண்டில் பண்ணினார்? அவர் மாதிரி யாருக்கு சாமர்த்தியம் இருக்கு....!

“புதன்கிழமை இன்டியன் ஆன்த்ரோ பாலிஜிகல் சொஸைட்டியில் யாரோ வில்கின்ஸன் என்பவர் பேசிகிறாராம், வருகிறாயா போகலாம்...யாருடா தம்பி. சுண்டலா விக்கறே? இங்கே வா. உனக்கு என்ன வயசு ஆச்சு? படிப்பு கிடிப்பு உண்டா? இந்த மாதிரி சின்ன பசங்களை உருப்பட விடாமல் செய்துவிடறாங்க, இதை தடுக்க எங்கே நடவடிக்கை எடுக்கிறார்கள்? மேல் நாடுகளில் இதை யெல்லாம் அக்கறையாக் கவனிச்சு ஆக்ஷன் எடுக்கறாங்க. மேல் நாடு, என்றால் ரொம்பப்பேர் முகம் சுளிக்கிறாங்க. அவங்க ஒரு விஷயத்தை எடுத்தால் எவ்வளவு அக்கறையா, ‘டிவோடட்’ ஆகச் செய்யறாங்க... பூதம்! நாளைக்கு ஈவினிங் நான் வரவில்லை. என் டாட்டர்-இன்-லா சொன்னா, ஏதோ புதுப்படம் வந்திருக்குதாம் புதிய வார்ப்புகள்னு. ‘அப்பா நீங்க பார்க்கணும்னு சொன்னா. போய் பார்த்துவிட்டு வந்துடறேன். தட் பாய் பாரதி ராஜா ஸீம்ஸ் டு பி மேன் ஆஃப் டேலன்ட்...”

இவர் யாத்ருபூதத்திடம் பேசுவதும் ஒன்றுதான்; தன் கருத்துகளைத் தன்னிடமே உரக்கப் பேசிக்கொள்வதும் ஒன்றுதான். இவர்கள் சம்பாஷணையில் யாத்ருபூதத்தின் பங்கு 5 சதம் என்றால் மீதி 95 சதம் இவருடையதுதான்! எழுபத்து ஒன்பது வயது ஆனாலும் சுறுசுறுப்புடன் இருக்கும் ராவ்பகதூர் ராமேசத்தின் ரகசியம்: திட்டமிட்ட, கடிகாரத்தை ஒட்டிய வாழ்க்கை. உலக விஷயங்கள் அனைத்திலும் ஈடுபாடு, கவலைப்பட தெரியாத மனம்!

## டி சில்வா

மீட் மிஸ்டர் டி சில்வா, பளிச்சென்று வெள்ளைச் சட்டை, வெள்ளை பாண்ட், பளபளவென்று பாலிஷ் செய்யப்பட்ட பூட்ஸ், பாந்தமான பெல்ட், கச்சிதமான டை, தீர்க்கமான மூக்கு, சுத்தமாக ட்ரிம் செய்யப்பட்ட மீசை, கிஸ்ஸிஞ்சர் கிராப். ஐம்பதைத் தொட்டுக் கொண்டிருந்தாலும் முறுக்கான தோற்றம் டி சில்வா!பம்பாய் மின்சார ரயில் டிரைவர். தமிழ்நாட்டிலிருந்து பம்பாய்க்குச் சென்ற ஆங்கிலோ இந்தியர். தமிழ், இந்தி, மராட்டி, இங்கிலீஷ் எல்லாவற்றையும் ஒரே பாணியில் கிட்டத்தட்ட அதே அளவு கொச்சையில் பேசுவார்! ரயிலில் டியூட்டியில் செல்லும் போது தன்னந்தனியே செல்ல வேண்டியிருப்பதால், ஓய்வு கிடைத்தால் ஓயாமல் பேசுவார். ஜாலியான ஆசாமி. தன்னுடைய சொந்த கஷ்டங்களைப் பற்றிப் பேசும்போது கூட தமாஷாகத்தான் பேசுவார். டி சில்வா இல்லாமல் பம்பாயில் பல ஆங்கிலோ இந்திய நிகழ்ச்சிகள் நடக்காது. பியானோ வாசிப்பார். பக்தி கீதங்கள் பாடுவார். சர்ச் நிதிக்காக சிறுவர் நடன நிகழ்ச்சிகள் தயாரிப்பார். டான்ஸ் கொஞ்சம் வரும்.



"ஹலோ டி சில்வா... ஹௌடு யு டு ?

"ஏன் கேக்றே... ப்ளடி வவுத்தெர்ச்சல். நம்ப பெரிய பொண்ணுக்கு மேரேஜ் பண்ணேன். மாப்ளே கேட்டான், பால் ரூம் டான்ஸ் ஆடுமான்னு. சொல்லிக் கொடுத்திருந்தேனே. இருந்தாலும் கைல வேற கேட்டான். டிவி. வேணுமாம். சோபா வேணுமாம். போரிவிலியிலே ப்ளடி ஒன் ரூம் குவார்ட்டர். சோபா போட எடம் ஏது? கேக்றான். ஷெர்டன்லே ஸ்டுவர்ட். நல்ல சம்பளம்.... கைல கேஷ் கேக்கறான், ட்வென்டிஃபைவ் தௌசண்ட். ஜூவெல்ஸ் வித்து கொடுத்தேன். இன்னா செய்யறது? டௌரி சிஸ்டம் இருக்கும் வரைக்கும் என்மாதிரி பொண் பெத்தவங்களுக்கு கஸ்டம்தான். ஜீஸஸுக்கு கண்

தெரிலியே.... யார்னாச்சியும் அவர் கைல பைனாகுலர் கொடுத்தா நம்ப கஸ்டத்தைப் பார்ப்பார்...

"ஸின்ன டாட்டர் எமிலி கிட்டே சொல்லிவிட்டேன். நீ நல்ல புள்ளையா பாத்து லவ் பண்ணு. ஒரு விஷயம் கண்டிப்பா சொல்லிட்டேன், லவ் பண்ற பையனை இரண்டு வருஷம் கழிச்சுதான் கல்யாணம் பண்ணிக்கலாம்னு. ஸ்டெடியாக இருக்கறவனா இன்னு பாக்கனும்.சும்மா கேர்ல் ஃப்ரெண்டு அது இதுன்னு சொல்லி மிஸ்பிகேவ் பண்ணா, அந்த ஃபிரண்டை பிராண்டுன்னு சொல்லியிருக்கிறேன். எமிலி டைப், ஷார்ட் ஹாண்ட் பாஸ் பண்ணிருக்கு. பரத நாட்டியம் கிளாஸ் போவுது. இந்த டமில் சின்மா மேல கிரேஸா அலையுது. பியானோவிலே ஓரம்போன்னு சுத்த கன்ட்ரி பாட்டைப் பாடுது.

"சின்ன பொண்ணுக்கு நேர் எதிரு பீட்டர். வேளைக்கொரு சட்டை, டை, மாத்துவாரு பதினாலு வயசாவல்லே. நேவியில் போவப் போறானாம். பாட்டுப் பாடறான். அஸந்து பூடுவே. என்ன வாய்ஸ், இன்னா பிட்ச் போவுது. படிப்புதான் ஏற்கலை. ஆனால் பொழச்சுக்குவான். . . . . கிறிஸ்துமஸ் வர்றது. லீவ் கேட்டால் ப்ளடி. சூப்ரண்ட் மூக்கால அழுவான் அல்லாரும் லீவ் கேட்டா எப்படின்னு என்னைக் கேட்டால்....? நானா சூப்ரண்ட்? இந்த டைம்லே தான் நாலு பியானோ புரோகிராம் இருக்கும். பைஸா வரும். ஒங்க வெஸ்டர்ன் ரயிலே ஒட்டிக்கிட்டிருந்தால் மட்டும் வண்டி ஓடுமா? 'இருபத்தைந்து வருஷமா சர்ச் கேட், மெரைன் லைன், சார்னி ரோடு, கிராண்ட் ரோடு, சென்ட்ரல், மகாலட்சுமி, பரேல், எல்ஃபின்ஸ்டன், தாதர், மாதுங்கோ ரோடுன்னு போய் போய் வந்தாச்சி. லைஃப்லே இந்த டைம்லே தான் கொஞ்சம் சேஞ்ச். நம்ப கைலேயும் சேஞ்ச் வரும். நம்ப டாடியும் மெட்ராஸ்லே டிரைவரா இருந்தார். அவராவது நம்பள வேற லைன்லே மாட்டி இருக்னும். அவரை ஏன் சொல்லனும்? மே ஹிஸ் ஸோல் ரெஸ்ட் இன் பீஸ் ஓ.கே. போய்ட் வர்ரேன். சின்ன பொண்ணுக்கு பர்த்தடே. மல்லீப்பு வாங்கிட்டுப் போவனும். ரொம்ப புடிக்கும்...."

டி. சில்வா, அவர் ஓட்டும் மின்சார ரயிலைப் போல் அடுத்த கணம் விரைந்து மறைந்து விடுவார்!

# பட்டப்பா

பழைய கோணிப்பை பிஸினஸில் லட்ச லட்சமாகப் பணம் பண்ண முடியும் என்றால் யாரும் சாதாரணமாக நம்பமாட்டார்கள். ஆனால் பட்டப்பா லட்சாதிபதியானதே பழைய கோணி பிஸினஸில்தான். அவர் கோணிகளை ஆயிரம், பத்தாயிரக் கணக்கில்தான் வாங்குவார்; விற்பார். சில சமயம் லட்சக்கணக்கில் வாங்கிப்போட்டு டிமாண்ட் வரும்போது விற்பார். பெரிய பணக்காரராகிவிட்டாலும் பழைய கோணி பட்டப்பா என்று பலர் (அவருக்குப் பின்னால்) குறிப்பிடுவார்கள். ஊரில் பெரிய மனுஷனாக இருக்கவேண்டும் என்ற காம்ப்ளெக்ஸ் உண்டு. அதன் காரணமாக உலகில் உள்ள எந்த விஷயத்தைப் பற்றி வேண்டுமானாலும் பேசுவார் கோணிகள் நீங்கலாக!



வாட்ட சாட்டமான உயரம்; உடல் அமைப்பு. தலையில் முடியிருந்தாலும் உச்சியில் மட்டும் ஒரு வழுக்கை வட்டம். சில்க் ஸ்லாக். மூன்று பட்டனாவது திறந்திருக்கும். கழுத்தில் இரட்டை புலிப்பல் சங்கிலி. அகல சரிகைப் பட்டை வேஷ்டி, கவர்ச்சி கரமான குள்ள குண்டுத் தனம்– பட்டப்பா உடை விஷயத்தில் மட்டும் மாறுதல் செய்து கொண்டே இருப்பார். காரணம், அவருக்கு வாழ்க்கையில் அடங்காத ஆசை; சதா நாலுபேர் கவனத்தைக் கவரும்படி இருக்கவேண்டும். இந்த ஆசை காரணமாக தன் உடை விஷயத்தைப் போல் குணம், பேச்சு, கொள்கை எல்லாவற்றையும் கூட மாற்றிக்கொள்வார். இதனால், கல்யாணம், கார்த்திகை போன்ற குடும்ப நிகழ்ச்சிகளானாலும் சரி, வேறு பொது நிகழ்ச்சிகளானாலும் சரி, நாலுபேர் கூடும் இடத்தில் பட்டப்பா இருந்தால் அதில் பாதிப் பேருடைய

கவனத்தையாவது கவர்ந்துவிடுவார். அதாவது கவனிக்கும்படி செய்துவிடுவார். இதற்காக அவர் அனாவசிய சண்டைகள் போட்டிருக்கிறார். ("எவன்யா சமையல் பண்ணினது. அவியலில் இவ்வளவு தேங்காய் போட்டால் சீக்கிரமாக ஊசிப் போய்விடும் என்று கூடவா தெரியாது? கட்டி உதைக்கணும், இவங்களை") காந்தி ஜெயந்தி விழாவில் கலந்து கொள்வார். ("டொனேஷன் ஆயிரம் போட்டுக்குங்கோ. 'காந்தியாலேதானே நாம் சோறு தின்றுகொண்டிருக்கிறோம்.") பிரம்மாண்டமான கார் வாங்கி இருக்கிறார். ("லட்சம் கொடுத்து கார் வாங்கச்சே சிரமமாக இல்லை. இதன் பெட்ரோல் தாகம் தான் ஆளை அமுக்குகிறது.") சில சமயம் காவி வேட்டி, சட்டை போட்டு உலவி இருக்கிறார். ("மண்டே அன்னிக்கு பச்சைத் தண்ணி கூட சாப்பிட மாட்டேன். குருநாதர் சொல்லியிருக்கிறார்.") விலை உயர்ந்த மூவி காமிரா லைட்களுடன் வந்து, கலியாணங்களில் இவரே சர்வாதிகாரம் பண்ணியிருக்கிறார். ("டேய் சாம்பு, இந்த காமிரா விலை ஒன்றரை லட்சம். உன் கலியாணத்திற்கு உன் மாமனார் கூட மொத்தமாக இவ்வளவு செலவழித்திருக்க மாட்டார்!") சில சமயம் வேண்டுமென்றே மயக்கமாக விழுந்திருக்கிறார். ("மூணு நாளா டில்லி மினிஸ்டருடன் சுத்தி வந்ததில் நமக்கு தாவு தீந்துடுத்து. கண்ணை மூட முடியலை. பட்டப்பாவைத் தூங்க விட்டால்தானே?") சபா கச்சேரிகளில் லேட்டாக வந்து பலர் காலை மிதித்து, முன் வரிசையில் போய் உட்கார்ந்து இருக்கிறார்! (("நாலு தடவை சோமு போன் பண்ணிட்டார். டயம் இல்லை என்றால் கேட்டால்தானே!") அல்லது பாதி கச்சேரியில் எழுந்து போயிருக்கிறார். ("பிளேனுக்கு டைம் ஆயிட்டுது, வரேன்.")

எப்படியாவது வித்தியாசமாக இருக்கவேண்டும்; அப்போதுதான் பலரின் பார்வையில் விழமுடியும் என்பது அவர் எண்ணம். அவரே ஒரு சமயம் சொல்லியிருக்கிறார்: "ஒரு கலியாணம் என்றால் அங்கு நான் மாப்பிள்ளையாக இருக்கவேண்டும். ஒரு காதுகுத்தல் என்றால் அங்கு நான் குழந்தையாக இருக்க வேண்டும்.!" புகழ்ச்சி. இகழ்ச்சி இரண்டும் ஒன்றுதான் அவை அவரைப்பற்றி நாலுபேர் பேசும்படி இருந்துவிட்டால் போதும்!

# பாப்ஜி

பாப்ஜியின் லெட்டர்ஹெட் தாளைப் பார்த்தால் நீங்கள் அசந்துவிடுவீர்கள். எத்தனை மன்றங்கள், இவரை நம்பி இருக்கின்றன! பல சங்கங்களின் பெயரை அப்போது தான் முதல் தடவையாக பார்ப்பீர்கள் என்பது வேறு விஷயம்!

எந்த விழாவிலும், கூட்டத்திலும், நிகழ்ச்சியிலும் பாப்ஜியின் தலையைப் பார்க்கலாம். சாதாரணமாக நாலே பேர் வரக்கூடிய சின்ன கூட்டத்திலும் அவர் இருப்பார். எல்லா சமயத்திலும் ஒரே ஆர்வத்துடன் இயங்குவார்.



பாப்ஜியின் வேலை என்ன? வருவாய்க்கு என்ன செய்கிறார்? என்று கேட்காதீர்கள். சங்கங்களை நடத்துவதே அவர் வேலை அகில உலக அறிவு ஜீவி வாக்காளர் மன்றம், டிம்பக்டு ஆசிரியர் போராட்ட ஆதரவு குழு, இந்தியா பராகுவே நேசக் கழகம், உலக வறுமை ஒழிப்புக் கமிட்டி, ஆளுக்கொரு வீடு இயக்கம், விதேசிப் பொருள் விலக்க மன்றம், இந்திய கமர்கட் வியாபாரிகள் சம்மேளனம், தொடர்கதை படிப்போர் குரூப், சினிமாவில் நடிக்கும் பிராணிகள் ரசிகர் மன்றம் என்பன போன்ற பல அமைப்புகளில் அவருக்குத் தொடர்பு உண்டு.

அவரது சின்னக் காரில் பின்சீட்டில் ஏதாவது நிகழ்ச்சிக்கான நோட்டீஸ், போஸ்டர், சாவனீர் என்று நிறைய காகிதங்கள் எப்போதும் இருக்கும். பாப்ஜியிடம்

மாட்டிக்கொண்டால் தப்புவது கஷ்டம்.

"உங்களைப் பார்க்கத்தான் வருகிறேன். இந்தாருங்கள் இன்விடேஷன். நாளைக்கு ஈவினிங் ஜஸ்டிஸ் ஜகன்னாதன் வீட்டில் டிஸ்கஷன். கட்டாயம் வரணும்" என்பார்.

"என்ன விசேஷம்?"

இதைக் கேட்டு ஹொஹ்ஹோ என்று சிரித்துவிட்டு, "நீர் எந்த உலகில் இருக்கிறீர்கள்? வீடு பற்றி எரிந்தால்கூடக் கவலைப்படாத ஜன்மமா நீங்கள்? கைராளி கப்பல் காணாமல்போய் நாலு மாசம் ஆகிறது. 'கைராளி கப்பல் கண்டு பிடிப்புக்குழு' அமைக்கிறோம்."

"கப்பலைத்தான் கண்டுபிடிக்க முடியலை என்று கவர்மென்டே கைவிரித்துவிட்டதே. நாம் என்ன செய்யமுடியும்?"

"இந்த மாதிரி கேள்வி கேட்டே தான் நம்ம நாடு நாசமாப் போச்சு, குழு அமைக்கிறது தீர்மானம் போட்டு கார்ட்டர், தாட்சர், கோஸிஜின், சதாத், ஜியா எல்லாருக்கும் காபி அனுப்பறது. அபஸ்வரம் ராம்ஜி புரோகிராம் வெச்சு நிதி திரட்டறது"

"வந்து..."

"வந்துமாச்சு, போந்துமாச்சு... ஏன்யா பொதுநலச் சேவை என்றால் ஓடறீங்க? நான் வரேன்," என்று ஓடிவிடுவார். பாப்ஜியின் கூட்டங்களுக்குப் பத்து பேர் கூட வரமாட்டார்கள். இருந்தாலும் அவர் உற்சாகம் குறையாமல் பேசுவார்!

"வாக்காளர் மன்றத்தை நாம்தான் அமைக்க வேண்டும். இந்தியாவில் உள்ள வாக்காளர்களை நாம் தான் எஜுகேட் பண்ணணும். இது நம்முடைய பொறுப்பு... பொறுப்புகளைத் தட்டிக்கழிக்கக் கூடாது. நம்ப மன்றத்தை ரிஜிஸ்டர் பண்ணிடலாம். இப்போது வந்திருக்கிற ஒன்பது பேரையும் கமிட்டியில் போட்டுடறேன். இன்னும் இரண்டு பேரையும் போட்டு ரிஜிஸ்டர் பண்ணிடலாம். வோட்டர்ஸ்

கௌன்சில் ஆஃப் அமெரிக்காவுடன் நாம் இணைந்து கொள்ளலாம். வோட் என்பது விலைமதிப்பற்றது... துவக்க விழாவை தாஜில் அல்லது சோழாவில் வைத்துக்கொள்ளலாம். நூறு ரூபாய் ஒவ்வொருவரும் கொடுக்கவேண்டும். டின்னரும் வைத்துக்கொள்ளலாம்," என்றெல்லாம் பேசுவார்.

இவரது அகில இந்திய வாக்காளர் மன்றம்தான் ஏதோ இந்திய வாக்காளர்களை உத்தாரணம் பண்ணப்போவது போல் பேசுவார்.

இப்படித்தான் அகில உலக புதுக்கவிதை ரசிகர் மாநாடு நடத்தினார். மகாநாட்டுப் பந்தலில் சுமார் இரண்டாயிரம் நாற்காலிகள் போட்டார். பத்து இருபதைத் தவிர மற்றவை காலி நாற்காலிகள் தான்! எந்த மகாநாட்டுச் செலவையும் எப்படியாவது சமாளித்து விடுவார். அதில் கொஞ்சம் மிச்சமும் பிடித்துவிடுவார்! இந்த மாதிரி பணத்தில்தான் அவரது வாழ்க்கையும் (காரும்!) ஓடிக் கொண்டிருக்கின்றன.

திடீர் என்று சில வாரங்கள் காணாமல் போய்விட்டு தலையைக் காட்டுவார்.



"கலிபோர்னியா போயிருந்தேன். அமெரிக்கன் வோட்டர்ஸ் கவுன்சில் இன்விடேஷன் அனுப்பியிருந்தாங்க. செலவுக்குப் பணமும் கூடத்தான். போய் வந்தேன்," என்பார். இவர் நடத்தும் சங்கங்களால் யாருக்கு இலாபம் உண்டோ இல்லையோ, இவருக்கு நிச்சயம் உண்டு!

முக்கிய பிரமுகர்கள், அமைச்சர்கள் இப்படி யாரையாவது நிகழ்ச்சிக்குக் கூப்பிட்டு "கலா ரசிக ரத்தினம்", "பொதுநலத் தொண்டு சிகரம்" "தர்ம பரிபாலன திலகம்" என்பன போன்ற பட்டங்களைக் கொடுத்துக் கௌரவிப்பார். கையோடு புகைப்படத்தையும் செய்திக் குறிப்பையும் பத்திரிகைகளுக்கு அனுப்பிவிடுவார்.

மனிதன் ஸ்தாபனங்களை உருவாக்குகிறான் என்பது பாப்ஜியை பொறுத்தவரை பொருந்தாது. ஸ்தாபனங்கள்தான் பாப்ஜியை (பெரிய) மனிதனாக உருவாக்கி உள்ளன!

# ஜெயம்

லிப்ஸ்டிக் முதல் ராட்சச டீசல் இஞ்சின்வரை ஏகப்பட்ட பொருட்களைத் தயாரிக்கும் பெரிய பம்பாய்க் கம்பெனியின் டில்லிப் பிரதிநிதி திருவாளர் ஜெயம். 'சீஃப் ரெஸிடன்ட் எக்ஸிகியூடிவ்' என்ற அட்டகாசமான பெயராக இருந்தாலும் அவர் செய்வது சர்க்கார் அலுவலகத்தில் அவரது கம்பெனி சம்பந்தப்பட்ட ஃபைல்களை வேகமாக நகர்த்தி வெற்றிகரமான முடிவிற்குக் கொண்டுவரும் லியாசன் அதிகாரி வேலைதான். மகாராணி பாக் என்ற இடத்தில் ஒரு பெரிய மாளிகை. ஆபீஸ் கம் கெஸ்ட் ஹவுஸ். மூன்று கார்கள். நான்கு டெலிபோன்கள். டெலக்ஸ். உதவி மானேஜர், டைப்பிஸ்ட் என்று ஏழெட்டு பேர்.



பம்பரத்திற்கு மறு பெயர் ஜெயம் என்று சொல்லும்படி எப்போதும் படு பிஸி. டெலிபோனில் யார் யாரையோ 'பிடித்து'ப் பேசிக் கொண்டிருப்பார். பேசிக் கொண்டிருக்கும்போதே மற்றொரு டெலிபோன் அலறும். "யார்.. அடடே! வர்மாஜி, குட்மார்னிங். கார் தானே? அப்பவே அனுப்பிட்டேனே.. இரண்டு நாள் என்ன, மூணுநாள் கூட வெச்சுகிட்டு அனுப்புங்க. நான் எங்கே ஸார் கலியாணத்திற்கு வருகிறது. சரி, கட்டாயம் இரண்டு நிமிஷம் தலையைக் காட்டுவேன். ஓ.கே...."

ஆஜானுபாகுவான ஆசாமி. மதிப்பை ஏற்படுத்தும் வழுக்கை. 'ஒவல்டின்'னாகவே சாப்பிடுவதாலோ என்னவோ இடை தாராளமாகப் பருத்து அதன் விளைவாக ஏற்பட்ட 'ஒவல் ஷேப்' உடல். அறுபது வயதானவர் என்று ஜாதகத்தைப் பார்த்துத்தான் கண்டுபிடிக்க முடியும். தலைக்குள் ஆயிரம் விஷயங்களையும் திட்டங்களையும் வைத்திருந்தாலும் வெளியே காட்டாத முகபாவம். வாய் நிறைய புன்னகை; அரட்டை.

ஜெயம், காரியம் ஆகவேண்டியவர்களைத்தான் காக்காய் பிடிப்பார் என்று எடுத்துக்கொள்ள வேண்டாம். ஒரு கௌரவத்திற்காக சென்னையிலிருந்து வரும் பிரமுகர்களைத் தன் கெஸ்ட் ஹவுசில் தங்க வைப்பார். அவர்களுக்கு ராஜோபசாரம் செய்வார். அவர்களால் ஒரு காலணா லாபம் இருக்காது. இருந்தாலும் அவர்களைத் தன் வீட்டிற்குக் கூப்பிடாமல் விடமாட்டார். முக்கியமாக இசை, நாட்டியக் கலைஞர்கள் யாரும் அவரது விருந்தாளியாக இல்லாமலிருக்க முடியாது! டில்லி சபாக்காரர்களுக்கும் இது ஒரு விதத்தில் சௌகரியம். கலைஞர்களை செலவில்லாமல் தங்கவைத்து விடலாம்!

"ஜெயம்! அக்டோபரில் லால்குடி வரார். சாவனிருக்கு ஒரு பக்கம் விளம்பரம்..."

"என்னை எதுக்கய்யா கேட்கறே? ஷேர் ஆயில் விளம்பரத்தைப் போட்டுக்கோ... ஆபீஸுக்கு போன் பண்ணு. செக் அனுப்பச் சொல்றேன். லால்குடி ஸோலோவா?.... வெரிகுட்.... நான் வரேன்பா. சிவாஜி லஞ்சுக்கு வரார்...".

"சிவாஜியா ஸார்? இன்னும் யார் யார் ஸார்...?"

"எனக்கு எந்த சினிமா ஆக்டர் பேர் தெரியும்? நாலைஞ்சு ஹீரோயின் பவுடரும், லிப்ஸ்டிக்குமாக இருக்குதுங்க... அப்புறம் யாரோ யங் பாய்ஸ். 'சுண்டைக்காய் வத்தல் குழம்பு போடறியா'ன்னு கேட்டார் சிவாஜி. சுண்டைக்காய் வாங்கப்போகிறேன்......." என்று பறப்பார். சங்கீதக் கலைஞர்கள் உரிமையுடன் போய் தங்கக் கூடிய இடம் ஜெயத்தின் கெஸ்ட் ஹவுஸ். "சாயங்காலம் என்

கச்சேரிக்கு வர்றீங்களா ஜெயம்?" என்று அவர்கள் மரியாதைக்கு கேட்பார்கள். "கச்சேரியா.... நமக்கு எங்கே சார் டயம்? நூறு ரூபாய் டிக்கெட் இரண்டு வாங்கி வெச்சிருக்கிறேன். எங்கே வர்றது? பொழைப்பைப் பார்க்கணுமே. இந்த ஜாண் வயிற்றுக்காக அலைந்தா கணுமே.....மூன்று கோடி ரூபாய் பிராஜக்ட் ஒண்ணு நம் 'பெண்டை' நிமிர்த்திடறது.... நான் வரேன். எல்லாம் சௌகரியமாக இருக்கிறதா? மெட்ராஸுக்கு மாமியுடன் பேசினீங்களா? அட, நீங்க ஒண்ணு, எஸ்.டி.டி இருக்கு, பேசுங்க சார். பையா, சாருக்கு ஏஸியைக் குறைச்சு வை. ஐஸ்க்ரீம் வேண்டாம். சாயங்காலம் தொண்டை கட்டிடப் போகிறது. அப்புறம் சபாக்காரன் என்னை சபிப்பான்! டிரைவர், சின்ன வண்டியை நான் எடுத்துகிட்டுப் போகிறேன். பெரிய வண்டியை இவர் யூஸ் பண்ணட்டும்... வரேன்" என்று கூறிக்கொண்டே ஓடுவார்!

எழுத்தாளர்கள், நாட்டியக் கலைஞர்கள், பக்தி விரிவுரையாளர்கள் என்று எந்தத் துறையை சேர்ந்த பிரமுகராக இருந்தாலும் இவருக்குக் கெஸ்டாக இருந்தாக வேண்டும்!

சங்கீதம் தெரியாது. கதை, நாவல்கள் படிப்பதில்லை. பக்திக்கும் இவருக்கு வெகுதூரம், இருந்தும் அவர்கள் பெரிய மனிதர்களாக, நாலு பேருக்குத் தெரிந்த ஆசாமிகளாக இருப்பதால் அவர்களைத் தன் நண்பர்களாக்கிக் கொண்டுவிடுவார்.

"ரைட்டர் லக்ஷ்மி வந்திருக்காங்க. பை தி பை. அவர் கவிதை எழுதுகிறவரா?... நான் எங்கேப்பா மாகசீன் படிக்கிறேன்..." என்பது மாதிரி பலரைப்பற்றி பல சமயங்களில் கேட்பார். சீர்காழியிடம் "ஓரம்போ பாட்டு நீங்க பாடினது தானே?" என்று கேட்பார். ஏன், சிவாஜியிடமே "என்ன சார்... ஒரு அம்பது படத்திலாவது நடிச்சிருப்பீங்களா?" என்று கேட்டிருக்கிறார்!

ஜெயம் இவ்வளவு உதவி செய்கிறாரே, அதைப்பற்றி ஜம்பமாகப் பேசுவார் என்று நினைக்கிறீர்களா? ஊஹூம் ஆசைக்காகச் செய்பவர்; பெருமைக்காக அல்ல!

# நடேசன்

மதுராந்தகத்தில் ஏராளமான நஞ்சை புஞ்சை நிலங்களுக்கும், ஊரில் ஏழெட்டு வீடுகளுக்கும், வாழை, வெற்றிலைத் தோட்டங்களுக்கும் அதிபரான நடேசன் சுயமாகச் சம்பாதித்தது ஒன்றுமில்லை. எல்லாம் பரம்பரை பரம்பரையாக வந்தது. நடேசனின் 'ஆட்சிக் காலத்தில்' இந்த பரம்பரைச் சொத்துகள் சிறிது குறைந்தனவே தவிர கூடவில்லை.



தோப்பிற்கோ, களத்துமேட்டிற்கோ நடேசன் போவது அபூர்வம். அவரைச் சந்திக்க வேண்டுமானால் செங்கற்பட்டு கோர்ட்டுத் தாழ்வாரங்களில்தான் பார்க்கலாம்! அந்த கோர்ட் பியூனுக்கு அடுத்தபடி அதிக 'சர்வீஸ்' போட்டவர் அவர்தான்! முப்பது வருஷங்களாக கோர்ட் வராந்தாக்களில் உலாத்திவரும் நடேசனுக்கு கோர்ட்டில் ஒவ்வொரு தூணும் ஒவ்வொரு சுவரும் பரிச்சயமானவை. வாரத்தில் இரண்டு மூன்று நாளாவது கோர்ட்டிற்கு வராவிட்டால் அவருக்குப் பைத்தியம் பிடித்துவிடும். வரப்பு வழக்கு, சொத்து வழக்கு, குத்தகை கேஸ், வீட்டு வாடகை பாக்கி வழக்கு, தோப்பு காண்ட்ராக்ட் வழக்கு, வட்டி பாக்கி வழக்கு என்று ஏதாவது வழக்கு நடந்துகொண்டே இருக்கும்!

நடேசனால் லாபமடைந்தவர்களில் கோர்ட் ஊழியர்கள் நீங்கலாக முக்கியமானவர், 'வாய்தா' வரதராஜன், இவர் ஒரு வக்கீல். வாய்தா எக்ஸ்பர்ட். நடேசனுக்கு எதிராக கேஸ் போடுபவர்களை, வாய்தாக்கள் வாங்கியே படாத பாடு படுத்துவார். வரதராஜனின் வீட்டிற்கு 'நடேச நிலையம்' என்று பெயர் வைத்தாலும் தகும். எல்லாம் நடேசனின் பணம்தான்!

அகலமான சரிகைக் கரை வேஷ்டி (சற்று உயரமாகத் தூக்கிக் கட்டப் பட்டிருக்கும்) வெளிர் மஞ்சள் சில்க் சட்டை, ஏழெட்டு மோதிரங்கள், விசிறிமடிப்பு அங்கவஸ்திரம், காதில் கடுக்கன், நெற்றியில் சந்தனப் பொட்டு, நடு வகிடு கிராப்பு, சட்டை பாக்கெட் நிறைய காகிதங்கள், கோல்ட் கவர் பேனா, இடதுகையில் வெள்ளிப் பொடி டப்பி இவைதான் நடேசன்.

வக்கீல் வீட்டிற்குப் போகும்போது வலது கையில் பத்து பன்னிரண்டு வாழைக்காயும் வெற்றிலைக் கவுளியும் இருக்கும். சில சமயம் முழு பலாப்பழம் இருக்கும். "என்ன வக்கீல் சார்... எப்படியும் இன்னிக்கு வாய்தா வாங்கிடுங்க, நாலு தபா அந்த பசங்களை இழுத்தடிச்சால்தான் புத்தி வரும். யாருன்னு நெனைச்சிகிட்டு இருக்காங்க. உம், நடேசனை தெரியாது. வக்கீல் சார், நம்ப குமாஸ்தா கிட்டே பணம் கொடுத்துட்டேன். சாட்சிப்படி கட்டிடச்சொல்லி... என்ன சொல்றீங்க? ஜேபி கனமாக இருக்குமே என்றா? நீங்க ஒண்ணு... உங்களுக்கு பீஸ் கொடுக்காமல் ஏமாத்திடவா போறேன். காருக்கு டயர் மாத்தணுமா? நாளைக்கு மெட்ராஸ் போறேன். வூட்லே என்னமோ வளை வாங்கணும்னு சொல்லிச்சுங்க, வர்றபோது நம்ப வண்டிக்கு இரண்டு டயர் போட்டாந்துடறேன். இப்போ பணம் கையிலே கொண்டு வரலே. ஜட்ஜ்மென்ட் காபி எடுக்கணும். ரிஜிஸ்தர் நோட்டீஸுக்குப் பணம், இதுமாதிரி சில்லரை செலவுக்குத்தான் வெச்சிருக்கேன்...

அட, என்ன ஸார்! இந்தாங்க நூறு ரூபாய் மத்ததைப் பின்னால் தரேன்... அப்போ வேலி விவகாரத்தை கோர்ட்டுக்கு வெளியே முடிச்சுலாம்னு வெங்கடாசலம் சொல்றானாம். வேண்டாங்க போனாப் போவுதுன்னுவுட்டால் பின்னால் ரொம்ப தலைமேல் ஏறுவாங்க... இனிமேல் நம்ம பக்கமே

வர்றதுக்கு பயப்படணும். நல்லா புத்தி வரணும். கடைசி வரைக்கும் போய் அவங்களை போண்டியாக்கணும். என்னமோ வேடிக்கை காட்டறாங்களே.

"ஆமாம், உங்களை கேட்கணும்னு இருந்தேன். மறந்துட்டேன். மாஜிஸ்டிரேட்டிற்கு டிரான்ஸ்ஃபர் ஆகி விட்டதுங்களாமே. அமீனா சொன்னார், யாரு வர்றாங்களாம். சேலத்திலிருந்துன்னாங்க யாரு பாலுசாமியா? அடப்பாவமே அவரு வாய்தா தர்றதுக்கே அழுவாரே...

"இதோ வராரே, நம்ப குமாஸ்தா. என்ன லோகு, அண்டிமாண்டு பத்திரத்தை காபி எடுத்தாச்சா? அடஇன்னாய்யா, உனக்கு இல்லாத காபி செலவா? எப்படியும் இன்னிக்கு நோட்டீஸ் ரிஜிஸ்டர் பண்ணி அனுப்பிச்சுடு.... ஆமாம், அந்த ஆலப்பாக்கத்தான் கேஸ் இப்படி கவுந்து போச்சே! அப்பவே முட்டிகிட்டேன் அந்த அழுக்கு கோட்டு வக்கீலை வைக்காதேன்னு. நம்ப ஐயாகிட்ட கொடுத்து இருந்தால் பாயிண்ட் பாயிண்டா பிச்சு உதறி இருக்க மாட்டாரா? போவட்டும். அவன் கொடுப்பனை அவ்வளவுதான்...!

"சரி, வக்கீல் சார்..நான் போய் ஓட்டலில் நாஸ்தா பண்ணிவிட்டு சப் ஜட்ஜ் கோர்ட்டாண்டை வந்துடறேன்... நீங்களும் வந்துடுங்க..."

# சாமண்ணா



மணி என்ன? எட்டரையா? ஒரு நிமிஷம் இருங்கள். சாமண்ணா வந்து விடுவார். கடிகாரம் முன்னே பின்னே போனாலும் போகும். சாமண்ணா நேரம் தவறமாட்டார்! நீங்கள் சௌகார்பேட்டை ஜெனரல் முத்தையா தெருவில் வசிப்பவராக இருந்தால், சரியாக எட்டு முப்பதுக்கு சாமண்ணா அந்தத் தெருவழியாகச் செல்வதைப் பார்த்திருப்பீர்கள் கடந்த இருபத்தைந்து வருஷத்திற்கும் மேலாக சாமண்ணா, ஒரு லேவாதேவி சௌகாரின் காஷியர், நகை மதிப் பீட்டாளர், மானேஜர் எல்லாம்! அதோ வருகிறார் சாமண்ணா

பளிச்சென்று, கச்சம் வைத்துக் கட்டப் பட்ட வெள்ளை மில் வேஷ்டி. முழுக்கை வெள்ளை சட்டை (கையில் ஒரு 'டக்' போட்டது) உத்தரீயம். ஜேப்பில் இரண்டு மூன்று பேனாக்கள். அறுபதைத் தாண்டியவரானாலும் நடையில் மிடுக்கு. குடுமியா ஜில்பாவா என்று கூறமுடியாத ஒரு நடுத்தர நீளமுடி. ஈரத்தலையை ஆற்றியபடியே, நுனி மூக்கில் உட்கார்ந்திருக்கும் கண்ணாடி வழியே உலகை சர்வ திருப்தியுடன் பார்த்துக்கொண்டு செல்லும் பாங்கு இவை எல்லாம் சாமண்ணாவின் டிரேட் மார்க்குகள். கவலை இல்லாத மனிதன் என்று சாமண்ணாவைச் சுலபமாக வர்ணிக்கலாம். இத்தனைக்கும் அவருக்கு எத்தனையோ

தொல்லைகள், கவலைகள்.

அட போய்யா. கவலைப்பட்டுக்கொண்டு மூலையில் உட்கார்ந்தால் தீர்ந்துபூடுமா? மரம் வெச்சவன் கவலைப் படட்டும்! என்று வேதாந்தம் பேசுவார்.

கையில் பணம் இருக்கிறதோ இல்லையோ காலையில் இங்கிலீஷ் பேப்பரை வாங்கி வரிவரியாகப் படிக்காமல் விடமாட்டார். குதிரை ரேசில் நிறைய ஈடுபாடு. ஞாயிற்றுக்கிழமைகளில் ரம்மியில் ஐக்கியமாகி விடுவார். என்றாவது ஒரு நாள் குதிரையோ சீட்டோ பணத்தை வாரிக்கொடுக்கும் என்ற பெரிய எதிர்பார்ப்பு அவரிடம் கிடையாது. "பணம் வந்தால் சரி. வராவிட்டால் சரி. பணக்கஷ்டம் எல்லாருக்கும்தான். அமெரிக்காவை ஆகா ஓகோ என்று சொல்றாங்க...அங்கே மட்டும் ஏழை இல்லையா?.. பாங்க் கொள்ளைகள் இல்லையா?.. என்பார்.

குதிரை, சீட்டு தவிர அவருக்குத் தன் லேவாதேவி தொழிலில் அபார ஈடுபாடு உண்டு. தானே சௌகார் போன்றும் பலருக்குத் தானே சொந்தப் பணத்தைக் கடன்கொடுப்பது போல் பேசுவார்—

"சேட் பையன் மங்கள்மல் இருக்கானே, என் மடியில் வளர்ந்த பையன். ஆயிரம் கொடு என்றால் கண்ணை மூடிக்கொண்டு கொடுப்பான். நேற்று என்ன ஆச்சு தெரியுமா?அட்வகேட் ராமதுரை அர்ஜண்டா ஐயாயிரம் வேணும்னு வந்து நிக்கறார். கல் வெச்ச நெக்லசைக் கொண்டு வந்தார். கல் போனால், சேதாரம் போனால் இரண்டரை சவரன் தேறுவதே சந்தேகம். அவருக்கோ பணம் அவசரம். வேறு நகையும் இல்லை. 'சாமண்ணா, உன்னை நம்பி வந்துட்டேன். கையை விரிக்காதே' என்கிறார். பார்த்தேன். ராமதுரையை நம்பலாம் மங்கள் இன்கோ பாஞ்ச் ஹசார் தேதோ' என்றேன். ஒரு வார்த்தை பேசணுமே! எண்ணிக் கொடுத்தான்.

சினிமா ஆக்டராம். என்னவோ பேர் சொன்னான். காசு மாலை கொண்டு வந்தான். பத்து ரூபா கேட்டான். கண்ணாலேயே பாத்து "நமக்கு இந்த நகை வேண்டாம்" என்று அனுப்பிவிட்டேன் 14 காரட் நகை.... சாமண்ணாவின் கை

விரலே உரைகல்– தொட்டாலே தெரிஞ்சுடும்!

மங்கள் பி.ஏ. படிச்சிருக்கான் என்று பெயர். இங்கிலீஷில் ஒரு லெட்டர் எழுதத் தெரியாது. நான் டிக்டேட் பண்ணினால் எழுதிக் கொடுப்பான்..."

சாமண்ணாவின் இங்கிலீஷ் பிரமாதமாக இருக்கும். மெட்ரிகுலேஷன்தான் படிப்பு என்றாலும் இங்கிலீஷ் பேப்பரைப் படித்துப் படித்தே அபார நிபுணத்துவம் பெற்று விட்டார்! சீட்டு ஆட்டத்தின்போது தகராறு வந்துவிட்டால் இங்கிலீஷில் பிய்த்து உதறுவார். அவ்வளவு சரளம்! அவரது ஆங்கில அறிவு காட்டில் காய்ந்த நிலாவாகப் போகிறதே என்று நம்மை ஆதங்கப்படச் செய்யும்.

ராத்திரி சாப்பாட்டிற்குப் பிறகு தெருமுனையில் உட்கார்ந்து பன்னிரண்டு மணிவரை அரட்டை அடிப்பார். "மைசூர் பிளேட்டிற்கு என்ன அக்செப்டன்ஸ்? பாயின்டிற்கு ஒரு பைசாவாக்க வேண்டும்?'' என்பது போன்ற விஷயங்களாகத்தான் இருக்கும்!

உண்மையிலேயே சாமண்ணா ஒரு கேரக்டர்!

# மாணிக்கம்

ஜவஹர்லால் நேருவின் வெயிஸ்ட் கோட் போல, சர்ச்சிலின் சுருட்டு போல, சார்லி சாப்ளினின் தொப்பியைப் போல, மேஸ்திரி மாணிக்கத்திற்கு ஒரு இமேஜை அளிப்பது அவர் கையில் இருக்கும் கொல்லுருதான்!



இவர் தங்க ஸ்பூனுடன் பிறக்கவில்லை. இரும்புக் கொல்லுருவுடன் பிறந்தவர்; அதைப் பற்றி மிகவும் பெருமையும் படுபவர். தன் தொழிலின் மேல், தன் கை வித்தையின் மேல் அபார மதிப்பு. இத்தனைக்கும் வேலையில் அவர் மன்னன் அல்ல. அதில் உள்ள குறைபாடுகளை தன் பேச்சினால் ஈடுகட்டிவிடுவார்!

நல்ல உயரம், 'வி' கழுத்து பனியன் மாதிரியான சட்டை கட்டம் போட்ட வேட்டி. பெரிய முண்டாசு. பெரிய மீசை. கழுத்தில் தாயத்து. வாயில் புகையிலை. வலது கையில் கொல்லுரு. இடது கையில் ஒரு பித்தளை (சாப்பாட்டுத்) தூக்கு. பார்த்தவுடனேயே இவர் ஒரு கொல்லத்துக்காரர் என்பது தெரிந்து விடும்.! "என்னப்பா மாணிக்கம். கிணற்றடியில் ஒரு சின்ன மேடை போடணும். சௌகரியப்பட்டபோது போடு" என்று சொல்லி விடுங்கள் போதும்; ஆரம்பித்து விடுவார் மாணிக்கம்! "சாமி... இன்னும் ஆறு மாசத்துக்கு ஒழிவு கிடையாது. பொங்களுக்குத் தொறந்துடணும்னு திட்டம் போட்டுட்டாங்க, பேஸ்மெண்டே வரலை சினிமா தியேட்டர்... மாணிக்கம், வேலை மளமளன்னு ஆவட்டும்'னு சொல்றாரு காண்டிராக்டர். அவசரப்பட்டா ஆவறதுக்கு எலெக்ட்ரீ வேலையா?...கல் போட்டால், பச்சைக் குழந்தையைப் பாத்துக்கிற மாதிரி கவனிச்சுக்கிட்டு இருக்கணும்!

"இப்போ இஞ்சினீயர் படிப்புப் படிச்சுப்புட்டு இங்கிலீஸ்லே பேசிக்கிட்டே வர்றாங்களே, அவங்களை நம்ப கிட்ட அனுப்புங்க, கட்டட வேலையைப் பத்தி நாலு கேள்வி கேட்கிறேன். திணறிப் போவாங்க, திணறி! வுடு...ஸார்.

"இந்தத் தொழில்லே படிப்பு எல்லாம் பைசாவுக்குப் பிரயோசனமில்லை. கொல்லுருவாலே தட்டிப்பாத்தே செங்கல் நல்லா தூளை போட்டிருக்குதா, சிமென்ட் செட் ஆயிடுச்சா, கல்வை கரீக்டா இருக்குதான்னு சொல்லிவிடுவேன். அப்பப்போ மட்டப்பலகை வெச்சு எதுக்குப் பார்க்கணும்? இஞ்ச் டேப் வெச்சு எதுக்கு அளக்கணும்? கண்பார்வையிலேயே தெரியவாண்டாமா? சொன்னா ஆச்சரியமாயிருக்கும். இப்ப மவுண்ட் ரோட்ல கட்டியிருக்கிறாங்களே எல்லேசி' கட்டடம். ஒரு 'விரக்கடை' சாய்ஞ்சு இருக்குது. அப்படித்தான் கட்டியிருக்காங்க. இன்னா லெவல் பார்த்தாங்க? கடைசி மாடி தம்மாம் அளவு சாய்ஞ்சு இருக்கறது தெரியும். அல்லாம் படிச்சவங்க கட்டின கட்டடம். இந்த அழகில் இருக்குது! இந்த மாணிக்கம் பொறந்தப்பவே, இந்தப் புள்ளை கல்லைக் கட்டிக்கிட்டுத்தான் காலந்தள்ளப்போவறதுன்னு தெரிஞ்சோ என்னமோ இப்படி மாணிக்கம்னு பேர் வைச்சாங்க, மாணிக்கக் கல் இல்லிங்க, செங்கல்!... 'என்ன சொல்லிகிட்டு இருந்தேன். ஆமாம். இந்த மாணிக்கத்தின் வேலை சுத்தமாக இருக்கும். பார்சாதி கோவில் தெரு முக்குலே வூடு இருக்குதே நான் கட்டினதுதான். குண்டு போட்டால் கூட அசையாது... கட்டி எத்தினி வருஷம் ஆவுது தெரியுமா? அத்தைக் கட்றப்போ ஜாம்பஜார் ஏது? பாதி மைதானமாகத்தான் இருந்திச்சு. மைலாப்பூர்லே, சினிமா ஆக்டு பண்ணுங்களே லலிதா, பத்மினி, அவங்க வூட்டை நான்தான் கட்டினேன். ஒண்ணுக்கு நாலு மணல். வூடு சும்மா கோட்டை மாதிரி இருக்குது... சாமி. .உன் கிட்டே பணம் வாங்கித் துன்னுப்புடலாம். வேலைலே நாணயம் இருக்கணும்."

பாவம், மாணிக்கம்! நாலடி உயரத்திற்கு இவர் மேடை கட்டினால் அது அரை அடி சாய்ந்து இருக்கும். அதைச் சரி செய்ய வேறு ஒரு கொல்லத்துக்காரர் தேவைப்படுவார்! ஒருக்கால், முன் பிறவியில் பைசா நகரத்து சாய்ந்த கோபுரத்தை மாணிக்கம் தான் கட்டியிருப்பாரோ?

# விஜி மணி



கலியாணம் ஆகி ஐந்து வருடம் ஆனபிறகும் இளங்குமரி மாதிரி காட்சி அளிக்கும் திருமதி விஜயலட்சுமி வேங்கடசுப்பிரமணியத்திற்குப் பிடிக்காத பல விஷயங்களில் ஒன்று (அல்ல, இரண்டு!) தன் கணவர் பெயர் ஒரு மைல் நீளமும் தன்னுடைய பெயர் ஒரு கிலோ மீட்டர் நீளமுமாக இருப்பதுவும்தான். ஆகவே ஷார்ட் அண்ட் ஸ்வீட்டாக விஜிமணி என்று ஆக்கிக்கொண்டு விட்டாள்! கணவர் மத்திய சர்க்காரில் பெரிய அதிகாரி. ஆகவே லேடீஸ் கிளப், மண்டே கிளப், காஃபி செஷன் போன்ற பலவற்றில் கலந்து கொண்டு பணத்தையும் நேரத்தையும் செலவழிக்கும் விஜி, கவலையில்லாத சிட்டுக்குருவி!

முப்பதை நெருங்கிக் கொண்டிருந்தாலும் உருவத்திலும் நடை உடை பாவனையிலும் இருபது தான். பாப் செய்யப்பட்ட தலை. பென்சிலால் தீட்டப்பட்ட புருவம். கடுகளவு பொட்டு. என் சாண் உடம்புக்கு ஒரு சாண் உயர ரவிக்கையே போதும் என்ற கணக்கில் 'ரவிக்'! லோஹிப் புடவை, ஹை ஹீல் செருப்பு. காது, மூக்கு, கழுத்து கை எதிலும் நகை எதுவும் கிடையாது. சோஷியல் சர்வீசில் ஆர்வம். அதை விட சினிமாவில் மோகம். என்றாவது ஒரு நாள் தானும் சினிமாவில் நடித்துப் பெயரும் புகழும் வாங்கவேண்டும் என்ற ஆசை; வாங்குவோம் என்ற குருட்டு நம்பிக்கை எல்லாம் உண்டு! விஜி வீட்டில் இருந்தால் டெலிபோனும் காதுமாக இருப்பாள்.

ட்ரிங்...ட்ரிங்... டெலிபோன் மணி அடிக்கிறது. "யெஸ், விஜி ஹியர். ஹாய், எப்படி இருக்கிறே? நானே போன் செய்யணும்னு இருந்தேன். ஏன் லாஸ்ட் மினிட்டில் ஏமாத்திட்டே? சாடர்டே ஃபீவர் ரியலி ஃபன்டாஸ்டிக். அந்த ட்ரவோல்டா ரொம்ப ரொம்ப சார்மிங்! அப்படியே கடிச்சு சாப்பிடலாம்போல் இருக்கு...ஏய்...ஏய்....ரொம்ப நாட்டியாப் பேசறே. "போகட்டும். உன்னைக் கேக்கணுமே..விமல் ஃபாப்ரிக்ஸ் ஃபாஷன் ஷோவிற்குப் போகிறாயா? மாடல் பண்ணு கிறாயா என்று கேட்கிறார்கள். சீச்சீ, டீசன்டாகத்தான் டிரஸ் பண்ணிக் கொள்ளணும். என் ஹஸ்பெண்டின் நண்பர்தான் ஏற்பாடு பண்றார். அசோகாவில்... எல்லோருக்கும் டின்னர் தருவாங்களாம். கலர் படம், மூவி எல்லாம் எடுக்கிற ஐடியா இருக்குது. நீயும் வருகிறாயா?... உம், சொல்லிப் பார்க்கிறேன்...பக்கத்தில் யாரும் இல்லையே. உன் ஃபேஸ், பாடி எல்லாம் ஓகே தான். ஆனால் நீ கொஞ்சம் சதை போடணும்....

"யெஸ், யெஸ். அப்புறம் ஒரு நியூஸ். சீச்சீ, சொல்வதற்குள் என்ன அவசரம்? என்னது பைத்தியம்? அந்த மாதிரியெல்லாம் ஒண்ணும் இல்லை. உங்க மாமியார் பாஷையில் சொன்னால் 'குளிச்சுண்டு'தான் இருக்கேன்! என்ன சொல்ல வந்தேன்? கலாமன்றத்தில் ஒரு தமிழ் டிராமா போடறாங்க என்னை நடிக்கச் சொல்றாங்க. டெய்லி சாயங்காலம் ரிகர்சல். ஒரு மாசத்திற்கு ஜாலிதான். இந்த சமயத்தில் கார் இல்லையே என்று இருக்கிறது. ஹீரோவாக நடிக்கிற பையன். என்ன 'கர்லிஹேர்' தெரியுமா! அவன் தினமும் ஸ்கூட்டரில் வந்து அழைத்துக் கொண்டு போக ஒத்துக்கொண்டி ருக்கிறான்....மியூசிக் ஃபெஸ்டிவல் சீசன் டிக்கட் வாங்கியிருக்கிறேன். இந்த அழகில் எங்கே போவது? நீ போவதாக இருந்தால் சொல், என் ஹஸ்பண்டை உன்னை அழைச்சிக்கிட்டுப் போகச் சொல்றேன்... என்னடி 'என்னமோ மாதிரி இருக்குது' என்கிறே? அவர் உன்னை கடிச்சுத் தின்னுடமாட்டார். அவர் ப்யூர் வெஜிடேரியேன்!

# அம்பி

வேலங்கோடு வெற்றி அம்மன் புரொடக்ஷன் திரைப்படக் கம்பெனியின் புரொடக்ஷன் மானேஜரான அம்பியின் உண்மைப் பெயர் அவருக்கே ஞாபகமில்லை. அவரது திருமணப் பத்திரிகையில் கூட தியாகராஜன் என்னும் 'அம்பி' என்று மாற்றி அச்சடித்து விட்டார்கள் என்றால் பார்த்துக் கொள்ளுங்களேன்! தமிழ்ப் பட உலகில் முப்பது வருஷங்களாக இருக்கும் ("இருக்கும் என்று சொல்லாதீர்கள் அண்ணா. குப்பை கொட்டிக் கொண்டிருக்கும் என்று சொல் லுங்க") அம்பிக்கு இண்டஸ்டிரியில் தெரியாத நட்சத்திரங்களோ, டெக்னீஷியன்களோ, தயாரிப்பாளர்களோ கிடையாது, படேபடே ஸ்டார்களை கூடப் பெயர் சொல்லிக் கூப்பிடுவார். நீ, வா, போ என்றுதான் பேசுவார் உரிமையுடன். அவர் சர்வீசில் எத்தனையோ கம்பெனிகளைப் பார்த்துவிட்டார். பள்ளங்கள் கோபுரங்களாகியிருக்கின்றன. கோபுரங்கள் மறைந்து போயிருக்கின்றன!



அதோ வருகிறார், அம்பி!

மேல்பட்டன் போடாத ஸ்லாக், பாண்ட். ஹவாய் சப்பல், கழுத்தில் மெல்லிய தங்கச் சங்கிலி அமெரிக்கன் கிராப். நெற்றியில் குங்குமப் பொட்டு. முகத்தில் மூன்று நாள் வளர்ச்சி புகையிலைக் கறையேறிய பல்வரிசை, கையில் பெரிய டைரி அதைவிட பெரிய டைரி அவ்வு காகிதங்கள் திணிக்கப்பட்ட சட்டைப்பை.

"என்ன அம்பி. ஆளையே காணோம்?"

"நீங்க கேட்டுவிடுவீங்க சார், ஆளையே காணோம், தேளையே காணோம் என்று! செட்டியார் படத்திற்கு டேட் அனௌன்ஸ் பண்ணிட்டார். க்ளைமாக்ஸ் எடுத்தாகலை. ரீரிகார்டிங் ஆவணும். ஸ்டூடியோவுக்கு ஏகப்பட்ட டிமாண்ட். அவனவன் தீபாவளி வருது என்றால் குஷியாக இருப்பான். அம்பிக்கு ஏண்டா தீபாவளி வருகிறது' என்று இருக்கிறது. எல்லா ஃப்ளோரும் ஃபுல் ரெட்டியார் இதுவரை அம்பிக்குக் கைவிரிச்சதில்லை. 'அம்பி, பொசிஷன் ரொம்ப டைட்' என்கிறார்.

"டைரக்டர் இரண்டு நாள் கால்ஷீட் கொடுத்தாரு. அந்த தேதியில் நிம்முவுக்கு பெங்களூர் அவுட்டோர். உடனே புரொட்யூசர் தங்கராஜுவிற்கு போன் பண்ணேன். 'நிம்மு கால்ஷீட்டை எனக்குக் கடன் கொடுங்க. பின்னால் நான் திருப்பிக் கொடுத்துடறேன்' என்றேன். தங்கராஜுவை எனக்கு காஸ்ட்யூமராக இருந்த காலத்திலிருந்தே தெரியுமே!

"நம்ம முதலாளி என்ன சொல்றார் தெரியுமா? ஃப்ளோர் இல்லாவிட்டால் போகட்டும். அவுட்டோரில் கொஞ்சம் வேலையிருக்கே, முடிச்சுடேன்' என்கிறார். எங்கே தெரியுமா அவுட்டோர்? காஷ்மீரில்! ஒரு ஓட்டலிலும் இடம் கிடையாது ஏகப்பட்ட கவர்மெண்ட் பர்மிஷன் வாங்கணும். அவருக்கெங்கே இதெல்லாம் தெரியப்போறது?

"அவுட்டோர் என்றாலே நமக்கு அலர்ஜி. ஒரு கதையை கேளுங்கள். காஷ்மீரில் ஒரு சமயம் ஷூட்டிங். ஏழு நாள் ஷெட்யூல். சர்க்கஸ் கம்பெனி மாதிரி எல்லாரையும் கட்டி இழுத்துக்கொண்டு போய் இறக்கறேன். ஹீரோயின்.... பேர் எதுக்கு...ஹீரோயினை ஒரு பெரிய ஓட்டலில்

இறக்கியாச்சு. நம்ப ஆளுங்களுக்கெல்லாம் சுமாரான ஒட்டலில் இடம் போட்டு உக்கார வெக்கறேன். காமிராமேன் வரார். 'அம்பி, காமிரா மவுண்ட் பண்ணுகிற ஸ்க்ரூ மெட்ராசில் தங்கிப் போயிடுத்து அது வந்தால்தான் நாளைக்கு வேலையாகும்' என்கிறார். கிளம்பி வரவங்க எல்லாவற்றையும் சரிபார்த்து எடுத்துக்கிட்டு வரவேண்டாமா? இதெல்லாம் கூட அம்பியா பார்க்கணும்?... மேக்கப்மேன் மணி, "என்னப்பா மெட்ராசிலேயும் 15 ரூபாய் பேட்டா, இங்கேயும் அதே ரேட்டா?" என்கிறார்.முதலாளியோ "அம்பி, இழுத்துப்பிடி, இழுத்துப்பிடி என்று மென்னியைப் பிடிக்கிறார்.

"கதையை நடுவில் விட்டுவிட்டேனே.... ஒரு மாதிரியாகப் பத்து மணிக்கு அப்பாடின்னு படுக்கையை விரிக்கிறேன். போன் அடிக்கிறது. ஹீரோயின்தான். 'அம்பி, இந்த ஒட்டலில் ஒண்ணுமே சரியில்லை. ரசம் சோறு கிடைக்குமா? என்று கேட்குது. எனக்கு கோபம் வரவில்லை. வந்திருந்தால், 'என்னம்மா மசக்கையா?' என்று கேட்டிருப்பேன். முதலிலேயே சொல்லியிருந்தால் மெட்ராசிலிருந்து விமானத்தில் வரவழைத்திருப்பேன். அப்புறம் அந்த ராத்திரியில் ஸ்ரீநகர் பூரா டாக்சியில் அலைந்து ஒரு மதராசி ஒட்டலைத் தேடிப் பிடித்து ரசம் பண்ணி வாங்கிவந்தேன். டாக்சி செலவு மட்டும் ரூ 122 ரூபாய் ஆச்சு....

வரேன் அண்ணா!கமல் 'ரஷஸ்' பாக்கணும்னு சொன்னார். போய் அரேஞ்ச் பண்ணணும்..."

# கிருஷ்



கிருஷ்ணசாமி என்ற பெயர் கர்நாடகமாக இருக்கிறது என்று அதை நசுக்கி 'கிருஷ்' என்று ஆக்கிக் கொண்டிருக்கும் கேரக்டரைச் சந்திக்க வேண்டுமானால் காலை ஏழு மணியிலிருந்து ஒன்பது மணிக்குள் திருவல்லிக்கேணியில் உள்ள லட்சுமி லாட்ஜின் மூன்றாவது மாடியில் உள்ள கோடி அறையில் சந்திக்கலாம். அதன் பிறகு அவன் ஆபீஸ், சினிமா கிளப், 'தீர்த்தம்' என்று போய் ரூமிற்குத் திரும்ப நேரமாகும்! பல இரவுகள் கிளப்பிலேயே தங்கிவிடுவான்.

கிருஷ் ரொம்ப ரொம்ப நல்ல ஆசாமி நாற்பத்திரண்டைத் தாண்டிய கட்டை பிரம்மச்சாரி. ஒரு பெரிய மருந்துக் கம்பெனியில் சேல்ஸ் மானேஜர். வேலையில் அசகாய சூரன். லெட்டர்களுக்குப் பதில் 'டிக்டேட்' பண்ணினால் யாரும் கை வைக்க முடியாது! அபார ஞாபக சக்தி. எந்த மாட்டை எப்படிக் கறக்கவேண்டும் என்று தெரிந்தவன். கை நிறைய சம்பளம். மாங்காடு காமாட்சியின் மேல் எவ்வளவு பக்தியோ அவ்வளவு பக்தி 'ஜானி வாக்கர் ரெட் லேபிள்' புட்டி மீதும்! தன் சகோதரியின் குழந்தைகளுக்குத் துணி மணி என்று பணம் செலவு செய்வான்; அதே சமயம் ரம்மியிலும் நிறைய பணத்தைக் கரைப்பான். ஊர் கவலைகளைத் தன் தலையில் போட்டுக்கொள்ளும் கவலை இல்லாத மனிதன் இவன்! ("வாழ்க்கையை ஒரு மோர்க்குழம்பாக ஆக்கக் கூடாது. அது அதற்கு ஒரு கம்பார்ட்மெண்ட் பண்ணி வைத்திருக்கிறேன்.") ஆறு மணிக்கு சுப்ரபாதம் படிக்காமல் இருக்கமாட்டான். அதனால் நாள் முழுவதும் லஷ்மி அஷ்டோத்திரம், சகஸ்ரநாமம், கந்தர் அனுபூதி, திருப்புகழ், தேவாரம் என்று இருக்கவேண்டுமா? வாழ்க்கையில் சீட்டு ஆடுபவனெல்லாம்

கெட்டவனாக இருக்கிறானா? அல்லது பக்திமானாகக் காட்சி அளிப்பவன் எல்லாம் நல்லவனாக இருக்கிறானா? இரண்டுமில்லை. ஒரு சன்னியாசிக்குள் ஒரு அயோக்கியன் இருக்கிறான்; ஒரு அயோக்கியனுக்குள் ஒரு சன்னியாசி இருக்கிறான்" என்பான். "ஏண்டா கிருஷ், கல்யாணம் கார்த்தி எதுவும் பண்ணிக் கொள்ளவில்லை." என்று கேட்டால் "நீ ஏன் மொட்டை அடித்துக்கொள்ளவில்லை?" என்பது போல் இடக்காகக் கேட்பான். "எதற்குடா அடித்துக்கொள்ள வேண்டும்?" என்போம். "அது மாதிரிதான் நானும் கல்யாணம் எதற்குப் பண்ணிக்கொள்ள வேண்டும்?" என்பான்.

கிருஷ்ஷின் அறையில் படுக்கை, மேஜை, அலமாரி ஆகிய இடங்களில் பணம் இறைந்து கிடக்கும். சம்பாதிப்பதை எல்லாம் செலவழித்து விடுவான். பெரும்பாலான தொகையை தன் சகோதரியின் குழந்தைகளுக்கும் மற்ற உறவினர்களுக்கும் கொடுப்பான். சில்லறை சில்லறையாக பணம் கொடுப்பதால் அவனை யாரும் பழிக்கமாட்டார்கள். "கிருஷ் குடிக்கிறானே தவிர, ரொம்ப பக்தி" ஏதோ சீட்டு கீட்டு என்று போகிறான் என்றால் பொழுது போவதற்குத்தான். மற்றபடி தங்கம், என்கிறமாதிரி எல்லாம் பாராட்டுவார்கள்!

கிருஷ்ஷின் விசித்திரமான போக்குகளுக்கு மற்றவர்கள் அட்ஜஸ்ட் செய்து கொள்வார்கள் (பணம் பேசுகிறதே!) "அபூர்வ ராகங்கள் படத்துக்கு ஏழு டிக்கட் வாங்கி வந்திருக்கிறேன். நைட் ஷோ" என்பான். உறவினர்களை டாக்சியில் அழைத்துச் செல்வான். படம் முடிந்ததும் "இப்படியே காலாற நடந்து போகலாம்" என்று நாலு மைல் இழுக்கடிப்பான்!

திடீர் என்று அகால வேளையில் தன் அக்கா வீட்டிற்குச் சென்று, "பசிக்குது. வத்தல் குழம்பு சாதம் பண்ணிப் போடு" என்பான். அதே சமயம் தீபாவளி, பொங்கல் போன்ற நாட்களில் அவர்கள் எவ்வளவு வருந்திக் கூப்பிட்டாலும் தலை காட்டமாட்டான். ஒரு வருஷம் முழுக்க சினிமா பார்க்காமல் இருந்திருக்கிறான். தொடர்ந்து 16 நாட்கள் 16 வயதினிலே படத்தையும் பார்த்திருக்கிறான்! அவனை 'எக்ஸ்ட்ரீம் ஆசாமி' என்பார்கள். அது உண்மை!

## சந்தானம்

சந்தானத்தைப் பற்றிய ஒரு விஷயம் யாருக்கும் புரியாத புதிர். மூக்கு வளைந்து இருப்பதால் நுனிமூக்கில் மேல் கோபம் அடிக்கடி வருகிறதா அல்லது கோபம் அடிக்கடி சுர்ரென்று வருவதால் மூக்கு இத்தனை கூராக வளைந்து இருக்கிறதா என்பதுதான் அது!

முன் கோபத்திற்கு ஓர் உருவம் கொடுத்தால் அது சந்தானத்தைப் போல் இருக்கும்.

எப்போதோ சிறுவயதில் நெற்றிப் புருவங்களுக்கிடையே ஏற்பட்ட காயத்தின் வடு, சதா சுருங்கிய புருவம், வளைந்த மூக்கு, சற்றே வெளியே வந்திருக்கும் மேற்பற்கள் ஆகியவை அவன் கோபமாக இல்லாத போதும், அவனைக் கோபக்காரனாக காட்சி தரச்செய்யும் சந்தானத்திற்கு எந்த சமயத்தில் தான் கோபம் வரும் என்று சொல்ல முடியாது! ராத்திரி இரண்டு மணிக்குத் தூக்கம் கலைந்து எழுந்திருப்பான். பொடி போடலாம் என்று டப்பாவைத் தேடுவான். அகப்படாது. அவ்வளவுதான் 'அடியே மங்களம், எங்கேடி என் பொடி டப்பி? இந்த வீட்டில் ஒரு சாமான் வைத்தால் வைத்த இடத்தில் இருக்காது. எல்லாரையும் கட்டின துணியுடன் ஒரு நாள் துரத்தினால்தான் நிம்மதி. அடியே,இங்கே நான் கழுதை மாதிரி கத்திக்கொண்டு இருக்கிறேன். காதுகேட்டால் தானே கழுதைக்கு?

அடுத்த அறையில் குழந்தைகளுடன் படுத்துக்கொண்டு இருக்கும் அவனது மனைவி அலறிப்புடைத்துக்கொண்டு பொடி டப்பியைத் தேடுவாள். அவனது தலையணைக்குக் கீழே அது உருண்டு போயிருப்பதைக் கண்டுபிடித்து எடுத்துக் கொடுப்பாள். "அர்த்த ராத்திரியில் இப்படி ஏன் கத்தறீங்க? தலையணைக் கீழேதானே இருக்குது?" என்று அவள் கேட்கமாட்டாள். கேட்டால், "ஆமாண்டி, அஷ்டமத்துச் சனியே! ஐவேஜி இல்லாத உன் அப்பன் என் தலையில் உன்னைக் கட்டினான். உனக்கு இரண்டு வேளை சோறும், நாலு புடவையும் கொடுத்து வைச்சிக்கறேனே, அந்த திமிர்தான் இப்படிப் பேசறே?" என்பான்!

மங்களத்திற்கு இந்த மாதிரி திட்டுக்களைக் கேட்டு கேட்டு மரத்துப் போய்விட்டது. வீட்டில்தான் இப்படி என்பதில்லை. காய்கறி மார்க்கெட்டில், பஸ்ஸில், சினிமா கியூவில், ஆபிஸ் கான்டீனில், கலியாண விருந்தில், சாவு விழுந்த வீட்டில், இப்படி இடம் காலம், சந்தர்ப்பம் என்று வித்தியாசம் பாராமல் கண்மூடித்தனமாக் கோபமடைந்து கத்துவான் சந்தானம்.

"எவன்யா சமையல்காரன்? சம்பந்தி வீட்டாருக்கு இப்படியா காபி கொடுப்பான்? காபியா இது? மாடு சாப்பிடாதய்யா? முதல்லே உன் அழுக்கு வேட்டியையும் துருப்பிடித்த ஜல்லிக் கரண்டியையும் எடுத்துக்கொண்டு நடங்கய்யா. இல்லாவிடில் கழுத்தைப் பிடித்து கல்தா கொடுப்பேன். காபியாம் காபி" என்று கத்துவான்!

சமையல்காரர்கள், "சரிடா, வேம்பு, சாம்பு கிளம்புங்கடா" என்று ஆரம்பிப்பார்கள். பாவம், கலியாணம் நடத்துபவர்கள் சந்தானத்தையும் சமாதானப்படுத்தி, சமையல்காரர்களையும் சமாதானப்படுத்தி ஒருவாறு நிலைமையை சமாளிப்பார்கள்!

சீட்டு விளையாட்டில் இவனை யாரும் சாதாரணமாகச் சேர்க்க மாட்டார்கள். "எவண்டா என்னை வேணாம் என்று சொல்கிறது?" என்று கத்திக்கொண்டே சடாரென்று அகப்பட்ட சீட்டுகளைப் பற்றி எடுத்து கிழித்துப்

போடுவான். சில சமயம் கோபவெறியுடன் கத்தும்போது மயக்கம் வந்து விழுந்து விடுவான். ஆகவே இவனை அதிகமாக யாரும் சீண்டமாட்டார்கள். ஆபீசில் இவன், தன்னுடைய அதிகாரிகள் மீதே ஃபைலை எறிந்திருக்கிறான். ஒரு சமயம் சம்பளம் வாங்கியதும் கோபத்தில் அப்படியே ரூபாய் நோட்டுக்களை இரண்டாக கிழித்து விட்டான்! சந்தானத்தின் குழந்தைகள், புலி, சிங்கம், என்றால் கூடப்பயப்படமாட்டார்கள். அப்பா வருகிறார் என்றால் போதும், கதிகலங்குவார்கள்! இத்தனைக்கும் சந்தானத்திடம் ஒரு நல்ல குணம் உண்டு. அவன் குழந்தைகளை அடிக்க மாட்டான். கோபமே பலத்த அறைக்குச் சமமாயிற்றே!

கோபம் இருக்கும் இடத்தில் தான் குணமும் இருக்கும் என்பார்கள். சில சமயம் சந்தானம் யாருக்காவது உதவிகள் செய்வான். ஆனால் அங்கும் கோபத்தை உபயோகப் படுத்தாமல் இருக்கமாட்டான்.

பக்கத்து வீட்டு அம்மாள், தன் வீட்டு 'காஸ்' தீர்ந்து மூன்று நாளாகியும் புது சிலிண்டர் வரவில்லை, என்று பேச்சுவாக்கில் மங்களத்திடம் சொன்னாள். அதைக் கேட்டு சந்தானம், "அந்த கஜேந்திர கம்பெனிதானே? இதோ போய்க் கேட்கிறேன்," என்று கூறிவிட்டுப் போனான். அங்கு போய், ஒரே ரகளை செய்தான்.

"எங்கேய்யா உன் முதலாளி? ப்ளாக்லே விற்கற ஆசாமிங்க நீங்க! இல்லாவிட்டால் இத்தனை நாளாக எப்படிய்யா காஸ் சப்ளை செய்யாமல் இருக்கீங்க? ரிஜஸ்தரை எடுங்கய்யா? யாருக்கு, என்னிக்கு சப்ளை கொடுத்திருக்கீங்கன்னு பார்க்கலாம். இன்னிக்கே கம்ப்ளெய்ன்ட் எழுதிப் போடறேன். உங்க ஏஜென்சியைத் தீர்த்துக் கட்டாவிட்டால் என் பேரை மாத்திக்கறேன். நாங்க கொடுக்கறது காசு இல்லையா? எது எப்படியோ, இன்னும் ஐந்து நிமிஷத்திலே ஒரு சிலிண்டர் போய்ச் சேரணும்" என்று கத்தி, காரியத்தைச் சாதிப்பான்!

சந்தானம் ஒரு தனிப்பிறவி. இந்த அழகில் சில சமயம் "எனக்குக் கோபம் வந்தால்..." என்று வேறு சொல்வான்!

# பாலா துரைசாமி

டில்லி துக்ளக் ரோட்டில் உள்ள பிரம்மாண்டமான பழையகால பங்களாவின் முன்புறம் உள்ள பரந்த புல் தரையில் பளிச்சென்று போடப்பட்டிருக்கும் வெள்ளை பிரம்பு நாற்காலிகளில் ஒன்றில் கம்பீரமாக உட்கார்ந்து கொண்டு குரோட்டன் செடிகளை சீர் செய்யும் தோட்டக்காரருக்கு உத்தரவுகள் கொடுத்துக்கொண்டு, கார் டிரைவருக்கு 'ஐயாவை டிராப் பண்ணிவிட்டு வந்த பிறகு தன்னை எங்கெங்கு அழைத்துப்போகவேண்டும், என்பன போன்ற விவரங்களைச் சொல்லிக்கொண்டு, சமையல்கார கெடுவாலிப் பையனிடம் அன்றைய மெனுவைச் சொல்லிக்கொண்டே 'வுமன் அண்ட் ஹோம்' இதழை தன்னுடைய கோல்ட் ரிம் கண்ணாடி வழியாக சர்வ அலட்சியத்துடன் படித்துக்கொண்டிருப்பவர்தான் திருமதி பாலா துரைசாமி. (அப்பாடி, மூச்சு வாங்கினீர்களா?) பாலா துரைசாமிக்கு, அவரைப் பார்த்து இப்படி பெருமூச்சு விட்டால், வியப்பு அடைந்தால், ஏன் பொறாமைப்பட்டால் ரொம்ப சந்தோஷம்!)



டில்லி சங்கரின் பல குடுமிகளில் ஒன்றைத் தன் கையில்



வைத்திருக்கும் துரைசாமியின் (ஐஏஎஸ். முப்பது வருஷமாக டில்லி வாசம்) மனைவி பாலா. காலேஜ் பட்டம் பெற்றவர். ஆசைக்கு ஒன்று (ஜெர்மனியில் டாக்டர் கணவனுடன் இருக்கிறாள்.) ஆஸ்திக்கு ஒன்று (அமெரிக்காவில் மெட்டலல்ர்ஜி படிக்கிறான்.) கவலையில்லாத வாழ்க்கையாதலால் பணக்காரக் குண்டுத்தனத்தை உடல் பிடித்துக்கொண்டது. டில்லியில் உள்ள பெரிய அதிகாரிகளின் மனைவிமார்களின் சங்கத்தில் முக்கிய உறுப்பினர்.

'அம்மா டெலிபோன்' என்று பையன் நீண்ட ஒயரைக் கொண்டே டெலிபோனை புல் தரைக்கே கொண்டு வந்து கொடுக்கிறான் பாலா துரைசாமியிடம்.

"ஹலோ, யெஸ்...பாலா ஹியர், சொல்லு சுமதி. அமெரிக்கன் எம்பஸியில் ஆக்ஷன் போகலாமா? கர்ட்டன்ஸ் நல்லதாக வாங்கணும். கிராக்கரி செட் கிடைச்சால் வாங்கலாம். நம்ம வாணி, போன மாசம் ஒரு செட் வாங்கினாள். 850 ரூபாய்க்கு படு சீப்...

"சினிமாவுக்கா? நான் வரவில்லை. பிரிமியர் ஷோவிற்கு வரும்படி அமிதாபே கூப்பிட்டான். வர்லைடாப்பா ன்னுட்டேன். இன்னிக்கு நாம் போனால் நாளைக்கு நம்மகிட்ட வந்து ஏதாவது ஹெல்ப் கேட்பாங்க. சொல்றேனே... எனக்கு இதெல்லாம் பிடிக்காது. முப்பது வருஷமாக இங்கே இருக்கிறேனே. குதுப்மினார் போய்ப் பார்த்ததில்லை. வருஷாவருஷம் ராஷ்டிரபதி பவனிலிருந்து ரிபப்ளிக் டே பார்ட்டிக்கு அழைப்பு வரும். போனதில்லையே! எல்லாம் டாம், டிக் அண்ட் ஹாரியும் அசோகா ஓட்டலுக்குப் போய் சாப்பிடறாங்க. நான்? நெவர்! உள்ளே காலை வெச்சதில்லை... பாரு சுமதி.. டே இன் டே அவுட், யார் யாரோ வந்து இந்த விழாவிற்கு வரணும், அந்த கச்சேரிக்கு வரணும்னு கூப்பிடறாங்க.... பாலாவிற்கு வேறு வேலை இல்லையா. பாலாவை ஃபுட்பாலாக ஆக்கிவிடுவாங்க....

"ஏர் இண்டியா, ஆஸ்திரேலியாவிற்கு முதன்முதலாக சர்வீஸ் ஆரம்பிச்சபோது, போய் வருவதற்கு இலவச டிக்கட் அனுப்பினாங்க. நான் வரமுடியாது'ன்னுட்டேன்... அவங்களுக்கு என்ன? டிக்கெட்டை அனுப்பிடுவாங்க...

நாம்தானே போய்வரவேண்டும்! நம்மால் முடியாதுப்பா!"

பாலா துரைசாமி, தன் பெருமையை இப்படித்தான் பறை சாற்றிக் கொள்வார். "எல்லாம் ஃப்பூ இவருக்கு?" என்று நீங்கள் வியப்படையவேண்டும்; நமக்கு இவைகளில் ஒன்றுகூடக் கிடைக்கவில்லையே என்று பெருமூச்சு விட வேண்டும்!

"போனவருஷம் ஸ்டேட்ஸுக்கு போனேனே. என் பிள்ளையின் அபார்ட்மென்டிலிருந்து இரண்டு மைல் தூரத்தில்தான் டிஸ்னிலாண்ட். போய் பார்த்து விட்டு வர்லாம் வாம்மா' ன்னு உயிரை வாங்கினான். 'குழந்தை ! உன்னைப் பார்க்கத்தான் இங்கே வந்தேனே தவிர, ஊரைப் பார்க்க இல்லை. எல்லா ஊரும் ஒண்ணுதான். என்ன டிஸ்னிலாண்ட், என்ன மெரைன் லாண்ட், போடா' என்று சொல்லிவிட்டேன்" என்பார்.

உண்மையில், அமெரிக்கா போனபோது எதையும் பார்க்காமல்தான் திரும்பிவிட்டார். 'பார்த்தேன்' என்று பெருமையாக கூறுவதைவிட 'பார்க்கவில்லை' என்று சர்வ அலட்சியமாகக் கூறுவதில் தான் அவருக்கு சந்தோஷம்.! ஆகவே பாலாவின் பேச்சில், "அதைப் பார்க்கவில்லை ; இவர் அழைப்பை மறுத்துவிட்டேன்" என்று, தான் நிராகரித்த வைகளின் பட்டியல்தான் இருக்கும்!

"என் மாப்பிள்ளை ஜெர்மனியிலிருந்து எலக்ட்ரிக் அடுப்பு அனுப்பினான். இந்த குக்கிங் ரேஞ்சில் என்னென்னமோ இருக்கிறதாம். அங்கேயே விலை பத்தாயிரமோ இருபதாயிரமோ ரூபாய். அவள் ஆசைக்கு அவன் அனுப்பினான். அதை இன்னும் 'பாக்கிங்'கிலிருந்து பிரித்துக்கூட எடுக்கலை. எனக்கு கரி அடுப்பு போதும்— இந்த புது சமையல்காரப் பையன்தான், காஸ் வேண்டும் என்று மூக்கால் அழுதான். தொலைடா என்று வாங்கிக் கொடுத்தேன்..."

தன் மனைவியின் இந்த விசித்திர குணத்தைப் பற்றி துரைசாமி பொருட்படுத்தியதில்லை. அவருக்கு ஆபீஸைத் தவிர வேறு உலகம் கிடையாது!

## யார் இந்தக் கேரக்டர்?



"என்ன சார், நம்ப பத்திரிகையிலே ஜோக் போடறாங்க. ஒரிஜினாலிடியே கிடையாது. எல்லாம் இறக்குமதி சரக்கு தான்? சந்திர மண்டலம் போவதற்கு வேண்டுமானால் ராக்கெட் முதலிய வசதிகள் தேவை. ஜோக் எழுத ஒரு பேப்பர் பென்சில் போதுமே! இங்கிலீஷ் மொழியிலே எவ்வளவோ வீக்னஸ் இருக்கிறது. வார்த்தை வேறு ஸ்பெல்லிங் வேறு. எழுத்துக்களுக்கு உச்சரிப்பின் அடிப்படையிலே பெயர் இல்லை. டபிள்யு என்ற எழுத்தை எப்பொழுதாவது அப்படி உச்சரிக்கிறோமா?

"மொழியில் உள்ள குறைகளை வைத்துக்கொண்டே எவ்வளவோ ஜோக்ஸ் உருவாக்கிவிட்டார்கள். ஆங்கில மொழி நகைச்சுவை என்றே ஈவன் இஸார் ஒரு புத்தகம், எழுதியிருக்கிறார்......"

பத்திரிகை, புத்தகம், நகைச்சுவை சாமர்த்தியம் வார்த்தை ஜாலங்கள், சிலேடை, வித்தியாசமான எழுத்து நடை, துணுக்குகள், இது போன்ற பல விஷயங்களில் மணிக்கணக்காக (எதிரில் உள்ளவர்களுக்கு அவைகளில் பரிச்சயமோ ஈடுபாடோ இல்லாவிட்டாலும் கூட!) பேசக்கூடியவர் அவர்.

மெலிந்த உருவம் சராசரிக்கும், அதிகமான உயரம், சற்று நீண்ட கழுத்து, முன் வழுக்கை, ("மற்றவர்களுக்கு இரண்டு கைகள். எனக்கு நான்கு கைகள்.

வலது கை, இடது கை, நம்பிக்கை, வழுக்கை!") முழுக்கை சட்டை, வேட்டி, பார்வையில் மறதியா சிந்தனையா என்று தெரிந்து கொள்ள முடியாத பாவம், எழுதுவதில் ஆர்வம். இது தான் அவர்!

"ஒரு முட்டாள் செய்ததை இன்னொரு முட்டாள் செய்ய முடியும் என்பார்கள். ஆகவே நாவல், கதை, கட்டுரை, துணுக்கு, மொழிபெயர்ப்பு என்று எல்லாவற்றிலும் கை வைக்கிறேன். எல்லாவற்றிலும் முதல் மார்க் வாங்காவிட்டாலும் பெயில் ஆனதில்லை." இது அவரே தனக்குத் தரும் சர்டிபிகேட்!

அவரை சிறிது பேச விடுவோமா? நாம் அனுமதி தராவிட்டாலும் அவர் பேச ஆரம்பித்துவிடுவார்.

"ஒரு தமிழ் பத்திரிகையில் இரண்டு இளம் பெண்கள் படத்தைப் போட்டு ஜோக் எழுதும்படி போட்டி வெச்சாங்க. பரிசு வாங்கின ஜோக் என்ன தெரியுமா?

"என்னை மூன்று பேர் கலியாணம் பண்ணிக்கொள்ளச் சொல்கிறாங்கடி."

"யார்டி? யார்டி?.... சொல்லுடி!"

"என் அப்பா, அம்மா, பாட்டி!"

"இந்த ஜோக் 1942'ல் வெளியான பென்னட் செர்ஃப் புத்தகத்தில் 147'ம் பக்கத்தில் அப்படியே இருக்கிறது! ஹூம்..நம்ம பத்திரிகைகள் ரொம்பவும் ரொம்பவும் முன்னேறணும். ஒரு சமயம் சென்னையில் பயங்கர வெள்ளம். மவுண்ட் ரோடிலிருந்து வருகிற ஒரு தினசரி எழுதுகிறது: 'பெரம்பூரில் இரண்டு நாளாகத் தெருவில் எட்டு அடி வெள்ளமாம்' என்று. என்னய்யா? வெள்ளமாம் என்றா எழுதுவது? 50 பைசா தூரத்தில் உள்ள பெரம்பூருக்கு ரிபோர்ட்டரை அனுப்பி நேரே பார்த்து விட்டு வரச் சொல்றது.

"மெட்ராஸ் சிட்டிதான், தமிழ் நாடு என்கிற மாதிரி பத்திரிகை நடத்தறாங்க. பாருங்களேன் உடையப்பா என்கிறவர் எத்தனையோ வருஷமா டிராமா போடுகிறார். அவர் சென்னைக்கு வந்து இந்த பத்திரிகை ஆபீஸ்களின் தோட்டத்துக்கு அருகில் நாடகம் போட்ட பிறகு தான் 'அடேயப்பா அபாரமான நடிகர்' என்று எழுதுகிறார்கள்.

'டைம்' பத்திரிகை எங்கேயோ எடிட் பண்ணி எங்கேயோ அச்சாகிறது. உலகம் மொத்தமும் அதில் இடம் பெறுகிறது. நியூயார்க் தான் உலகம் என்றா நினைக்கிறார்கள்?"

பத்திரிகையிலிருந்து புத்தக உலகிற்கு தாவினால் எட்வார்ட் ஸ்ட்ரீடர், ஜாய்ஸ் போர்டர், ஜியார்ஜ் மைக்ஸ், ரிச்சர்ட் ஆர்மர், ஹென்னி யங்மென், ஆலன்கிங், ஜாக் பார், பியர் டானினாஸ், என்று ஏதேதோ எழுத்தாளர்கள் பெயரைச் சொல்லி ஆகா, ஓகோ என்று பாராட்டுவார். (சில சமயம் நம் தமிழ்ப் பத்திரிகைகளையும் புத்தகங்களையும் போனால் போகிறது என்று பாராட்டவும் செய்வார்!)

'நியூயார்க் டாக்ஸி டிரைவர், தூக்குமேடைப் பணியாளர் என்று பலதரப்பட்டவர்கள் தங்கள் அனுபவங்களை அற்புதமான புத்தகங்களாக எழுது கிறார்கள். 'தூக்கு மரத்தின் நிழலில்' மாதிரி எத்தனை புத்தகங்கள் வெளியாகியிருக்கின்றன? நம் வாசகர்கள் பேரிலும் குற்றம் உண்டு. மூன்று ரூபாய் கொடுத்து சினிமாப் பத்திரிகை வாங்குவார்கள். ஆனால் புத்தகம் வாங்குவதற்கு —அது ஒரே ஒரு ரூபாயாக இருந்தாலும்— மூக்கால் அழுவார்கள்......'

இப்படி பல விஷயங்களை, சினிமா, நாடகம் உட்பட சுவையாகப் பேசிக்கொண்டே இருப்பார். (சுவையாக என்பது அவருடைய அபிப்பிராயப்படி!) லைப்ரரிப் பித்தர் வேறு. உங்களுக்கு அவர் பேசும் சப்ஜெக்ட்டுகளில் ஈடுபாடு இல்லை என்றால் 'சரியான கேரக்டர்' என்று மனதில் நினைத்துக் கொள்வீர்கள்.

சரி, யார் இந்த 'சரியான கேரக்டர்'? வேறு யாருமல்ல, இந்தக் கட்டுரையை எழுதியுள்ள ஆசிரியர் தான்!

## கடுகு எழுதிய
# கேரக்டரோ கேரக்டர்!

முன் குறிப்பு : இப்புத்தகத்திற்கு முதலில் 'கேரக்டர்' என்று தான் தலைப்பு வைக்க நினைத்தேன். இப்போது ஊரெல்லாம் 'ஓ போடு' என்று உபதேசம் செய்கிறார்கள். ஆகவே நானும் ஒரு 'ஓ' போட்டு, 'கேரக்டரோ கேரக்டர்' என்று மாற்றிவிட்டேன்!

'கேரக்டரோ கேரக்டர்' என்னும் இப்பேரிலக்கியப் புத்தகத்தை வாங்குவதால் உங்களுக்குப் பலவித லாபங்கள் உண்டு. அவை என்னென்ன என்பதைக் கண்டுபிடிக்க நியமிக்கப்பட்டுள்ள குழு இப்போது கீழ்ப்பாக்கத்தில் சிகிச்சை பெற்று வருவதால் லாபங்களைப் பட்டியலிட முடியவில்லை!

**இப்புத்தகத்தைப் படிக்காதவர்கள் பாராட்டுகிறார்கள்!**

**இப்புத்தகம் அபாரம், போங்க!**
எப்பவும் 200 மில்லி போட்ட மாதிரி ஆடிக்கொண்டே இருந்த என் வீட்டு மேஜையின் ஒரு காலின் கீழ் புத்தகத்தை வைத்தேன். சொன்னால் நம்பமாட்டீர்கள்! மேஜை ஆடுவது நின்றுவிட்டது. முப்பது வருடமாக ஆட்டிக் கொண்டிருந்த பிரச்சினைக்கு தீர்வு ஏற்பட்டது. இன்னும் இது மாதிரி பல உபயோகமான புத்தகங்களை எழுதுங்கள் - ராமன், தெனாலி.

**எலியை ஒழித்த புத்தகமே, நீ, வாழ்க!**
எங்கள் வீட்டில் பல பொருட்களைக் கடித்து நாசம் செய்து வந்த எலியை ஒழிக்க முடியாமல் தவித்த போது உங்கள் புத்தகம் கிடைத்தது. அதைக் கடித்த எலி, பைண்ட் செய்த போது உபயோகிக்கப்பட்ட பசையில் இருந்த மயில்துத்த விஷத்தால் இறந்து விட்டது. எங்கள் வீட்டுப் பொருட்கள் இனி நாசமடையாது. இத்தகைய மனிதநேய புத்தகங்களை வரவேற்கிறேன்! - பூபதி, ஆல்தோட்டம்.




நந்தினி பதிப்பகம்
சென்னை 600 020